# செல்வன் செந்தமிழ் வாசகம்

## ஆறும் வகுப்பு




ஆசிரியர் :
ரம்போலோ மாஸ்கரேனஸ், எம்.ஏ.,
தமிழ்த் துறைத் தலைவர், செயின்ட் ஜோசப் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி.

பதிப்பாசிரியர் :
மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை




ஜெகசெல்வன் கம்பெனி

| | |
|---|---|
| ராமவர்மபுரம் | தெப்பக்குளம் |
| நாகர்கோவில் | திருச்சிராப்பள்ளி |

பதிப்புரிமை] 1962 [விலை ரூ. 1·40

முதற் பதிப்பு—நவம்பர், 1960
இரண்டாம் பதிப்பு—ஏப்பிரல், 1961
மூன்றும் பதிப்பு—மார்ச்சு, 1962






*Trade Mark*:
'SELVAN'

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Supplement to Part II-Section 3 of the
Fort St. George Gazette dated 10-5-1961, Page 8]



[Paper used: 24 lbs. White Printing]

Kabeer Printing Works, Madras (4632)

றைப் போக்கும் மருந்தாய் உதவுபவை. மூடித்-திறக்கும் இலைகள் இயற்கை விசித்திரச் செயல்-களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

### சொற்பொருள் விளக்கம் :

தொட்டறிதல் - ஊறு என்னும் சுவை, வீனஸ் பிளை டிராப் (Venus Fly-trap), கூரிய - கூர்மையான, கோத்தல் - ஒன்ருே டொன்றைப் பொருந்துதல், நஞ்சு - விடம், சன் டியூ - (Sundew), நெபந்தீஸ் - (Nepenthes), சுரந்து - வெளிப் பட்டு, செரித்தல் - சீரணித்தல், பிணி - நோய்.

1. பிரித்தெழுது :—
அவ்விலை, வெவ்வேறு, நச்சுத்திரவம், எவ்விதம்.

2. சொற்களின் பொருள் வேறுபாட்டை எழுது :—
கூரிய, கூறிய; மரம், மறம்; ஊன், ஊண்; தனி, தணி.

3. எதிர்ச்சொல் எழுது :—
நீண்ட, நாற்றம், விரியும், இயற்கை.

### வினக்கள் :

1. உயிர் உண்ணும் செடிகள் யாவை?

2. 'வீனஸ் பிளை டிராப்' என்னும் செடியின் வியத்தற்-குரிய செயல் யாது?

3. 'நெபந்தீஸ்' என்னும் செடியின் அமைப்பை விவரி.

4. செடிகள் அண்மையில் வரும் உயிர்களை எவ்வாறு அகப்படுத்திக்கொள்கின்றன?

5. 'வண்டு கடி இலை'யின் பயன் யாது?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

கரோலின நாட்டிலுள்ள உயிர் உண்ணும் செடிகளின் செயலை நீ நேரில் கண்டாற்போல் ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம் :

### காலம் :

முன்னோர் போற்றினர்.

செடிகள் உண்கின்றன.

அரசன் வருவான்.

இவற்றுள், 'போற்றினர்' என்னும் வினைச்சொல், தொழில் இறந்த காலத்தில் நடைபெற்றதைத் தெரிவிக்கிறது. இது இறந்த காலம்.

'உண்கின்றன' என்னும் வினைச்சொல், தொழில் எதிர் காலத்தில் நடைபெறுகிறதைத் தெரிவிக்கிறது. இது நிகழ் காலம்.

'வருவான்' என்னும் வினைச்சொல், தொழில் நிகழ்காலத்தில் நடைப்பெறுகிறதைத் தெரிவிக்கிறது. இது நிகழ்காலம்.

'வருவான்' என்னும் வினைச்சொல், தொழில் எதிர்காலத்தில் நடைபெறப் போவதைத் தெரிவிக்கிறது. இது எதிர் காலம்.

காலம் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என மூன்றுகும்.

# 15. ஆராய்ந்து செய்தல்

1. மிதிலை நகரில் குபேர தத்தன் என்னும் வணிகன் தன் மனைவி கண்ணகி என்பாளுடன் வாழ்ந்து வந்தான். அவர்களுக்கு உத்தமன் என்னும் புதல்வனிருந்தான். அவனுக்கு ஐந்து வயதானபொழுது, குபேரதத்தன் பொருள் சம்பாதிப்பதற்காகப் பிற நாடு சென்ருன். சென்றவன் பல ஆண்டுகள் பிற நாடுகளிற்றங்கி வாணிகம் செய்து பெரும்பொருள் ஈட்டினன்; பின்னர்க் கப்பலேறித் தன்னுடு திரும்பினன்; நள்ளிரவில் தன் வீட்டையடைந்தான்; யாவரும் துயிலில் ஆழ்ந்திருந்தனர். பலகணி வழியாக வீட்டினுள் பார்த்தான். அங்குப் படுக்கையறையினுள் தன் மனைவியுடன் ஓர் இளைஞன் படுத்துத் துயில்வதைக் கண்டான். தன் மனைவியின்மீது சந்தேகமுற்று, தன் வாளைக் கையிற்ருங்கி, வீட்டினுள் குதித்தான். நேரே படுக்கையறைக்குச் சென்ருன். அங்கு வாயிலின் முன் ஓர் பலகையில், 'எச்செயலையும் ஆராய்ந்து செய்க! ஆராய்ந்து செய்பவர் பெருஞ் செல்வம் பெற்றுச் சிறப்புற வாழ்வர்; அல்லாதார் பெருந்துன்பத்துக்காளாகி அழிவர்!' என்ற சொற்கள் எழுதப்பட்டிருத்தலைக்கண்டான். உடனே, தன் வாளை உறையிலிட்டுக் கப்பலுக்குத் திரும்பினுன்.

2. மறுநாட்காலையில், குபேர தத்தன் தன் வீட்டுக்குச் சென்ருன். அவன் மனைவி அவனை வணங்கினுள். தன் புதல்வன் உத்தமனை அழைத்துத் தந்தையை வணங்கும்படி கூறினுள். உத்த-

மன் அருகில் வந்ததும், வணிகன் அவனே தன் மனைவியுடன் கட்டிலில் துயின்றவன் என்பதை அறிந்தான்; தான் செய்ய எண்ணியதை நினைத்து வருந்தினான்; அப்பலகையில் அந்நீதியை எழு- தினவரை வாயார வாழ்த்தினான். தன் மகனை விளித்து, "மைந்தா, இப்பலகையில் எழுதப்பட்- டுள்ள நீதியால் நீ உயிர் பிழைத்தாய்!" என்று முன்னாள் நடந்ததைக் கூறினான். அதனைக் கேட்ட மைந்தன், 'இதனை ஆயிரம் பொன் கொடுத்து வாங்கினேன்; என் உயிர் தந்த அறி- வுரையன்றோ இது!' என்று கூறி, அதனை அடைந்த வரலாற்றைக் கூறினான்:

3. "பட்டர் புரத்தில் மணிவாசகன் என்ற அந்தணன் இருந்தான். அவன் கலைகள் யாவும் கற்றுப் பலராலும் புகழப்பட்டான். ஆனால், அவன் தந்தையார் அவனைப் பிறர் முன்னிலையில் 'படித்தறியா மூடன்' என இழித்தே பேசிவந்த- னர். தந்தையரின் சொற்கள் மகன் மனத்தை வாள் போல அறுத்தன. முடிவில் அவன் தன் தந்தையாரைக் கொன்று பழிவாங்கவேண்டுமென எண்ணினான். அவன் தன் தாயிடம் சென்று, "அம்மா, நான் வேற்றூர் செல்கின்றேன்; இங்- கிருக்கும் வரை என் தந்தையார் என்னை இகழ்ந்து பேசிப் பலர் முன்னிலையிலும் என்னைத் தலைகுனி- யச் செய்து வருவார். ஆதலின், விடைகொடு," என்றான். அவன் தாயும் அவனுக்கு விடை கொடுத்தனுப்பினாள்.

4. "தாயை நீங்கிச் சென்ற மணிவாசகன் அவளறியாமல் வீடு திரும்பினான். ஒரு பெருங்- கல்லை எடுத்துக்கொண்டு தன் தந்தையார் துயில்-

கொள்ளும் அறையிலுள்ள பரண்மேல் பதுங்கி-யிருந்தான். சிறிது நேரத்தில் அவன் தந்தையார் வந்து, 'மைந்தன் எங்கே?' என்ருர். அவன் தாய், 'அவன் வேற்றுநாடு சென்றுவிட்டான். அருங்கலை கற்றவனை அடிக்கடி இழித்துக் கூறினால், அவன் மனம் நொந்து, நம்மை நீங்கிச் செல்லமாட்டானு?' என்று கண்ணீருடன் கூறினுள். அதனைக் கேட்ட பார்ப்பனன் கண்களினின்றும் நீர் பெருக, 'நான் நம் மைந்தனை இழித்துக் கூறுவேனு? அவனைப் புகழ்ந்து கூறின், கல்வியில் ஊக்கங் காட்டமாட்டான் என்று அவ்வாறு செய்தேன். இஃது உனக்குக்கூடத் தெரியவில்லையா?' என்-ருன். தாய் தந்தையரின் உரையாடலைக் கேட்ட மகன், தன் தவற்றை உணர்ந்தான்; 'அந்தோ! நாம் தீவினை புரிய நினைந்தோமே!' என்று பரணை விட்டுக் கீழே இறங்கி, தந்தையாருடைய அடிகளில் விழுந்தான். தந்தையார் தம் மகனைத் தழுவிக் கொண்டார். மணிவாசகன் தான் செய்ய எண்ணியதைக் கூறி, அதற்குத் தக்க தண்டனை யளிக்கும்படி தந்தையாரை வேண்டினன். தந்தை-யார் அவனைப்பார்த்து, 'நீ வேருென்றும் செய்ய-வேண்டா; நின் மாமியார் வீடு சென்று, சில நாட்-கள் தங்கியிரு' என்ருர்.

5. "மணிவாசகன் உடனே புறப்பட்டு, மாமியார் வீடு சென்ருன். மாமியார் வீட்டார் மகிழ்ச்சியுடன் அவனை வரவேற்றனர்; பாகு, பால், பருப்பு, நெய், தேன், பாயசம், பணியாரங்களோடு விருந்து அளித்தனர். சில நாட்களின் பின் மாமி-யார், மைத்துனர் முதலியோர் மணிவாசகனை வெறுக்கத் தொடங்கினர்; 'வீட்டில் சோம்பேறியா-

யிருந்துகொண்டிருந்தால், யார் சோறு போடு-வர்கள்?' என்று பேசத்தொடங்கினர். ஒரு நாள் அவன் மனைவியே அவனிடம் வந்து, 'வீட்டில் செலவுக்குப் பொருள் இல்லையே! நீங்கள் எங்குச் சென்றுவது பணம் சம்பாதித்து வாருங்கள்,' என்றாள். உடனே மணிவாசகன் ஒரு பலகையை எடுத்து அதில், 'எச்செயலையும் ஆராய்ந்து செய்க; ஆராய்ந்து செய்பவர் பெருஞ்செல்வம் பெற்றுச் சிறப்புற வாழ்வார்; அல்லாதார். பெருந் துன்பத்துக்கு ஆளாகி அழிவர்!' என்று எழுதி, அவளிடம் கொடுத்து, 'இதனை விற்று ஆயிரம் பொன் பெறுக' என்றான். அதனை அவள் தன் அண்ணன் கையிற்கொடுத்து, 'இதனை ஆயிரம் பொன்னுக்கு விற்று வருக,' என்றாள்.

6. "அவன் அதனை விற்பதற்குக் கடைத் தெருவுக்கு கொண்டு சென்றான். அதைக் கண்டவர்கள், 'இதுவா ஆயிரம் பொன் பெறும்! உனக்கு உன்மத்தம் பிடித்திருக்கிறதா?' என்று நகைத்த-னர். அவன் நமது வீட்டு வழியாய் வீடு திரும்பிச்-சென்றபோது, நான் அவனை அழைத்தேன். அவன் இப்பலகையைக் காண்பித்து, 'ஆயிரம் பொன்' என்றான்.. நான் வாசித்துப் பார்த்து ஆயிரம் பொன் கொடுத்தேன். அதனைப் படுக்கை-யறையின் முன் தொங்கவிட்டேன். ஆயிரம் பொன் கொடுத்துப் பெற்ற அறிவுரை என்னைக் காத்தது," என்றான்.

7. வணிகன் மகனைத் தழுவி, "நீ, நல்ல காரி-யம் செய்தாய்! 'அறிவுடையோர் சொல் ஆயிரம் பெறும்,' என்பது இதனால் மெய்யாயிற்று!" என்று கூறி, மனைவி மக்களுடன் இன்புற்று வாழ்ந்தான்.

### சொற்பொருள் விளக்கம் :

ஈட்டினுன் - சம்பாதித்தான், துயில் - தூக்கம், பலகணி - சன்னல், விளித்து - அழைத்து, நொந்து - வருந்தி, தவறு - பிழை, உன்மத்தம் - பைத்தியம்.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   கையிற்றுங்கி, வேறென்றும், சிறப்புற, துன்பத்துக் - காளாகி.
2. எதிர்ச்சொல் எழுது :—
   தீவினை, இளைஞன், சோம்பேறி, மெய்.
3. சொற்களின் பொருள் வேறுபாட்டை எழுது :—
   அழி, அளி ; விளித்து, விழித்து ; உரை, உறை.

### வினுக்கள் :

1. வணிகன் செய்ய எண்ணியது யாது ?
2. மணிவாசகன் செய்ய நினைத்த தீவினை யாது ?
3. மணிவாசகன் தன் தவற்றையுணர்ந்தது எவ்வாறு ?
4. மணிவாசகனுக்குத் தந்தையாரிட்ட பணி யாது ?
5. மணிவாசகன் பொருள் சம்பாதித்த வழி எது ?
6. வணிகன் தன் மகனை ஏன் புகழ்ந்தான் ?

### கட்டுரையாக்கப் பயிற்சி

வணிகன் தான் செய்ய நினைத்ததையும், அதினின்றும் நீங்கியதையும் அவனே சொல்வது போல எழுது.

'மணிவாசகனும் மாமியார் வீடும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம்:

#### காலங்காட்டும் இடைநிலைகள்

இராமன் உண்டான்.
இராமன் உண்கிறுன்.
இராமன் உண்பான்.

இவை முறையே இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் காட்டும் வினைச்சொற்கள். இவற்றைப் பிரித்து எழுதினுல்,

உண் + ட் + ஆன் எனவும்
உண் + கிறு + ஆன் எனவும்
உண் + ப் + ஆன் எனவும்
பிரிந்து நிற்கும்.

இவற்றுள், உண், ஆன் என்பன மூன்றிலும் வந்துள்ளன. இடையில் நிற்பனவே வேறுபட்டுக் காலங்காட்டின.

ஆதலின், வினைச்சொற்களில் இடைநிலைகளே காலங்காட்டும்.

(அ) இறந்த கால இடைநிலைகள் :

| | இடைநிலை |
|---|---|
| செய்தான் — செய் + த் + ஆன் — | த் |
| உண்டான் — உண் + ட் + ஆன் — | ட் |
| தின்றான் — தின் + ற் + ஆன் — | ற் |
| ஓடினான் — ஓடு + இன் + ஆன் — | இன் |

த், ட், ற், இன் என்பன இறந்த காலம் காட்டும் இடைநிலைகளாம்.

(ஆ) நிகழ்கால இடைநிலைகள் :

| | இடைநிலை |
|---|---|
| ஓடுகிறான் — ஓடு + கிறு + ஆன் — | கிறு |
| ஓடுகின்றான் — ஓடு + கின்று + ஆன் — | கின்று |

கிறு, கின்று என்பன நிகழ்காலம் காட்டும் இடை நிலைகளாம்.

(இ) எதிர்கால இடைநிலைகள் :

| | இடைநிலை |
|---|---|
| உண்பான் — உண் + ப் + ஆன் — | ப் |
| செய்வான் — செய் + வ் + ஆன் — | வ் |

ப், வ் என்பன எதிர் காலம் காட்டும் இடைநிலைகளாம்.

# 16. தங்கைக்கு எழுதிய கடிதம்

டாக்டர் மு. வரதராசனார் எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.

[இவ்வாசிரியர் சென்னைப் பச்சையப்பர் கல்லூரிப் பேராசிரியர் ; சிறந்த எழுத்தாளர் ; பல நூல்களை எழுதியுள்ளார்.]

அன்புள்ள தங்கை,

உன் புதிய வாழ்க்கை நல்லபடியே நடந்து வருகிறது என்று அம்மாவும் அப்பாவும் வந்து சொன்னது கேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்தேன். எனக்கு உன்னைப்பற்றி நம்பிக்கை உண்டு. இளமையிலிருந்தே நீ அறிவும் திறமையும் அன்பும் பண்பும் உள்ள பெண்ணாக விளங்கியதைக் கண்டிருக்கிறேன் அல்லவா? அவற்றைக் கண்டிருப்பதால், உன் எதிர்காலம் நல்லபடிவிளங்கும் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. ஆயினும், சில்லறைப் பிடிவாதமும் குறும்புங்கொண்டு நீவீட்டில்தொல்லை கொடுத்த நாட்களையும் நான் மறக்கவில்லை. அப்போதெல்லாம் அம்மா உன்னைக் கடிந்து சொன்ன சொற்களும் வைது உரைத்த உரைகளும் நான் கேட்டிருக்கிறேன் அல்லவா? அவற்றை உரைத்த அன்னையின் வாயால் இன்று உன் இல்வாழ்க்கையைப் பற்றிப் புகழுரைகளும் கேட்கின்றேன் என்றால், நான் பெருமை கொள்ளாதிருக்க முடியுமா? அழகிலும் திறமையிலும் பெயர்பெற்ற என் தங்கை, இன்று தன் புதிய வாழ்க்கையில் அன்பும் பணிவும் அணிகலன்களாகப் பூண்டு விளங்குகின்றாள் என்று கேள்வியுற்று என் உள்ளம் பெருமிதம் கொண்டது! வாழ்க உன் நற்பண்புகள்!

இவ்வாறு உவகை நிறைந்த உள்ளத்தோடு

தான் பின்வரும் அறிவுரைகளை எழுதுகின்றேன் : அறிவுரைகளை எழுதுவதைக் கண்டதும், உன்னிடத்தில் ஏதோ குறை கண்டு எழுதினேன் என்றோ, கேள்விப்பட்டு எழுதினேன் என்றோ எண்ணிவிட வேண்டா. குறை இருந்தால்தான் அறிவுரை கூறவேண்டும் என்பதில்லை. குறை நேராமலிருக்க வேண்டும் என்றும் அறிவுரை கூற வேண்டும் அல்லவா? அந்த வகையிலேதான் என் கடமையைச் செய்ய முன் வருகிறேன். எத்தனையோ படிக்கின்றாய்; கேட்கின்றாய்; இதனையும் படி; கேட்டுக்கொள்; ஓய்வு இருக்கும்போது எண்ணிப்பார். அமைதியான உன் வாழ்க்கையை மட்டும் எண்ணுவது போதாது. உன் போல இந்த நாட்டில் பிறந்து எத்தனையோ இடர்களுக்கும் சிக்கல்களுக்கும் ஆளாகியுள்ள மற்றப் பெண்களின் வாழ்க்கையையும் எண்ணிப் பார். ஒரு செம்மறியாடு முன்னே சென்று இடர்ப்பட்டால், பின்னே வரும் ஆடுகள் அதனைக் கண்டு ஒன்றும் திருந்துவதில்லை; பயனடைவதில்லை. முன்னே சென்றது விழுந்த பள்ளத்திலேயே எல்லாம் சென்று விழுமாம். மனிதராகிய நாம் ஏன் அப்படி விழவேண்டும்? ஆகையால், மற்றவர்களின் வாழ்க்கையில் உள்ள குறைகளையும் அவற்றின் காரணங்களையும் எண்ணிப் பார்ப்பது, நம்மை நாம் காத்துக்கொள்வதற்கு மிகவும் பயன்படும். உண்மையாக ஆராய்ந்தால், இப்படி நேரே வாழ்க்கையைக் கற்பதுதான் உயர்ந்த கல்வி. இவ்வாறு வாழ்க்கையை நேரே கற்பதற்குப் பயன்படும் காரணத்தாலேதான், "பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படி; உயர்ந்த புலவர்களின் காவியங்களைப்-

படி; சிறந்த உணர்வினர் எழுதிய கதைகளைப்-படி,'' என்று உனக்கு அடிக்கடி சொல்லியிருக்-கிறேன். இனிமேல் அவற்றை விடாமல் படி என்று வற்புறுத்துகிறேன். அதனுல் விளையும் நன்மை-கள் எவ்வளவோ உண்டு. நம்மை அறியாமலே நம் மனம் அந்தப் பெரியோர்கள் நடந்த நெறியில் ஈடுபட்டு நடக்கும். நம்மை அறியாமலே நம் வாழ்க்கை செம்மையாக அமைந்துவிடும்.

இளங்கோ எழுதிய கண்ணகியின் காவியத்-தைப் படி; பல முறை படி; என்றும் படி; குயூரி அம்மையாரின் வரலாற்றையும், கஸ்தூரிபா காந்தியின் வரலாற்றையும் திரும்பத் திரும்பப்-படி; இவை போன்றவற்றை மேன்மேலும் படித்-துக்கொண்டிரு.

நல்லவர் நட்பு வளர்பிறை போல வளரும் என்கின்ருர் திருவள்ளுவர். உங்கள் அன்பான இல்வாழ்க்கை வளர்பிறை போல வளர வேண்டும் என்று விரும்புகின்றேன். அது என் வாழ்த்துதலி-லில்லை; நீங்கள் வாழும் முறையில் இருக்கிறது.

நட்புக்காகப் பெரியோர் சொன்ன அத்தனை-யும் கணவன் மனைவி வாழ்க்கைக்கும் பொருந்தும். நாலடியாரில் ஒரு பாட்டுப் படித்திருக்கிறேன். அதில், தக்காரின் நட்பு ஒரு கரும்பைக் குருத்தி-லிருந்து அடிவரையில் தின்ருற்போன்றது என்று கூறப்பட்டிருக்கிறது; அதாவது, வரவர இனிமை மிகுந்துகொண்டு போகுமாம்; ஆனுல் தகாதவரின் நட்பு, நேர் மாருக, இனிமை குறைந்துகொண்டு போகுமாம்; அடிக்கரும்பை முதலில் கடித்துத் தின்று குருத்து வரையில் தின்பது போன்றதாம். காரணம் என்ன? அவரவர் பண்புதான். அது

போல நீங்கள் நல்ல பண்புடையவர்களாய் விளங்கினால், கோலெடுத்து ஊன்றும் கிழவனும் கிழவியுமாக முதுமையுற்ற காலத்திலும் உங்கள் அன்பின் சிறப்பு வளர்ந்துகொண்டே போகும். ஆகவே, நல்ல பண்பை வளர்ப்பதுதான்—வளர்ந்துள்ள நல்ல பண்பைக் காப்பதுதான்—உங்கள் கடமை என்பதை உணர்ந்துகொள்.

புதிதாகப் பழகும்போது பெரும்பாலோர் நன்ருகப் பழக முடியும். அதில் ஒன்றும் சிறப்பு இல்லை; திறமை இல்லை. புதிய மாணவர் ஒழுங்காக நடந்துகொள்வர். புதிய ஆசிரியர் பாடு பட்டுக் கற்றுக் கொடுப்பார். புதிய வியாபாரி நல்ல சரக்கு விற்பார். புதிய வேலைக்காரி நன்ருக உழைப்பாள். புதிய பாற்காரன் நல்ல பால் தருவான். புதிய நட்பும் இனிமையாக விளங்கும். அதில் ஒரு சிறப்பும் இல்லை. இந்தப் புதுமையை எள்ளி நகையாடுவது போல ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருப்பது உனக்கு நன்கு தெரியும். 'புதிய துடைப்பம் நன்ருகப் பெருக்கும்,' என்னும் அந்தப் பழமொழி வேடிக்கையாக இருந்தாலும், கருத்துடையதுதான். அதற்கு மாருக, எவ்வளவு பழமை ஆனபோதிலும் சிறப்புக் குன்ருமல் ஒளிவிடும் வாழ்க்கைதான் நல்ல வாழ்க்கை என்று சொல்வேன். இக்காலத்துப் பலருடைய வாழ்க்கை பொன் முலாம் பூசிய பொருள்போலத் தொடக்கத்தில் மட்டுமே நல்ல ஒளி வீசுகின்றது. பழமைப்பட்டுத் தேயத்தேய, ஒளி இழந்து மங்குகின்றது. உண்மையான பொன்னல் செய்யப்பட்ட பொருள் ஒரு நாளும் அப்படி ஆகாது அல்லவா? பழகப் பழக, தேயத்தேய, அது குன்ரு ஒளி வீசும்

அல்லவா? அதுபோல வாழும் வாழ்க்கையே நல்லவர்களின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

பழமைப்பட்ட பிறகும் விளங்குவதுதான் சிறந்த நட்பு என்னும் கருத்தோடு திருவள்ளுவர் நட்பைப் பற்றியும் நட்பாராய்தலைப் பற்றியும் பத்துப் பத்துக் குறளால் விளக்கிய பிறகு, 'பழமை' என்று தனியே ஒரு பகுதி கூறுவதை நீ போற்றிக் கவனிக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் **தீ நட்பு, கூடா நட்பு** என்பவைகளைப்பற்றி அவர் விளக்குகின்றார். பழமைப்பட்ட பிறகும் மாசின்றி விளங்கும் நட்பை அவர் 'அன்பின் வழி வந்த கேண்மை' என்ற அழகான தொடரால் குறிப்பிடுகின்றார். அந்தத் தொடரை நினைக்கும் போதும், சொல்லும் போதும், கேட்கும் போதும் திருவள்ளுவரின் தமிழ்—அனுபவ அறிவிலிருந்து மலர்ந்த அந்த அறிவுரைத் தமிழ்—என் நெஞ்சில் இனிக்கின்றது!

உன் கணவரைப்பற்றி எனக்குப் போதிய அளவு தெரியாது. உன்னைப்பற்றி நன்றாகத் தெரியும். ஆகையால், உனக்குத்தான் அறிவுரை சொல்ல என்னால் முடியும். என் அறிவுரை வாழ்த்துரை இரண்டும் ஒன்றுதான். உங்கள் வாழ்க்கை 'அன்பின் வழிவந்த கேண்மை'யாக விளங்குவதாக!

அன்புள்ள அண்ணன்,
வளவன்.



## சொற்பொருள் விளக்கம் :

பணிவு - தாழ்மை, தொல்லை - துன்பம், உவகை - மகிழ்ச்சி, இடர் - துன்பம், தக்கார் - தகுதியுடைய பெரியோர் எள்ளி - இகழ்ந்து, குன்றுமல் - குறையாமல், கூடாநட்பு - தீய வர் நட்பு, கேண்மை - நட்பு.

## பயிற்சி :

1. பிரித்தெழுது :—
புகழுரை, நாலடியார், நட்பாராய்தல், மாசின்றி.
2. எதிர்ச்சொல் எழுது :—
நம்பிக்கை, தக்கார், பணிவு, வைது.
3. தேயத்தேய, வளர்பிறை போல, வரவர, பழகப் பழக—இச்சொற்றொடர்களைக்கொண்டு வாக்கியங்கள் எழுது
4. கோடிட்ட இடங்களை நிரப்பு :—
(அ) நேரே —— கற்பதுதான் —— கல்வி.
(ஆ) தக்காரின் —— ஒரு கரும்பைக் —— அடிவரையில் —— போன்றது.
(இ) புதிய —— நன்ருகப் ——.

## விஞக்கள் :

1. வளவன் பெருமை கொள்ளக் காரணம் என்ன ?
2. செம்மறியாட்டின் செயலிலிருந்து எதைக் கற்றுக் கொள்ள வேண்டா ?
3. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படிப்ப தனுல் அடையும் நன்மைகள் யாவை ?
4. பெண்கள் எவ்வெவருடைய வரலாற்றைப் படிக்க வேண்டும் ?
5. நல்ல பண்பிருந்தால் இல்வாழ்க்கை எவ்வாறு சிறக்கும் ?
6. ‘புதுமையில் திறமை இல்லை’—விளக்கு.
7. பழமைப்பட்ட நட்பை வள்ளுவர் எச்சொற்றொடரால் குறிப்பிடுகின்ருர் ?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'பெண்கள் இல்வாழ்க்கை நடத்துங்கால் மனத்திற் கொள்ளவேண்டுவன', 'நட்பும் இல்வாழ்க்கையும்'—என்னும் தலைப்புக்களைக்கொண்ட கட்டுரைகள் எழுது.

### இலக்கணம் :

#### வினைமுற்று :

ஓடினான் — இதுவினைமுற்று.

ஓடினான் என்னும் வினைமுற்றின் முன், 'யார்' என்னும் வினாப்பெயரைச் சேர்த்து, 'யார் ஓடினான்', என வினவினால், 'அவன்' என்னும் விடை வரும். அவன் என்பது படர்க்கை, ஆண்பால், ஒருமைப் பெயர் ஆதலின், வினைமுற்றுச் செய்தவன் இன்னானெனக் காட்டும்.

ஓடினான் என்னும் வினைமுற்று 'ஓடுதல் தொழிலைச் செய்தான்' எனத் தொழிலையும் காட்டுகின்றது.

ஓடினான் என்னும் வினைமுற்று, ஓடுதலாகிய தொழில் இறந்த காலத்தில் நடந்தது என்பதையும் தெரிவிக்கின்றது.

ஆதலின், வினைமுற்று என்பது, செய்பவன், தொழில், காலம் என்பவற்றைக் காட்டி, முற்றுப்பெற்று நிற்கும் வினைச் சொல்லாகும்.

# 17. வள்ளல் பேகன்–I

## (நாடகம்)

**திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்**

[இவ்வாசிரியர் கரந்தைச் தமிழ்ச் சங்கத்தில் பணியாற்று பவர்; பள்ளியாசிரியர்; சங்க நூற்கதைகளை நாடகமாக எழுத வல்லவர்; இக்காட்சி 'சங்ககால வள்ளல்கள்' என்ற நாடக நூலிலிருந்து எடுக்கப்பட்டது.]

உறுப்பினர்: கண்ணகி, தேவி, நங்கை, குறத்தி, கபிலர், அரசில் கிழார்.

காலம்: முற்பகல்.

இடம்; பொதினி மலைச்சாரல்.

[காட்டிலிருந்த கண்ணகியிடம் குறத்தி தோன்றிக் குறி கூறிச் சென்றதும், புலவர் பெருமக்கள் ஆண்டுச்சென்று தேறுதல் மொழி புகன்று, பேகனிடம் அழைத்துச் செல்லல்.]

தேவி: அம்மா, கண்ணகி, உங்கள் காதலர் உங்கள் மீது கொண்ட அன்பை அகற்றுமாறு சூழ்ந்தவர் யாரோ! அம்மையீர், உங்களைக் காணுந்தோறும் கண்டெனக் காமுற்றவர் இன்று வேம்பென உங்களை வெறுத்து நோக்கச் சூழ்ந்தவர் எவரோ? ஆ! கொடுமை; கொடுமை! அன்னவர் சூழுரை நஞ்சினும் கொடியது! மலையினும் பெரிது!

கண்ணகி: தேவி, இதற்கு நாம் என்ன செய்ய வல்லோம்! மிகுந்த பசுக்கள் கூடியிருப்பினும், ஒரு கன்று அக்கூட்டத்தில் உள்ள தன் தாயையே நாடிச் செல்வதை நீ காணவில்லையா? சிறந்த வாய்ப்புக்களைப் பெற்றிருந்தாலும், ஒருவர் செய்த ஊழ்வினை அவரையே தொடர்ந்துவந்து

பற்றும் தன்மைத்தாகும். ஆதலால், நாம் பிறரை நோவதால் ஆம் பயன் என்ன!

**நங்கை :** அம்மையீர், நீங்கள் கூறுவது உண்மையே. நம்மால் ஆவது என்ன இருக்கிறது? எல்லாம் இறைவன் செயல்—இறைவ, எம் தலைவியின் துயரைக் களைவாய்.

**குறத்தி :** (மறைவில்) கூடை முறம் கட்டலையா? அம்மே! கூடை!

**தேவி :** அம்மா, ஏதோ கூக்குரல் கேட்கின்றதே!

**குறத்தி :** (மறைவில்) பச்சை குத்தலையோ! அம்மே! பச்சை?

**நங்கை :** அம்மா, கண்ணகி, குறத்தியின் குரல் கேட்கின்றது. நம் நகர்ப்புறம் நாலைந்து நாட்களாக ஒரு குறத்தி-பாண்டி நாட்டுக் குறத்தியாம்—நன்ருகக் குறி சொல்லுகிருளாம். இங்கே கூவிக்கொண்டு வருபவள் அவளாகத்தானிருக்க வேண்டும். அவளை இங்கு அழைத்து வரலாமா?

**கண்ணகி :** நங்காய், என்ன, நீயும் அறிவில்லாதவள் போலப் பேசுகின்றனையே! குறியாவது, கோடங்கியாவது? என்னவோ அவைகளில் எல்லாம் எனக்கு மனப்பிடித்தம் இல்லை. வேண்டுமானல், உன் விருப்பப்படி பொழுது போக்கிக்கொள்.

**குறத்தி :** குறிகள் கேட்கலையா! அம்மே! குறி! (வெளி வரல்).

**நங்கை :** ஏ குறத்தி, இங்கே வா.

**குறத்தி :** அம்மா, இதோ வந்துவிட்டேன்.

நங்கை : ஏடி, நீ யார்? எந்த ஊர்? என்ன பேர்?

குறத்தி : அம்மா, நான் தெற்கே மிக்கதூரம். தென்பாண்டி நாடு, பொதிய மலைக்குறத்தி; கூடைமுறங் கட்டுவேன்; குறிகள் சொல்லுவேன்; ஒண்டாத பெண்களும் பின் ஓடி வரும் மை தருவேன். (அவையை நோக்கி) உங்களில் யாருக்காவது கொஞ்சம் வேண்டுமா? அண்டாத ஆண்களையும் ஆட்டிவைக்கும் மை தருவேன். (கண்ணகியை நோக்கி) ஏனம்மா, உங்களுக்குக் கொஞ்சம் தரலாமா? என் பாட்டி எயினி என்றால்தான் உங்களுக்குத் தெரியுமே? அவள் பேத்தி குறி எயினி நான். (பாடுகிறாள்.)

'மந்தமா ருதம்வளரும் மலையெங்கள் மலையே!
வடகலைதென் கலைபயிலும் மலையெங்கள் மலையே!
கந்தவேள் விளையாடும் மலையெங்கள் மலையே!
கனகநவ மணிவிளையும் மலையெங்கள் மலையே!
இந்தமா நிலம்புரக்கும் செந்தமிழ்த்தாய் அம்மே!
இன்பமுறும் தென்பொதிய மலையெங்கள் மலையே!'

தேவி : ஏனம்மா பொதிய மலையின் பெயரைக் கேட்டிருக்கின்றோம்; நேரில் பார்த்ததில்லை. வடகலையும் தென்கலையும் பயிலும்மலை என்றாளே! வடமொழியும் தென்மொழியும் அங்கே படிப்பார்களோ?

கண்ணகி : தேவி, அப்படியன்று. வடமொழியும் நம் செந்தமிழை விரும்பிக் கற்கும் மலையென்பது பொருளாகும் போலும்!

தேவி : ஏ, குறத்தி, உங்கள் மலையின் பெருமையைக் கேட்கக் கேட்க இனிமையாயிருக்கிறது! அதன் பெருவளப்பங்களை எல்லாம் கூறுவாயாக.

அது காடடர்ந்த மலையாயிற்றே ! சிங்கம், புலி, கரடிகளெல்லாம் இருக்குமே! அங்கே நீங்கள் எல்லாம் எப்படிக் குடியிருக்கிறீர்கள் ?

குறத்தி : அம்மா! அது பெரிய முனிவர்கள் இருக்குமிடம். சிங்கம், புலிகள் எல்லாம் எவருக்-கும் ஒரு தீங்கும் செய்யா. (பாடுகிறாள்.)

" சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடும் ஒருபால் ;
சினப்புலியும் மடப்பிணையும் திளைத்திடுமங் கொருபால் ;
வெங்கரடி மரையினொடும் விளையாடும் ஒருபால் ;
விடவரவும் மடமயிலும் விருந்தயரும் ஒருபால் ;
அங்கண்மா நிலங்கவிக்கும் வெண்கவிகை நிழற்கீழ்
அம்பொன்முடி சூடுமெங்கள் அரியதமிழ்ச் செல்வி
செங்கமலப் பதம்பரவும் கும்பமுனி பயிலும்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கள்மலை யம்மே !"

தேவி : எயினி, உங்கள் மலையின் பெருமை எங்கள் மனத்தில் பெருவியப்பை உண்டாக்கி விட்டது! உங்கள் உணவு செயல் முதலிய-வற்றைக் கூறுவாயாக.

குறத்தி : அவ்வாறே கூறுகின்றேன் ; கேளுங்கள் : (பாடுகிறாள்.)

" கொழுங்கொடியின் விழுந்தவல்லிக்
கிழங்குகல்லி எடுப்போம் :
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
கொடியில்வைத்துத் தொடுப்போம் ;
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்
தேறலும்வாய் மடுப்போம் ;
பசுந்தழையும் மரவுரியும்
இசைந்திடவே உடுப்போம் ;
செழுந்தினையும் நறுந்தேனும்
விருந்தயரக் கொடுப்போம் ;
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம் ;

எழுந்துதமிழ்த் தாய்காலில்
விழுந்துவினை கெடுப்போம் ;
எங்கள்குறக் குடிக்கடுத்த
இயல்பிதுகாண் அம்மே ! ”

தேவி : எயினி, நன்று நன்று! இருக்கட்டும். குறி பார்க்கத் தெரியும் என்ருயே! நீ தக்கவர் எவருக்கேனும் குறி சொல்லியதுண்டா? குறி எப்படிச் சொல்லுவாய்? கைக்குறி பார்ப்பாயா, அன்றி முகக்குறி பார்ப்பாயா, அல்லது முறக்குறி பார்ப்பாயா?

குறத்தி : எல்லாக் குறியும் பார்ப்பேன். அம்மா. (பாடுகிருள்.)

“ முன்ஞெருநாள் தமிழன்னை
முகக்குறிபார்த் தவட்கு
முத்தமிழ்தேர் புலவர்களைப்
பெறுவைஎன்று சொன்னேன் ;
பின்ஞெருநாள் உமைபாகன்
பெயரினைக்கொள் பெரியான்
பிறந்துநினைக் கரந்தையிலே
புரந்திடுமென் றுரைத்தேன் ;
இன்னும்அவன் துணையாக
இசைந்துபணி புரிவோர்
இருமொழிதேர் கதிரேசன்
முதற்பலரென் றுரைத்தேன் ;
சொன்னகுறி எல்லாம்என்
சொற்படியே பலிக்கும் ;
தொகுத்துநீ நினைத்தகுறி
இனிச்சொலக்கேள் அம்மே ! ”

தேவி : நல்லது; எயினி, எங்கள் தலைவியின் முகத்தைப்பார்த்துக் குறி சொல்லு, பார்ப்போம்.

**குறத்தி:** அம்மா, இந்தக் குறத்திக்கு ஒரு பிடி சோறும் ஒரு சிறு துணியும் கொடுங்கள். இந்தத் தலைக்குச் சிறிது எண்ணெய் வாருங்கள்: (பாடுகிருள்.)

"நன்றெல்லாம் உடையதிரு நாச்சியரே! இந்த
நாயினுக்குப் பிடிசோறும் சிறுதுணியும் நல்காய்!
உன்றன்பேர் வாழ்வாக உறுகணவன் அம்மே!
உனைப்பிரிந்தே மதிமயங்கி உணர்வும்அழிந் திட்டான்;
குன்றினில்வாழ் இக்குறத்தி கொடுக்குமையின் திறம்பார்!
குறித்துமுகந் தனிலிடுவாய்; கொண்டகுறை தீரும்!
இன்றிந்தப் பொழுதிலவன் இங்குவரக் காண்பாய்!
எக்குறிதப் பினுந்தப்பா திக்குறிபார் அம்மே!"

**நங்கை:** ஏ குறத்தி, மிக நன்று! இதை ஏற்று மகிழ்வாய்!

**குறத்தி:** நீங்கள் நீடு வாழ்க! நான் போய் வருகிறேன். இன்னும் எப்பொழுதாவது என் உதவி வேண்டியிருந்தால் சொல்லி அனுப்புங்கள். உடனே வருகிறேன்.

கூடை முறங் கட்டலையா! அம்மே! கூடை!
பச்சை குத்தலையா! அம்மே! பச்சை?
குறிகள் கேட்கலையா! அம்மே! குறி!

# 18. வள்ளல் பேகன்–II

தேவி : அம்மா, இக்குறத்தி உங்கள் கணவர் விரைவில் உங்களைச் சார்வார் எனக்கூறிய நற்குறிகளைக் கேட்டீர்களா ?

கண்ணகி : என்னடி, தேவி, இத்தகைய விளையாட்டுப் பேச்சுக்களெல்லாம் என்னிடம் புகலாதே ! என் முன் கூறியது நினைவில் இல்லையா ?

தேவி : அம்மா, பொறுத்தருள்க ! (சற்று அப்பால் நோக்கல்) யாரது அங்கே வருபவர் ? (உற்று நோக்கல்) அம்மா ! அம்மா ! நம் புலவர் பெருமான் அரிசில் கிழாரும் பிறரும் வருகின்றனர்.

கண்ணகி : (விரைந்து எழுந்து நின்று) ஆ ! அப்படியா ! வரட்டும். (புலவர்கள் உள்ளே நுழைகிறார்கள்) புலவர் பெருமக்களே ! வருக ! வருக ! இவண் அமருக ! உங்கள் வரவால் நலம் பெருகுக ! நீங்கள் இவண் எழுந்தருளினமைக்கு என் உளமார்ந்த வணக்கம் உங்களுக்கு உரியதாகுக !

கபிலர் : வாழி ! நங்கையீர், வாழி ! அரிசில் பெருமானீர், இவண் அமருங்கள். (அரசியை நோக்கி) அன்னையீர், யான் ஊரில் இல்லாத காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் அறியப் பெரிதும் வருந்துகின்றேன் ! ஊர் வந்ததும் செய்தியுணர்ந்து, நேரே இங்கு வந்துள்ளேன். யான் கூறும் மொழிகட்கு நீங்கள் செவி சாய்த்தருள வேண்டும். கழிந்தது கருதி வருந்துவது அறிவீனமாகும். ஆனால், நமக்கு நேர்ந்த இன்ப-

துன்பங்களை நெடிது சிந்தித்து, அவ்வின்ப துன்பங்களால் நாம் எப்பொருளை அறிவுறுத்தப் பெற்றிருக்கின்றேமோ, அதன் வழி நின்று, நாம் நம்மைச் சீர்திருத்திக்கொள்ள வேண்டுமேயன்றி, கவலையுற்று வருந்துவதால் என்ன ஆகும்? கற்பின் நடு நாயகமாய் விளங்கும் உங்கட்கும், தக்காரினத்தராய் எச்செயலையும் ஊன்றி நோக்கி வினைப்படுத்தும் உங்கள் கணவர்க்கும் நேர்ந்த இப்பிரிவை எம்மனேர் ஆற்றுதற்கில்லோம்! ஆதலால், நீங்கள் எங்களது வேண்டுகோட்கு இணங்கி, இன்னே எங்களுடன் போந்து, உங்கள் கணவருடன் கூடி வாழ்வீர்களாக! உங்கள் கணவர் உங்களை ஏற்கும் முறையில் முரண்படுவார் என ஐயுற வேண்டா. எங்கள் முன்னிலையில் உங்களை அவர் கண்ட பொழுதே, மிக்க மகிழ்வுடன் வரவேற்பார். மேலும், உங்களைக் காணுது உங்கள் குடிமக்களும் மழையின்றி வாடி நிற்கும் பயிரைப் போன்று வாடியிருக்கிருர்கள் என்பதையும் நீங்கள் அறிய வேண்டும்.

அரிசில் கிழார்: கற்பின் நங்கையராம் கண்ணகியீர், எங்கள் வருகையைக் குறித்து யான் மிகுதியும் கூற விரும்பவில்லை. உங்கட்குத் தெரியாதது ஒன்றுமில்லை. எத்தகைய துன்பம் வருத்தினும், கவலையால் மனம் வாடினும், இல்வாழ்க்கையை நடாத்தும் காதல் மனையாளும் காதலனும், அற்ற குளத்தின் ஆம்பலும் கொட்டியுமென்ன, ஒட்டி நிற்றலை விட்டுத் தட்டி நடக்கலாகாது என்பது நீங்கள் அறியாததன்று. ஆதலால், அன்னையீர், நீங்கள் இப்பொழுதே உங்கள் கணவர்பாற்சேருவது நல்லது.

**கண்ணகி :** பெரியீர், நீங்கள் கூறும் மொழிக்கு மறுமாற்றங் 'கூறும் வலிமை எளியாளிடம் இல்லை. என் தலைவர் என்னை வெறுத்ததோடு அமையாது, அன்று என்னைக் கைப்பற்றிய காலத்து ஆன்றோர் முன்னிலையில், ' இன்று போல என்றும் இடையறு அன்புடன் இருப்பேன்,' என்று கூறிய உறுதி மொழியையும் மறக்க நேர்ந்ததே என்றுதான் என் உள்ளம் எரியின் இழுதென உருகுகின்றது ! எனினும், பேரறிவும் பெருந்தகைமையும் எம் போன்றாரின் நலத்தையே நாடும் நல்லியல்பும் வாய்ந்த உங்களது திருமொழியின் வழியே நின்று என் குறையைப் போக்குவேன்.

**கபிலர் :** (தேவியை நோக்கி) தேவி, விரைவில் நகர் செல்லத் திட்டஞ்செய்வீர்களாக. நாங்கள் சென்று நீங்கள் செல்லுதற்குற்ற மணி நெடுந்தேர் கொணர்வோம். (செல்கிறார்)

**தேவி :** பெரியீர், அவ்வாறே விரைவில் ஆவனவெல்லாம் திட்டம் செய்கின்றேன்.

**சொற்பொருள் விளக்கம் :**

கண்டு - கற்கண்டு, சூழ்தல் - சூழ்ச்சி செய்தல், கோடங்கி-உடுக்கையடித்துக் குறி சொல்பவன், ஒண்டாத - சேராத, எயினி - குறத்தி, மந்தமாருதம் - இளந்தென்றற்காற்று, கந்தவேள் - முருகன். கனகம் - பொன், நவமணி - ஒன்பது மணிகள், வெங்களிறு - கொடிய யானை, பிணை - மான், மடம் - இளமை, கவிகை - குடை, வல்லி - படர்கொடி. கல்லி - தோண்டி, தேறல் - தேன், வடகலை - ஆரியமொழி, தென்கலை - தமிழ் மொழி, அயர - உண்ண, பாயல் - படுக்கை, உமையொரு பாகன் பெயரினைக்கொள் பெரியான் - உமாமகேசுரப்பிள்ளை, (இவர் கரந்தைத் தமிழ்ச் சங்கம் தோற்றுவித்தவர்), தக்கார் - மேலோர், முரண்படு - மாறுபடுகின்ற, காதல் - அன்பு, எரி - நெருப்பு, இழுது - நெய்.

### பயிற்சி :

1. இரு பொருள் எழுது :—
சூழ், குறி, தட்டி, இடை.
2. கோடிட்ட இடங்களை நிரப்பு :—
(அ) அன்னவர் —— —— கொடிது.
(ஆ) மந்த —— வளரும் —— எங்கள் மலையே.
(இ) இந்த —— புரக்கும் —— அம்மே !
(ஈ) சின —— —— பாயலிற்கண் ——.
3. இன்பதுன்பம், வினைப்படுத்தும், பணிபுரிவோர், மதி மயங்கி இச்சொற்றொடர்களைக் கொண்டு வாக்கியங்கள் எழுது.
4. பிரித்தெழுது :—
செந்தமிழ், வெங்கரடி, விருந்தயரும், நெடுந்தேர்.

### வினாக்கள் :

1. குறத்தியின் மை செய்தற்குரிய அரிய செயல் யாது ?
2. குறத்தியின் மலையின் பெருமையை எழுது.
3. 'வடகலை தென்கலை பயிலும் மலை'—இதன் பொருள் யாது ?
4. குறத்தி தம் இனத்தவரின் உணவு, உடை பற்றிக் கூறியது என்ன ?
5. குறத்தி கண்ணகிக்குக் கூறிய குறி யாது ?
6. கண்ணகியின் உயர் பண்பைப்பற்றி எழுது.
7. பேகன் இழைத்த குற்றம் யாது ?
8. இப்பாடத்தினின்றும் புலவர் பெருமக்களின் எச்சிறப்பை அறியலாம் ?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'குறத்தியும் கண்ணகியும்', 'புலவரும் கண்ணகியும்' என்பன பற்றிக் கட்டுரை எழுது.

இந்நாடகப் பகுதியைக் கதையாக எழுது.

### இலக்கணம் :

#### வினையெச்சம் :

'ஓடி' - இவ்வினைச்சொல், 'ஓடுதல்' தொழில் செய்த கருத்தா இன்னார் என்பதைக் காட்டவில்லை ; இதன் பொருளும் முற்றுப்பெறவில்லை.

| | | |
|---|---|---|
| (அவன்) | ஓடி | 'ஓடி' என்னும் வினைச்சொல்லுடன் அவன், அவள், அது, அவர், அவை, நான், நாங்கள், நீ, நீர் என்னும் படர்க்கை, தன்மை, முன்னிலைப் பெயர்களுள் எதனையும் எழுவாயாகச் சேர்க்கலாம். ஆதலின், இது வினை செய்யும் கருத்தாவை உணர்த்தவில்லை. |
| (அவள்) | ஓடி | |
| (அது) | ஓடி | |
| (அவர்) | ஓடி | |
| (அவை) | ஓடி | |
| (நான்) | ஓடி | |
| (யாங்கள்) | ஓடி | |
| (நீ) | ஓடி | |
| (நீர்) | ஓடி | |

| | |
|---|---|
| ஓடிச்சென்முன். | 'ஓடி' என்ற வினைச்சொல், ஐம்பால், மூவிட வினைமுற்றுக்களுள் ஒன்றனைப் பெற்றுப் பொருள் முடிகின்றது. |
| " சென்முள். | |
| " சென்றது. | |
| " சென்றனர் | |
| " சென்றன. | |
| " சென்றேன். | |
| " சென்றேம். | |
| " சென்முய். | |
| " சென்றனிர். | |

இவ்வாறு, வினைச்சொல் திணை, பால், எண், இடம் உணர்த்தாது, வினைமுற்றைக் கொண்டு முடியுமாயின், வினையெச்சம் எனப்படும்.

# 19. வ. உ. சிதம்பரனர்



1. மக்கள் உரிமை உணர்ச்சியுடையவர்கள்; தங்கள் உரிமையை இழந்து வாழ்தலை விரும்பாதவர்கள்; பிறர் ஆட்சியின் கண் எத்தகைய நலன்களைத் துய்ப்பினும், அவர்கள் உள்ளம் உரிமையையே நாடி நிற்கும். ஆயினும், ஒரு சிலரே உள்ளத்தின் உணர்வை வெளியிட்டு, உரிமைக்காகப்போராடும் உரன் பெற்று விளங்குவர். அத்தகைய உரிமை வேட்கையால் உந்தப்பட்டு, நாட்டின் விடுதலை கருதி அயராது உழைத்துவந்த பெரியார் வ. உ. சிதம்பரம்பிள்ளையாவர்.

2. சிதம்பரப்பிள்ளை திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள **ஒட்டப்பிடாரம்** என்னும் சிற்றூரில் **உலகநாதப்பிள்ளை, பரமாயி அம்மாள்** என்பவரின் திருமகனுய்த் தோன்றினர். அவர் தம் ஆறும் வயதில் அவ்வூரிலுள்ள திண்ணைப்பள்ளிக்கூடத்தில் மாணவராய் சேர்ந்து, ஆரம்பக்கல்வி பயின்றார். அங்கு அவர் தமிழும் கணிதமும் கற்று வந்தனர்; பின்னர், தம் தந்தையாரால் தோற்றுவிக்கப்பட்ட பள்ளியில் தமது பதினன்காவது வயது வரை கல்வி கற்றார் ; உயர்தரக் கல்விக்காகத் தூத்துக்குடி சென்று, அங்குள்ள **புனித** சவரியார் கலாசாலையில் சேர்ந்து, ஓராண்டு கற்றபின், கால்டுவெல் **உயர்தரப்பள்**ளியில் தம் கல்வியைத் தொடங்கினர். பத்தாவது வகுப்புத் தேர்வில் முதன் முறை வெற்றி பெருத அவர், மீண்டும் முயன்று வெற்றி கண்டனர். அவ்வூரிலுள்ள கால்டுவெல் **கல்லூ**ரியில் சில காலம் பயின்றபின், தம் கல்வியை முடித்துக்கொண்டார்.

3. கல்வி முடிந்த பின், வ. உ. சி. **தாசில் நெல்லையப்பப்பிள்ளை** என்பவரிடம் சில நாட்கள் எழுத்தாளராய்ப் பணியாற்றினர் ; சட்டத்தேர்வு எழுதி, தேர்ச்சி பெற்று, தூத்துக்குடியில் வழக்கறிஞராய்த் தொழில் புரிந்து, பேறும் புகழும் பெற்றார். அவர் எளியவர் வழக்கினைப் பொருள் பெருமல் ஏற்று நடத்தினர். ஆற்றல் மிக்கவராய், எடுத்த கட்சிக்கு வெற்றி கிடைக்கும்படி செய்து வந்தார்; தாம் ஏற்றுக்கொண்ட வழக்கில் தம் கட்சிக்குத் தோல்வி வரும் என்று தெரிந்தால், உடனே எதிரியைக்கண்டு இனிமையாகப்பேசி, வழக்கைச் சமாதான முறையில் தீர்த்துவிடும்படி செய்வார்; இவ்-

வாறு, பிறர் வியப்புறும் வண்ணம் தம் தொழிலை நடத்தி அனைவர் பாராட்டிற்கும் உரியவராயினர்.

4. அச்சமயத்தில், நாட்டு விடுதலைப் போராட்டம் நடைபெற்றுக்கொண் டிருந்தது. சிதம்பரனார் திலகரைப் பின்பற்றி, விடுதலைப்-போரில் இறங்கினர்; நாட்டின் நலனுக்காகத் தம் பொருளையும் புகழையும் இழக்க உறுதி பூண்டார்; 1907ஆம் ஆண்டு சூரத்து நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபையில் தலைவர் திலகருக்குச் சார்பாய் நின்று பேராதரவு காட்டினர். வடநாட்-டுத்தலைவர்கள் அவர்மீது அன்பும் நன்மதிப்பும் கொண்டார்கள். கவிஞர் சுப்பிரமணியபாரதியா-ரும் சுப்பிரமணிய சிவாவும் அவருக்கு உறு-துணைவராய் அமைந்தனர். அவரது பேச்சு, கேட்-போரை வயப்படுத்தும் தன்மையதாய், கேளாரும் விரும்பத்தக்கதாய் இருந்தது. மக்கள் அவர்பால் நன்மதிப்புக் கொண்டார்கள். ஆனல், அரசாங்கம் வெகுண்டெழுந்தது; அவர்கள்மீது வழக்குத் தொடர்ந்தது. அவர் கைது செய்யப்பட்டார். நீதிபதி அவருக்கு ஆறு ஆண்டு கடுங்காவல் தண்டனை அளித்தார். அவர் கோயம்புத்தூரிலும் கண்ணனூரிலும் சிறை வாசஞ்செய்தார். அவர் சிறையில் எண்ணெய் ஆட்டும் செக்கினை மாட்டிற்-குப்பதிலாக இழுக்கவேண்டியவரானர்; மிகக்கடு-மையான வேலைகளும் செய்யவேண்டியவரானர். ஆயினும், அவர் மனந்தளர்ந்தாரல்லர்.

5. 1912ஆம் ஆண்டு சிதம்பரனர் சிறையி-னின்றும் விடுதலையானர். விடுதலை பெற்ற உரிமை வீரர் வறுமைக்காளானர். அதனல், நெய், அரிசி முதலியன விற்கும் வணிகத்

தொழிலை மேற்கொண்டார். அவரது வறுமை நிலையையறிந்த திலகர் அவருக்குத் திங்கடோறும் ரூபா ஐம்பது அனுப்பி உதவி புரிந்தனர். காந்தி-யடிகளும் தென்னுப்பிரிக்காவில் நிதி திரட்டி அவருக்கு உதவினர். இவ்வாறு வறுமையில் உழன்ற சிதம்பரனர், 1936ஆம் ஆண்டு நவம்-பர்த்திங்கள் 18ஆம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்தனர்.

6. சிதம்பரனர் நாட்டுத் தொண்டில் ஈடு-பட்டவராயினும், தமிழ்த் தொண்டு செய்த பெரு-மையும் அவருக்குரியதாகும். அவர் சிறை வாசம் செய்த காலத்தில், '**மனம்போல வாழ்வு, அகமே புறம், வலிமைக்கு மார்க்கம்**' என்னும் நூல்-களை எழுதினர். '**மெய்யறிவு, மெய்யறம்**' என்னும் அறநூல்களும் அவரால்இயற்றப்பட்டன. அவர் திருக்குறளுக்குத் தெளிவுரை எழுதியுள்-ளார்; '**தொல்காப்பியம்—இளம்பூரணம்**' என்-னும் இலக்கண நூலைப் பதிப்பித்தார். பற்பல கவிதைகளும் அவரால் யாக்கப்பட்டுள்ளன.

7. மக்களின் பொருளாதார நிலையை உயர்த்-துவதிலும் அவர் நாட்டம் சென்றது. ஆங்கிலக் கம்பெனிகள் கப்பல் போக்குவரத்து மூலமாகப் பெரும் பொருள் ஈட்டுதலைக் கண்ணுற்ற அவர், **சுதேசி கப்பல் கம்பெனியை** நிறுவினர். பற்-பல இன்னல்கள் குறுக்கிட்டன. ஆயினும், விடாமுயற்சியும் அஞ்சா நெஞ்சமும் கொண்ட சிதம்பரனர், இன்னல்களைப் பொருட்படுத்தாது, **எஸ். எஸ். லாவோ, எஸ். எஸ். காலியோ** என்-னும் கப்பல்களைத் தூத்துக்குடிக்கும் இலங்கைக்-கும் இடையே ஓடச் செய்து வெற்றி பெற்ருர்.

பகைவராகிய வெள்ளையர் அவருக்கு லட்ச ரூபாய் கொடுக்க முன் வந்தனர். தந்நலமற்ற அவர் அதைப் பெற இணங்கிலரல்லர்.

8. வறுமையிலும் செம்மையுடைய சிதம்பரனார், தமிழரிடையே நாட்டுப்பற்றை வளர்த்தவர்; ஒற்றுமைக்கு அடிகோலியவர்; தமிழார்வம் மிக்கவராய்த் தமிழ்த் தாய்க்கு அரும்பணியாற்றியவர். தம் வாழ்நாளில் சிறுமையுற்ற அவர் இன்று தமிழ் மக்கள் மனத்தில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றார்.

### சொற்பொருள் விளக்கம் :

துய்ப்பினும் - அனுபவித்தாலும், நாடி - விரும்பி, உரன் - வலிமை, வேட்கை - விருப்பம், எழுத்தாளர்-குமாஸ்தா, பேறு - செல்வம், வெகுண்டு - கோபித்து, வறுமை - தரித்திரம், உழன்ற - வருந்திய, நாட்டம் - விருப்பம், இன்னல் - துன்பம்.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   சிற்றூர், பேராதரவு, எண்ணெய்.
2. வாக்கியங்களிலமைத்து எழுது :—
   நன்மதிப்பு, கேளார், போக்கு வரவு, அடி கோலுதல்.

### வினாக்கள் :

1. வ. உ. சிதம்பரனாரின் பிறப்பிடம் யாது? பெற்றோர் யாவர்?

2. வ. உ. சியின் இளமைக் கல்வியைப்பற்றி நீ அறிந்ததை எழுது.

3. வழக்கறிஞராய்ச் சிதம்பரனார் ஏழைகளுக்கு எவ்வாறு உதவினர்?

4. நாட்டுப்பற்றுக் காரணமாக வ. உ. சி. அடைந்த இன்னல்கள் யாவை?

5. வ. உ. சி. யின் வறுமையை நீக்க உதவியவர் யாவர்?

6. சிதம்பரனார் எழுதிய நூல்கள் யாவை?

7. கப்பலோட்டிய தமிழர் எனச் சிதம்பரனார் பெயர் பெறக் காரணம் என்ன?

## கட்டுரையாக்கப் பயிற்சி :

'சிதம்பரனாரும் நாட்டுத் தொண்டும்,' 'தமிழ்த் தொண்டர் சிதம்பரனார்' என்னும் தலைப்புக்களிற் கட்டுரை எழுது.

## இலக்கணம் :

### பெயரெச்சம் :

ஓடினான் என்ற வினைமுற்று ஓடி, ஓடிய என நிற்கு மிடத்து, பொருள் முடியாததாய், வினைச் சொல்லையும் பெயர்ச் சொல்லையும் தழுவி நிற்கின்றது.

ஓடி விழுந்தான்—'ஓடி' என்னும் வினைச்சொல் 'விழுந் தான்' என்னும் வினைச்சொல்லைக்கொண்டு முடிவத னால், 'வினையெச்சம்' எனப்படும்.

ஓடிய மனிதன்—'ஓடிய' என்னும் வினைச்சொல், 'மனி தன்' என்னும் பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிவத னால்' 'பெயரெச்சம்' எனப்படும்.

ஓடிய—மனிதன், சீதை, மாடு, ஆடவர், யான், யாங்கள், நீ, நீர்——'ஓடிய' என்ற பெயரெச்சம் ஐம்பால் மூவிடப் பெயர்களைக்கொண்டு முடிந்தது.

இவ்வாறு, பால் காட்டும் விகுதி குறைந்து, பெயரைக் கொண்டு முடியும் வினைச்சொல் பெயரெச்சமாகும்.

# 20. எனது பிரயாண அனுபவங்கள்–I

திரு. என். டி. சுந்தரவடிவேலு அவர்கள், எம்.ஏ., எல்.டி.
(சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநர்)

1. பயணம் ஓர் படிப்பினை; அதிலும் வெளி நாட்டுச் சுற்றுப் பயணம் ஓர் அறிய படிப்பினை. சில மாதங்களுக்கு முன் அத்தகைய படிப்பினை எனக்கும் என் மனைவிக்கும் வாய்த்தது.

2. 1951ஆம் ஆண்டு ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் பாரிசுக்கு அடுத்த ‘சேவ்’ (Sevres) என்னும் நகரில் ஒரு கல்வி மகாநாடு நடந்தது. அம்மகாநாட்டிற்குச் சென்னை அரசினர் சார்பில் நான் சென்றேன். அம்மகா நாட்டைக் கூட்டி-யது ‘யுனெஸ்கோ’ (Unesco) என்னும் உலகக் கழகம். ஐக்கிய நாடுகளின் கல்வி விஞ்ஞான கலைக் கழகம் (United Nations Educational Scientific and Cultural Organisation) என்னும் ஆங்கிலப் பெயரின் சுருக்கமே ‘யுனெஸ்கோ’ என்னும் பெயர்.

3. இப்பயணத்தில் நாங்கள் இலங்கை, பிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்காட்டுலாந்து, சுவிட்-ஸர்லாந்து ஆகிய நாடுகளைப் பார்த்தோம். நம் நாட்டிற்கும் இவ்வைந்து நாடுகளுக்குமுள்ள முதல் வேற்றுமை, இந்நாடுகளில் மரஞ்செடி கொடிகள் செழிப்புற்று நிறைந்து இயற்கை எழி-லுடன் விளங்குகின்றதே. பட்டையுரிக்கப்பட்ட மரங்களையோ, மொட்டையடிக்கப்பட்ட மரங்-களையோ நாங்கள் நம் நாட்டிலன்றி வேறு எங்கும் பார்க்கவில்லை. ‘பச்சை மரத்தைப் பாழாக்குதல்,

முல்லைக்குத் தேர் ஈந்த மன்னன் கதையைக் கேட்ட நமக்குத்தான் தனி உரிமையோ !' என்ற எண்ணம் எங்களுக்கு எழுந்தது.

4. இயற்கை எழிலை விட்டு இந்நாடுகளின் செயற்கையின் செம்மையைச் சிறிது பார்ப்போம்: போக்கு வரவிற்குரிய செம்மையான பாதைகளைப் பட்டி தொட்டியெல்லாம் பார்க்கலாம். வண்டி போக வழியில்லாத ஊரே இல்லையென்றுகூடச் சொல்லலாம். நகரத் தெருக்கள் செம்மையாகவும் குழி பள்ளங்கள் இல்லாமலும் இருப்பதோடு, தூய்மையாகவும் இருக்கின்றன. கீழ் நாடுகளில் ஒன்ருகிய இலங்கையின் தலைநகரிலேகூடச் சென்னைத் தெருக்களில் கிடைக்கும் அளவு குப்பை கூளங்களையோ, மற்ற கழிவுகளையோ காண முடியாது; எங்கோ இரண்டோர் இடங்களிற்ருன் சிறிது காணலாம். ஆனல், அந்த அளவு அழுக்கைக்கூட, மேனுடுகளாகிய சுவிட்ஸர்லாந்து, இங்கிலாந்து முதலிய நாடுகளில் காண முடியாது. அங்கெல்லாம் தெருவில் எச்சில் துப்பும் மனிதர் இலர். வீட்டிலுள்ள குப்பை கூளங்கள், எச்சில் இலைகள் முதலியவற்றை அண்டை வீடுகளின் அருகிலும், எதிர் வீட்டின் அருகிலும், யாரும் பார்க்காத நேரத்தில் எறிந்துவிடும் திறமைசாலிகளை அங்குக் காண முடியாது! படித்தவர்கள்கூட, பற்ற வைத்த சிகரெட்டைப் பாதையிலேயே போட்டுவிட்டுப் போவதைப் பார்த்துப் பார்த்துப் பழகிவிட்ட நமக்கு, பஸ், டிராம் டிக்கட்டுக்களைக்கூடப் பத்திரமாகக் கொண்டுபோய்ப் பெட்டியில் போட்டு விட்டுப் போகும் அந்நாட்டு மக்களைக் கண்டால்,

' இவர்களுக்கு வேறு வேலையில்லையோ !' என்று-தான் எண்ணத்தோன்றும். அவர்களுக்கோ பொது இடங்களில் நடந்துகொள்ளும் முறைதான் நாக-ரிகத்தின் அளவுகோல். இந்நல்ல பழக்கத்தால் குப்பை கூளங்களின்மேல் நடக்கவோ, எச்சிலைச் சேர்த்துக்கொண்டு போகவோ நேரிடுவதில்லை.

5. பிரான்ஸ் நாட்டின் தலைநகரான பாரிஸ் சரித்திரப்புகழ் பெற்றது மட்டுமன்று; மிக அழகிய-துமாகும். நீண்டு அகன்ற தெருக்களும் அவற்-றினூடே உள்ள மரவரிசைகளும், சோலைகளும் கண் கொள்ளாக் காட்சிகளாகும். அந்நகரில் பொருட்காட்சிச் சாலைகள் பல உள்ளன. முற்கால மன்னர்களையும், குறுநில மன்னர்களையும் மக்கள் புரட்சி செய்து விரட்டியடித்தபோதும், அவர்கள் மாளிகைகளையும் அவர்களால் சேகரிக்கப்பட்ட அரும்பொருள்களையும் அழித்துப் பாழாக்காமல் காப்பாற்றிப் பாதுகாத்து நாட்டின் சொத்தாக்கி வைத்துள்ளார்கள். அவையெல்லாம் அப்பொருட் காட்சிச் சாலைகளில் காட்சியளிக்கின்றன.

6. ஓட்டலின் வெளியே நடை பாதையில் மேசை நாற்காலி போட்டு உட்கார்ந்துகொண்டு வேடிக்கை பார்த்தபடியே ஊரறியச் சாப்பிடுவது பிரெஞ்சு நாட்டின் நாகரிகங்களில் ஒன்று. தெரு-வில் சாப்பிடுவதில் அவர்கள் கூச்சமடைவதில்லை.

7. சுவிட்ஸர்லாந்து குடியாட்சிக்குப் பெயர் பெற்றது; பல நூற்றுண்டுகளாகச் சண்டையில் ஈடுபடாமல் நடுவுநிலைமை வகிப்பது; எம்மொழிக்-கும் ஏற்றம் கொடாமல் நாட்டில் வழங்கும் மூன்று மொழிகளிலும் அரசியலை அமைதியாக நடத்து-வது; பல மொழியினரும், பல இனத்தவரும்,

எப்படி ஓர் அரசின்கீழ் வாழ்வது என்பதைக் கற்பிப்பது. இச்சிறப்புக்களையுடைய இந்நாடு, மலைகளும், மலைகளினிடையே அழகிய பெரிய ஏரிகளும், அவற்றின் கரைகளில் அழகிய நகரங்களும் கொண்டது. இந்நாட்டின் வனப்பையும் இங்குள்ள ஆல்ப்ஸ் மலையின் பனிப் படலத்தையும் கண்டு மகிழ ஆண்டுதோறும் பிற நாட்டு மக்கள் திரள்திரளாக இந்நாட்டுக்கு வருகின்றனர்கள். இது கடிகாரங்களுக்குப் பெயர்பெற்றது என்பதை நாமெல்லோரும் அறிவோம்.

8. இனி அத்தெருக்களில் போகும் மக்களைக் கவனிப்போம்: மாலை நேரங்களில் நம் சென்னை நகரத்தில் ‘மௌண்டு ரோடு’ பக்கம் நடந்து போனால் என்ன அனுபவிக்கிறோம்? நம்மைத் தள்ளிக்கொண்டு ஓடும் சுறுசுறுப்பாளி, முன்பின் பாராமல் மிதித்துவிடும் மக்கள், இறுமாப்போடு இடித்துவிட்டுப் போகும் இளைஞன், வம்புக்குவரும் வழிப்போக்கன், குடையால் குத்துவதற்கு உரிமை கொண்டாடும் குடையாளி ஆகியோர் நாம் நாள்தோறும் சந்திக்கும் நல்ல நண்பர்கள் அல்லவா? இத்தகைய நல்லோரை இங்கிலாந்திலும் ஸ்காட்டுலாந்திலும் காண இயலாது. அங்கெல்லாம் இத்தகைய காட்சிகள் எங்களுக்குக் கிடைக்கவில்லை. மக்கள் மரியாதையோடும் ஒழுங்கோடும் நடந்து கொள்கின்றனர்கள். பொது இடங்களில் ஒருவரோடொருவர் வாய்ச்சண்டை போடுவதையும் அங்குப் பார்க்கமுடியவில்லை. பிரிட்டிஷார் கட்டுப்பாட்டிற்கும் ஒழுங்கிற்கும் பெயர் பெற்றவர் என்பது வெறும் புகழ்ச்சியன்று. ஓட்டலில் சாப்பிடுவதற்குக்கூட அவர்கள் ‘கியூ’ வரிசையில் நிற்கின்றனர்-

கள். அவர்களிடம் மட்டும் பசி வந்திடப் பத்தும் பறப்பதைக் காணோம். பசி வேளையிலும் பதருமலும், குறுக்கு வழி தேடாமலும் அவர்கள் 'கியூ' வரிசையில் பொறுமையாய் நிற்பதே ஓர் அருமையான காட்சியாய் இருக்கிறது.

9. பிரிட்டனில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை. ஆள் இல்லாத் திண்டாட்டந்தான் ஓரளவு உண்டு. பரிமாற ஆள் இல்லாத காரணத்தால் ஓட்டல்களில் பல நாற்காலி வரிசைகள் காலியாய் இருப்பது சாதாரண நிகழ்ச்சி. பெரும்பாலும் ஆணும் பெண்ணும் ஏதேனும் தொழில் செய்தே வாழ்கிறார்கள். பாட்டன், தகப்பன் தேடிய பொருளைக் கொண்டு சுகவாழ்வு வாழ்வது அங்குப் பழங்கதையாகிவிட்டது. தொழில் செய்து பிழைத்தல் என்கின்ற போதே, கைகட்டி, வாய்பொத்திப் பல்லெல்லாம் தெரியக் காட்டி வாழும் அடிமை வாழ்வுதான் நம் நினைவிற்கு வருகிறது. இதனால் அல்லவா நமக்கெல்லாம் வேலைக்குப் போவதென்றால் வெறுப்புத்தோன்றுகின்றது! அங்குத் தொழிலாளியை அடிமையாகக் கருதுவதில்லை. வேலைக்காரர்களைக்கூட மரியாதையாகநடத்துவது அவர்கள் பழக்கம். வேலை நேரத்திலேதான் உத்தரவு இடுபவர், அதை நடத்துபவர் என்கிற பதவி வேற்றுமை இருக்கிறதே தவிர, மற்ற நேரங்களில் எல்லோரும் சமமாகவே நடக்கின்றனர். இது நிற்க.

10. 'வேலைக்கேற்ற கூலி உண்டா? அக் கூலி போதுமா? அங்கும் பட்டினியும் பசியும் உண்டா?' என்னும் ஐயங்கள் உங்களுக்குப் பிறக்கலாம். இவற்றிற்கும் விடை கூறுகிறேன்: அங்-

குச் சம்பள வேற்றுமை உண்டு. சில வேலை-களுக்கு அதிகச் சம்பளமும், பலவற்றிற்குச் சாதாரண சம்பளமும் கிடைக்கின்றன. எவ்விதத் திறமையும் வேலையில்லாத தொழிலிற்கூட வாழ்க்-கைக்குப் போதிய சம்பளம் கிடைக்கும். வேலை-யும் எல்லோருக்கும் கிடைத்து, அவ்வேலையிலும் போதிய சம்பளம் கிடைக்கிற போது வாட்டும் வறுமை எங்கிருந்து வரும்? பிரிட்டனில் செல்வந்-தர்களும் மற்றவர்களும் இருந்தாலும், இரு வகுப்-பாருக்குமிடையேயுள்ள வேற்றுமை மலைக்கும் மடுவிற்கும் இடையேயுள்ளதாய் இல்லை. உள்ள வேற்றுமையும் சிறிது சிறிதாகக் குறைந்து-கொண்டே வருகிறது. பசியோடு அலையும் மக்-களையோ, மழையால் நனைந்து வெயிலால் உலர்ந்து தெருவில் உருளும் பஞ்சைகளையோ பார்க்க முடியாது. பிச்சைக்காரத் தொல்லையும் அங்கு இல்லை.

# 21. எனது பிரயாண அனுபவங்கள்–II

1. பிரிட்டிஷாரிடையில் நாணயம் மிகுதி. ஒவ்வொரு வீட்டு வாயிற்படியிலும் காலையில் புட்டி புட்டியாகப் பாலும், கூடை நிறையக் காய்கறிகளும் காத்துக்கொண்டிருப்பதைப் பார்க்கலாம். அக்கம்பக்கத்திலிருப்பவர்களோ, வழியே போகிறவர்களோ எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள் என்கிற பேச்சோ, 'யார் வீட்டுக் குழந்தையோ, தள்ளி உடைத்துவிட்டது!' என்ற குமுறலோ கேட்க முடியாது. தங்களுக்கு உரியதல்லாத எதையும், அது நடுத்தெருவில் இருந்தாலும், வழிப்போக்கர்கள் தொடமாட்டார்கள். பஸ்களிலும், இரயில் வண்டியிலும் எதையாகிலும் மறந்து வைத்துவிட்டாலும் அது களவு போகாது. 'காணாமற்போன பொருள் ஆபீஸில் அது சேர்க்கப்படுமேயொழிய, யாரும் அதை எடுத்துவைத்துக்கொண்டு நடந்துவிட மாட்டார். இவ்வளவு நாணயமானவர்களாய் இருப்பதாற்றான் பாங்கியில் கட்டும் பணத்திற்கு அங்கு இரசீது கொடுப்பதுமில்லை; கேட்பதுமில்லை; ஆனால், வரவு விட்டுப் போவதுமில்லை. இரயில் நிலையங்களில் சாமான்களைப் போர்ட்டரிடம் ஒப்புவித்துவிட்டு அவற்றைக் கண்காணித்துக்கொண்டு நடந்தாலே அதைத் தங்களை அவமானப்படுத்துவதாகப் போர்ட்டர்கள் நினைக்கிறார்கள். வழிப்பறி பயமோ ஜேபியடி அச்சமோ இல்லாமல் எங்கும் தைரியமாகச் செல்லலாம். ஓட்டல்களிலும், நாலு பேர் நடமாடுகிற பொது இடங்களிலும் வெளியே

கிடப்பதை வேலைக்காரர் சுருட்டிக்கொண்டு போய் விடுவார்கள் என்கிற கவலையும் அங்குத் தேவையில்லை.

2. மக்களின் மாண்பிற்கு அவர்கள் பெறும் கல்வியும் காரணமாகும். ஆகவே நாணயம், ஒழுங்கு, பொறுமை, கட்டுப்பாடு ஆகிய அருங்குணங்களையுடைய பிரிட்டிஷாரின் கல்வி முறையையும் சற்றுக் கவனிப்போம். அவர்களுக்குக் கல்விக் கட்டாயம் சட்டத்தில் மட்டுமன்று; நடைமுறையிலுங்கூட. அதற்காக மலைக்காட்டிலிருக்கும் சிறு பட்டிக்காடுகளிலும் வசதிகளோடு கூடிய பள்ளிகள் இருக்கின்றன.

3. எத்தனையோ இலட்சம் மக்களைக்கொண்ட இலண்டன் நகரத்திற்கூட 1951ஆம் ஆண்டின் முதல் ஆறு மாதங்களில், 361 பேர்களே பிள்ளைகளை ஒழுங்காகப் பள்ளிக்கனுப்பாத குற்றத்திற்கு உள்ளானார்கள் என்றால் கட்டாயக் கல்வி எவ்வளவு ஒழுங்காக அங்கு அமல் நடக்கிறது என்பது விளங்குகிறதல்லவா? இத்தகைய கட்டாயக்கல்வி பெரும் பட்டினங்களோடு நிற்கவில்லை. நாடு முழுவதும்—மலைக்காட்டில் மறைந்து கிடக்கும் பட்டிதொட்டியுட்பட அமலிலிருக்கிறது. 'கல்வி எவ்வளவு காலத்திற்குக் கட்டாயம்?' என்று கேட்கலாம். கல்வி ஆறும் வயது தொடங்கியது முதல் 15ஆம் வயது முடிய—அதாவது பத்தாண்டுகளுக்கு—ஆணுக்கும் பெண்ணுக்கும் கட்டாயம். ஆரம்பக் கல்வியோடு நிறுத்தாமல், உயர்நிலைக் கல்வியையும் கட்டாயமாக்கியுள்ளனர். 'கல்விக்கு ஏதாவது சம்பளம் கட்ட வேண்டுமா?' என்பது உங்கள் அடுத்த ஐயமாயிருக்கும். அங்கு உயர்நிலைப் பள்ளிக்கூடப்

படிப்புக்கூட இலவசமே. சம்பளம் வாங்காமல் கற்றுக் கொடுப்பதோடு மாணவ மாணவிகளுக்கு வேண்டிய நூல்கள், குறிப்புப் புத்தகங்கள், எழுது-கோல் ஆகியவையும் பள்ளிக்கூடங்களிலேயே இலவசமாகக் கொடுக்கிறார்கள். படிக்கும் பிள்ளை-கள் உடல் நலத்தோடு இருந்தால் அல்லவா படிக்க முடியும்? ஆகவே, பள்ளிக்கூடத்திலேயே பகல் 10–30 மணிக்கு எல்லா மாணவ மாணவிகளுக்கும் பால் கொடுக்கிறார்கள்; ஏதோ சிறு குழந்தை-களுக்கு மட்டும் கொடுக்கிறார்கள் என்று நினைக்கா-தீர்கள். வாலிபர்கள்கூடப் பகலில் பால் குடித்தாக வேண்டும். நடுப்பகலில் பள்ளிக்கூடங்களிலேயே உணவு கொடுக்கிறார்கள். போதிய சத்துள்ள உணவு அது. இப்போது கிட்டத்தட்டப் பாதித் தொகையினருக்குத்தான் பள்ளியுணவு; விரைவில் எல்லோருக்கும் பள்ளியுணவு கொடுக்க அரசியலார் திட்டமிட்டுள்ளனர். பள்ளியுணவைப் பணக்காரர் வீட்டுக் குழந்தைகள் உட்பட எல்லோரும் ஒன்று-யிருந்து உண்பதன் மூலம், ஏழை—பணக்காரன் என்ற எண்ணம் வளராமல் எல்லோரும் சமமாகப் பழகும்படி கற்பிக்க முடியுமென்று அவர்கள் நம்பு-கிறார்கள். பள்ளியில் சாப்பிடும் பிள்ளைகள் எல்-லோருக்கும் உணவு இலவசமன்று. நிரம்பச் சம்-பளம் பெறும் பெற்றோர்களிடமிருந்து அவர்கள் வருவாய்க்குத் தக்கபடி கட்டணம் வாங்கிவிடு-கிறார்கள். அப்படி வாங்கும் கட்டணமும் எவ்வளவு பெரும் பணக்காரரிடமும் அச்சாப்பாட்டிற்கு ஆகும் செலவில் பாதிக்குமேல் வசூலிக்கப்படுவ-தில்லை.

4. பிரிட்டிஷ் பள்ளிக்கூடங்கள் பலவற்றை

நாங்கள் பார்த்தோம். எந்த வட்டாரத்திற்குச் சென்றாலும், எந்த நிலைப்பள்ளிக்குச் சென்றாலும், 'அழுமூஞ்சி' மாணவ மாணவிகளை நாங்கள் பார்க்கவில்லை. அவர்கள் மகிழ்ச்சியோடும் சுறு சுறுப்போடும் இருந்தார்கள். காரணம் என்ன? பள்ளிக்கூடம் சிறைக்கூடமாயில்லை; வளர வாய்ப்புத் தரும் நிலையங்களாயிருக்கின்றன. பிள்ளைகள் எப்படியாவது சில பல தகவல்களை மனப்பாடஞ் செய்து மறவாமல் எழுதிப் பரீட்சை-யில் தேர்வடைவதைக் கல்வியின் இலட்சியமாக அப்பள்ளிகள் கருதுவதில்லை. பரீட்சை என்கிற படிக்கட்டு அங்கும் உண்டு. இருந்தாலும், அது கனவிலும் நனவிலும் நின் பயமூட்டும் கருவி-யாய் இல்லை. இன்ன வகுப்பிற்கு இன்ன பாடப்-பிரிவில் இவை இவை கற்பிக்க வேண்டும் என்ற இரும்புச் சட்டமும், அதைவிட்டு அணுவும் அக-லாத பாட நூல்களும் இந்தியருக்கு மட்டும் வாய்த்த வாய்ப்பல்ல, உலகில் எல்லா நாடுகளிலும் காணக்கூடிய முறையாகும். ஆனால், ஆங்கிலேய நாட்டில் மட்டும் அத்தகைய திட்டவட்டமான பாடத்திட்டம் இல்லை. அது அங்கு மட்டும் நடக்கும் தனிப்புதுமை. பள்ளிவாழ்வில் பதினொரு வயது முடிந்ததும் ஒரு முறையும், பதினாறு வயதில் ஒரு முறையும் முக்கியமான பொதுப் பரீட்சைகள் நடக்கும். அதற்கு வருவோர் இதை, இதை அறிந்திருக்க வேண்டுமென்று பொதுவாக வகுத்திருக்கிறார்கள். அதைக் கவனத்திற்கொண்டு ஒவ்வொரு பள்ளியிலும் மாணவ மாணவிகளின் அறிவுத் திறமைக்கேற்றபடி ஆசிரியர்கள் கூடி யோசித்துப் பாட முறையை ஏற்பாடு செய்து

கொள்ள ஆங்காங்குள்ள ஆசிரியர்களுக்கே உரிமையிருக்கிறது.

5. மேலும், பள்ளியில் நல்ல பழக்க வழக்கங்கள், ஒழுங்கு ஆகியவற்றைக் கற்றுக் கொடுப்பதில் அதிக கவனம் செலுத்துகிறார்கள். ஆகவே, அவர்கள் வெறும்படிப்பாளிகளாக வெளி வராமல் வையத்துள் வாழும் முறையை அறிந்தவர்களாகப் பள்ளியிலிருந்து வெளிவருகிறார்கள்.

6. சர்க்கார் வகுத்த பாடத்திட்டமே இல்லாமல் பணி புரியும் ஆசிரியர்கள் தங்களுக்குக் கிடைத்த உரிமையைப் பாழாக்குவது இல்லை; அளவு கடந்த பொறுப்புணர்ச்சியோடு பள்ளிக்கூடத்தை நடத்துகிறார்கள். தண்டனை அச்சம் இல்லாவிட்டாலும், சுய ஒழுங்கு காரணமாகவே வேலை செம்மையாக நடக்கிறது. 'இப்படிப்பட்ட ஆசிரியர்களுக்குச் சம்பளம் எப்படி? மதிப்பு எப்படி?' என்று அறிய ஆவல் கொள்ளுவீர்கள் அல்லவா? சம்பளம் குறைந்தது அன்றென்றாலும், வேறு சில தொழில்களில் வரும் அளவு ஊதியம் வருவதில்லை. ஆனால் மதிப்போ மிக அதிகம். பொது மக்களாகட்டும், நிருவாகிகளாகட்டும், கண்காணிப்போராகட்டும், எல்லோரும் ஆசிரியர்களை மதிப்போடு நடத்துகிறார்கள். மதிப்பு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டுகிறது. ஊக்கமும் உற்சாகமும் வேலையில் நேர்மையையும் திறமையையும் விளைவிக்கின்றன.

7. இப்படிப்பட்ட நல்ல முறையின் பயனாக நாங்கள் அங்குக் காணாதவை தெருச்சண்டை, சோம்பல், பட்டினி, ஏமாற்று, சப்பை மாடுகள், ரிக்ஷா வண்டி, பேரம் பேசுதல், பொருள்களைப்

பறிகொடுத்து ஏங்குவோர். நாங்கள் கண்டவைகளோ, ஒழுங்கு, சுத்தம், சுறுசுறுப்பு, கடுமையானதும் உண்மையானதுமான பங்கீடு, நேர்மை, மரியாதை, ஒரே விலை, அச்சமின்மை ஆகியவையாம். அங்குள்ள போலீஸ்காரர் நம்பிக்கையான நண்பர். போர்ட்டர்கள் மிகவும் மரியாதையானவர்கள் என்று சொன்னால் உங்களில் பலர் நம்ப மாட்டீர்கள்; நேரில் பார்த்தால்தான் நம்பமுடியும். அளவு கடந்த தோழமையும் மரியாதையும் அவர்களிடம் காணலாம்.

8. "நாமும் அந்நிலைக்கு வர முடியுமா!" என்ற ஏக்கம் எங்களுக்கு அடிக்கடி வந்ததுண்டு. ஆம், முடியும். உண்மையோடும் உறுதியோடும் உழைத்தால், பெருநதைப் பெறலாம். இதுதான் நான் என் வெளிநாட்டுச் சுற்றுப் பயணத்தினல் அறிந்துகொண்ட படிப்பினை.

"உழுப்பின் வாரா உறுதிகள் உளவோ?" என்னும் கேள்வி பிறக்கின்றது. உங்கள் பதில் என்னவோ?

### சொற்பொருள் விளக்கம் :

பாரிஸ் - பிரெஞ்சு நாட்டின் தலை நகர், முல்லைக்குத் தேரீந்த மன்னன் பாரி, பட்டி தொட்டி - கிராமமும் குக்கிராமமும், ஏற்றம் - உயர்வு, வனப்பு - அழகு, வாட்டும் - வருத்தும், மடு - பள்ளம், தகவல் - செய்தி, உறுதி - நன்மை.

### பயிற்சி :

1. பொருள் வேறுபாட்டை விளக்கு :—
   பரி, பறி; விலை, வினை; அரிய, அறிய.

2. கோடிட்ட இடத்தை நிரப்பு :
சுறுசுறுப்பு சுறுசுறுப்பாளி.
குடை ——————.
உழைப்பு ——————.
படிப்பு ——————.

3. எதிர்ச்சொல் எழுது :—
முன், கனவு, ஏற்றம், சுத்தம்.

## வினாக்கள் :

1. 'யுனெஸ்கோ' என்பதன் முழுப் பெயரை எழுது.
2. நம் நாட்டவர்க்குள்ள தனி உரிமை யாது?
3. நம் நாட்டிலுள்ள திறமைசாலிகள் யாவர்?
4. நாகரிகத்தின் அளவு கோல் யாது?
5. மௌண்டு ரோட்டில் சந்திக்கக்கூடிய நல்ல நண்பர்கள் யாவர்?
6. இங்கிலாந்தில் தொழிலாளிகள் எவ்வாறு நடத்தப்படுகின்றார்கள்?
7. பிரிட்டிஷாரின் நாணயம் எவ்வாறு தெரியவரும்?
8. பிரிட்டிஷாரின் கல்வி முறையைப் பற்றி எழுது.

## கட்டுரையாக்கப் பயிற்சி :

கீழ் வருவன பற்றிக் கட்டுரை எழுது :—
'சுவிட்ஸர்லாந்தின் சிறப்பியல்புகள்', 'பிரிட்டிஷாரின் ஒழுங்கும் நாணயமும்', 'பிரிட்டிஷாரின் கல்வி முறை'.

## இலக்கணம் :

'திண்டாடு'—என்ற வினைச்சொல் 'திண்டாட்டம்' எனத் திரியுமிடத்துப் பெயர்ச்சொல்லாகும். இது தொழிற்பெயர் எனப்படும்.

கட்டுப்படு—கட்டுப்பாடு
புறப்படு—புறப்பாடு

இவ்வாறு வரும் தொழிற் பெயர்களை இப்பாடத்தினின்றும் எடுத்தெழுது.

## முன்னுரை

இவ்வாசக வரிசை, சென்னைக் கல்வியிலாக்கா அதிகாரிகள் 1957ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில் வெளியிட்டுள்ள பாடத்திட்டத்தை முற்றுந் தழுவி இயற்றப்பட்டுள்ளது. ஆரம்பப் பாடசாலையிற் பயிலும் மாணவ மாணவிகள், ஆரும் வகுப்பை முடிப்பதற்குள், தங்கள் தாய் மொழியிற் பிழையறப் பேசவும் எழுதவும், எடுத்த நூலைப் படித்துப் பொருள் உணரவும் வல்ல மொழிப் பயிற்சியைப் பெறுவதுடன், கல்வி கற்பதில் ஆர்வம் கொண்டு மேன்மேலும் கற்கவும் வழி வகுப்பது இப்பாடத்திட்டத்தின் நோக்கமாகும்.

இக்கருத்தை உட்கொண்டே இவ்வாசகம் இயற்றப்பட்டுள்ளது, என்பது ஆரம்பப் பாடசாலையிற் கல்வி கற்பிக்கும் அனுபவம் வாய்ந்த ஆசிரியர்கள் இதைக் கவனிப்பின் எளிதிற் புலனாகும். சிறுவர் சிறுமியர்க்கு மொழிப் பயிற்சியில் மகிழ்ச்சியுடன் ஈடுபடுதற்கான வகையில் இனியதும் எளியதும் விரும்பிக் கற்கத் தக்கதுமான முறையில் மொழியமைப்பும் பொருளமைப்பும் அமைந்துள்ளன.

தமிழ் மொழி பயில்வார் அம்மொழித்திறம் அறிந்து பயில்வதற்கு ஓரளவு இலக்கணப் பயிற்சிகளும் எளிய முறையில் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடத்தின் முடிவிலும் அப்பாடத்திற்பயின்று வந்துள்ள அருஞ்சொற்பொருளும், கேள்விகளும், சொல்லாட்சி, வாக்கிய அமைப்பு, சொற்பொருள்

உணர்வு முதலியவற்றுக்கான பயிற்சிகளும் தரப்பட்டுள்ளது.

சுருங்கக் கூறின், இவ்வாசக வரிசையைப் பயன் படுத்துவதால், கல்வியிலாக்கா அதிகாரிகள் கருத்தூன்றி வகுத்துள்ள பாடத்திட்டம் ஆரம்பப் பள்ளியிற்பயிலும் மாணவ மாணவிகளுக்கு மிகுந்த நலம் பயக்குமெனக் கூறலாம். ஆதலின், ஆரம்பக் கல்வித் துறையில் ஈடுபட்டுள்ள அறிஞர் பெருமக்கள் இதை ஆதரித்து என்னை ஊக்கியருள்வார்கள் என்னும் நம்பிக்கை எனக்குண்டு.

ஆசிரியன்

# பொருள் அடக்கம்

## செய்யுட் பகுதி

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தப சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

—இரவீந்திரநாத தாகூர்

## தமிழாக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.
நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

# ஆரும் புத்தகம்

---

## 1. சிங்கப்பூர்




1. 'அணிமாட அயோத்தி என்னும் பொன் னகர்' என அழகிற்சிறந்த நகருக்கு எடுத்துக்காட்டாகக் கம்பர் அயோத்தியைக் கூறியுள்ளனர். இப்பொழுது கீழை நாடுகளின் பொன்னகராய்த் திகழ்வது சிங்கப்பூர். அது செல்வச் சிறப்பாலும், வாணிகப்பெருக்காலும், தொழில் வளர்ச்சியாலும் ஈடும் எடுப்புமற்றதாய், மேனுட்டினர், 'கீழை நாடுகளின் வாயில்' என வியந்து கூறும்

வண்ணம், பல நாட்டு மரக்கலங்களும் வந்து தங்கும் துறைமுகத்தைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.

2. சிங்கப்பூர் 1819ஆம் ஆண்டில் ஒரு சிற்றூராகவே இருந்தது. ராப்பில்ஸ் என்ற ஆங்கிலேயர், அதனை மலேயா நாட்டின் ஒரு பகுதிக்கரசனாகிய ஜோகூர் சுல்தான் என்பவனிடமிருந்து ஆண்டொன்றுக்கு நாலாயிரத்தைந்நூறு ரூபாய் கொடுப்பதாக ஒப்பந்தம் செய்து பெற்றனர். பின்னர் அது ஆங்கிலேயர் உடைமையாகி, ஆங்கில ஆட்சியாளரால் ஆளப்பட்டது. இப்போது அது உரிமை பெற்ற நாடாய்த் திகழ்கின்றது. அது பதினான்கு கல் அகலமும் இருபத்தாறு கல் நீளமும் கொண்டது. அது ஒரு தீவேயாயினும், மூன்று பர்லாங்கு நீளமுள்ள பாலம் அதனை மலேயா நாட்டுடன் இணைக்கின்றது.

3. கண்ணையும் கருத்தையும் கவரும் பல கட்டடங்கள் அந்நகரிலுள்ளன. **கத்தே கட்டடம்** என்பது பதினான்கு மாடிகளை உடையது; அமெரிக்காவிற் காணப்பெறும் வானுயர் கட்டடங்களைப் போன்றது. அரசியலார் அலுவலகங்களும், மலேயா நாட்டின் ஒலி பரப்பி நிலையத்தைச் சார்ந்த படவுற்பத்திச் சாலைகளும், நாடகசாலையும், சிறந்த விடுதியொன்றும் அக்கட்டடத்தே அமைந்துள்ளன. வாஷிங்டனிலுள்ள '**காப்பிட்டல்**' என்னும் கட்டடத்தைப் போன்றதொரு கட்டடத்தில் அந்நகரின் உயர்நீதி மன்றம் உள்ளது.

4. சிங்கப்பூரில் மக்கள் மகிழ்ச்சியுடன் பொழுது போக்குவதற்குப் பற்பல இன்பக்களரி-



வானுயர் கட்டடம்

கள் உள்ளன. அவற்றுள் முதன்மையாகக் கூறத்தக்கவை, **புத்துலகம்**, பேருலகம், களி **யுலகம்** என்னும் கூத்து நிகழுமிடங்களாகும். கூத்துக்களேயன்றி, விளையாட்டுக்கள் பலவும் அங்கே நடைபெறுகின்றன. பொருட்காட்சிச் சாலைகளாகவும் அவ்விடங்கள் பயன்படுகின்றன. கண்ணுக்கினிய நடனங்களும், செவிக்கினிய பாடல்களும், நாவுக்கினிய பானங்களும், ஆடற்-

கினிய போட்டி விளையாட்டுக்களும் மக்களுக்கு இன்பம் பயக்கின்றன. சீன தேயத்தவர் ஆட-ரங்குகளும், மலாய்க்காரரர் நடன அரங்குகளும் மக்கள் மனத்தைக் கவர்கின்றன. மின்சாரத்-தால் இயங்கும் பல்வேறு சாதனங்கள் காண்போ-ருக்கு வியப்பை ஊட்டுகின்றன. மின்சாரத்தால் இயங்கும் தண்டவாளத்தின்மீது ஓடும் ஒரு வகை வண்டியில் அமர்ந்து செல்லின், அவ்வண்டி அமர்ந்திருப்போரை இருட்குகைக் கட்டடத்தினுள் கொண்டு செல்கின்றது. அக்கட்டடத்தின் உள்ளே செல்லச் செல்ல, இருள் அதிகரிக்-கின்றது. இடையிடையே மின்னல் போன்று ஒளி வீசும் சமயத்தில் பயங்கரமான பேருருவங்கள் காட்சியளிக்கின்றன. மின்சார வண்டி புறப்-பட்ட இடத்திற்கே வந்து சேர்கின்றது.

5. 'ஒருவாறு பிழைத்தோம்!' என்னும் எண்ணத்துடன் அவ்விடத்தை விட்டு நீங்கி, மற்றோரிடத்தை அடையின், அங்கு மின்சாரக் கம்பிகள் குறுக்கே இடப்பட்டுள்ள அரங்கில் ஆடவரும் மகளிரும் ஒருங்கே வண்டியோட்டும் காட்சி மகிழ்ச்சி விளைக்கின்றது. அழகிய வனிதையர் அமைதியுடன் வண்டியை ஒட்ட, அவர்-களை அல்லற்படுத்த அவர்கள் பின் ஆடவர் வண்-டியை ஒட்டிச் செல்வர்; பன்முறை அவர் செலுத்-தும் வண்டியின்மீது தம் வண்டியை மோதுவர். மோதுங்கால், வண்டிகள் கம்பியினின்றும் வில-கிச் செல்லாது நின்றுவிடும். பாவையர் பொறுமையுடன் புன்சிரிப்புத் தோன்ற, அதனை மீண்டும் செலுத்துவர். இது ஓர் வேடிக்கை யாகவே கருதப்படுகின்றது. துப்பாக்கியால்

குறி பார்த்துச் சுடுதல், கயிற்றில் தொங்கும் இரப்பர்ப் பையைக் கைம்முட்டியால் ஓங்கிக் குத்தித் தம் வன்மையை அறிதல், சொக்கட்டான் ஆடுதல் முதலியன ஆடவர்க்குரிய பொழுது போக்கு நிகழ்ச்சிகளாகக் கருதப்படுகின்றன. 'ரோங்கிங்' என்னும் மலாய் நடனம், கண்டு களிக்கத்தக்கது. திறந்த வெளியில் அமைந்த மேடையில் பெண்டிர் பலர் அமர்ந்திருப்பர். அவர்களுடன் நடனமாட விழையும் ஆடவர், அருகே சென்று நிற்பின், மங்கையர் எழுந்து நடனமாடத் தொடங்குவர். கால் நிலத்திலே படியாது ஆடுபவள் போன்று பெண் மிக மென்மையாக நடிப்பாள். ஆடவன் அவள் அருகில் செல்வான். ஆனால், அவன் அவளைத் தொடலாகாது. மற்போர்ப் போட்டிகளும் அங்கு நடைபெறும். இரவுப் பொழுதை இனிதாகக் கழிக்க அவ்வுலகங்கள் பெரிதும் பயன்படுகின்றன. அங்குள்ள மக்கள் அவற்றைப் பூலோக சுவர்க்கம் எனவே கருதுகின்றனர்கள்.

6. மக்கள் பசிப்பிணியால் வாடி நிற்கும் நிலை அந்நகரில் இல்லை. பிச்சைக்காரர் தொல்லை மக்களைத் துன்புறுத்துவதில்லை. வேலை செய்யுந் திறனுள்ளோருக்கு வருவாய்க் குறைவே இல்லை. கல்வி கல்லாத பாமர மக்களும் பேரூதியம் பெறுகின்றனர்கள். கட்டடங்களைச் சுத்தம் செய்தலும், பாதையைப் பழுதுபார்த்தலும், சில்லறை வேலைகளைச் செய்தலும் இந்தியரின் உரிமைத் தொழில்களாய் இருந்து வருகின்றன. இந்தியர் சீனர்களுக்கு அடுத்தபடியாக வாணிகத் துறையில் முன்னேறியுள்ளனர். இரப்பரால் பல்வேறு

பொருள்கள் செய்தலும், ஈயத்தை நன்முறையில் பக்குவப்படுத்தலும், தேங்காய் நெய் ஆட்டுத-லும், சோப்புச் செய்தலும், பிறவும் அங்குள்-ளோரின் தொழில்களாம்.

7. சிங்கப்பூரில் மக்கள் மன நிறைவுடன் வாழ்கின்றூர்கள். பற்பல நாட்டினரும் அங்குத் தம் தொழிலை யாதோர் இன்னலுமின்றிப் புரிந்து வருகின்றனர். தமிழர், தெலுங்கர், வடவிந்தியர், அராபியர், ஜாவாத் தீவினர், யாழ்ப்பாணத்தார், சீனர், ஆஸ்திரேலியர், ஆங்கிலேயர் ஆகியோர் அங்கு உறைகின்றனர்.

8. சிங்கப்பூர் பொதுத் துறைமுகப் பட்டின-மாதலின், அங்கு வாணிகப் பொருள்கள் ஏராள-மாக வந்து குவிகின்றன. பல கோடி ரூபாய்ச் செலவில் செம்மை செய்யப்பட்டுள்ள துறைமுகம், பல நாட்டு மரக்கலங்களும் வந்து தங்குவதற்-குரிய வசதி பெற்றுள்ளது. மக்கள் எளிதில் சுங்கவரியின்றித் தங்கள் பொருள்களைக் கொண்டு செல்கின்றூர்கள்.

9. 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை; பொருளுடையார்க்கு அடையலாகாத இன்பம் இல்லை,' என்பதைக் காட்ட அமைந்தது சிங்கப்-பூராகும். பொருள் வளம் அதனைப் பொன்னக-ராக்கியுள்ளது.

### சொற்பொருள் விளக்கம் :

அணி - அழகு, ஈடும் எடுப்புமற்ற - ஒப்பும் உயர்வு மில்லாத, இன்பக்களரி - இன்பமாகப் பொழுது போக்குவதற் குரிய இடம், ஆடரங்கு - நாடகசாலை, வனிதை - பெண், அல்லல் - துன்பம், பாவையர் - பெண்டிர், விழை - விரும்பு, தொல்லை - துன்பம், இன்னல் - துன்பம்.

## பயிற்சி :

1. கோடிட்ட இடத்தைத் தகுந்த சொல்லால் நிரப்பு :—
   (அ) இப்பொழுது கீழை நாடுகளின் —— திகழ்வது ——.
   (ஆ) அவற்றுள், முதன்மையாகக் கூறத்தக்கவை, —— என்னும் கூத்து நிகழும் இடங்களாகும்.
   (இ) —— என்னும் மலாய் நாடகம் கண்டு —— ——.
2. எதிர்ச் சொற்கள் எழுது :—

| | |
|---|---|
| கீழைநாடு × மேலைநாடு | பெருமை × ...... |
| பெருகு × ...... | நிறைவு × ...... |

3. பிரித்தெழுது :—
   மேனாட்டினர், தன்னகத்து, நாலாயிரம், ஆடரங்கு.
4. பின் வருவனவற்றைக் கொண்டு வாக்கியங்கள் எழுது :—
   பெருக்கு, கண்ணுக்கினிய, ஆகாயமளாவும், படியாது.

## வினாக்கள் :

1. சிங்கப்பூரின் சிறப்பு யாது ?
2. சிங்கப்பூரிலுள்ள சிறந்த கட்டடத்தைப் பற்றி விவரி.
3. சிங்கப்பூரிலுள்ள மூன்று உலகங்களைப்பற்றி எழுது.
4. சிங்கப்பூரில் மக்கள் மன நிறைவுடன் வாழக் காரணம் என்ன ?
5. சிங்கப்பூர்த் துறைமுகத்தின் சிறப்பியல்பு யாது ?
6. சிங்கப்பூரில் வாழும் மக்கள் புரியும் தொழில்கள் யாவை ?

## கட்டுரையாக்கப் பயிற்சி :

(அ) சிங்கப்பூரும் இன்பப் பொழுது போக்கும்
(ஆ) சிங்கப்பூரின் வரலாறு
(இ) சிங்கப்பூரில் மக்கள் வாழ்க்கை

## இலக்கணம் :

### சுட்டு (அகச்சுட்டு, புறச்சுட்டு)

1. வனிதையர் வண்டி ஓட்டுவர்; அவர் செலுத்தும் வண்டியினுமீது ஆடவர் தம் வண்டியை மோதுவர்.

2. பொன்னகராய்த் திகழ்வது சிங்கப்பூர்; அந்நகர் ஒரு சிற்றூராய் இருந்தது.

முதல் வாக்கியத்திலுள்ள 'வனிதையர்' என்னும் சொல்லை, அதன்பின் வரும் 'அவர்' என்னும் சொல் சுட்டு-கின்றது. ஆதலின், 'அவர்' என்ற சொல்லில் உள்ள 'அ' என்பது சுட்டெழுத்தாகும்.

இரண்டாம் வாக்கியத்திலுள்ள 'சிங்கப்பூர்' என்னும் சொல்லை, அதன்பின் வரும் 'அந்நகர்' என்னும் சொல் சுட்டுகின்றது. ஆதலின், 'அந்நகர்' என்பதிலுள்ள 'அ' சுட்டெழுத்தாகும். ஆயினும் அவர் என்ற சொல்லில், 'அ' என்னும் எழுத்து அகத்தே நின்று சுட்டுகின்றது. ஆதலின், இது அகச்சுட்டாகும். அந்நகர் என்பதில் 'அ' என்னும் எழுத்து 'நகர்' என்னும் சொல்லுக்குப் புறத்தே நின்று சுட்டுகின்றது. ஆதலின், இது புறச் சுட்டாகும்.

சொல்லின் அகத்தே நின்று பொருளைச் சுட்டுவது 'அகச் சுட்டு' எனப்படும்; சொல்லுக்குப் புறத்தே (வெளியே) நின்று பொருளைச் சுட்டுவது 'புறச்சுட்டு' எனப்படும்.

பின் வருவன இன்ன சுட்டு என்பதைக் குறிப்பிடு :—

அது, அங்கு, அவை, அவ்விடங்கள், அவ்வண்டி, இது, அவள், அவ்வுலகங்கள், இவ்வூர்.

## 2. ஓவியக்கலை



1. மக்கள் தாங்கள் கண்ட அழகான பொருள்களையும், மனத்திற்கொண்ட கருத்துக்களையும் பிறருக்கு அறிவிப்பதில் இன்பங்கொள்ளுகிறார்கள். இவற்றை அறிவிப்பதற்குப் பல வழிகள் உள்ளன. அண்மையில் உள்ளவர்களுக்கு வாய்மொழியாகப் பேசித் தெரிவித்தல், தூரத்திலுள்ளவர்களுக்கு எழுதித் தெரிவித்தல், இனிமையான இசைப்பாட்டால் தெரிவித்தல், சித்திரங்கள் வரைந்தும் உருவங்கள் செதுக்கியும் உணர்த்துதல் முதலான வழிகள் ப்யன்படுகின்றன. இவையே பேச்சு, எழுத்து, இசை, சித்திரம், சிற்பம் என்னும் கலைகளாய் வளர்ந்தன. இக்கலைகளின் வளர்ச்சி

மக்களின் உணர்ச்சிப் பெருக்கையும் அவற்றைப் புலப்படுத்தும் திறமையையும் பொறுத்ததாகும். மக்கள் சிறப்புடன் செல்வம் பெற்று இன்ப-வாழ்க்கை நடத்தும்போது இக்கலைகள் பெருகும். அவர்கள் வறுமையால் துன்புறும்போது இவை நாளடைவில் அழிந்து மறையும்.

2. தமிழ் நாடு முன் காலத்தில் செல்வமும் வளனும் பெற்றுப் பற்பல துறைகளிலும் சிறப்புப் பெற்றிருந்தது; பல கலைகளும் வளர்ச்சியுற்-றிருந்தன. அவைகளுள் ஒன்ருன 'ஓவியம்' என்-னும் சித்திரக் கலையும் மேம்பாடுற்றிருந்தது. பண்டை நூலாகிய **சிலப்பதிகாரம்**, மாதவி என்-னும் பெண் ஓவியநூல் கற்றிருந்தாள் என்பதைத் தெரிவிக்கிறது. இதனுல், ஆடவர்களேயன்றிப் பெண்டிரும் ஓவியக் கலையில் தேர்ச்சி பெற்றிருந்-தனரென்பது தெளிவாகும். மனிதர் நிற்கும் நிலை, இருக்கும் நிலை, இயங்கும் நிலை முதலியவற்றைப் படங்களில் எவ்வாறு தீட்டுவதென்பது ஓவிய நூலில் எழுதப் பெற்றிருந்தது. இந்த உலகத்திற் காணும் உயிர் வகைகளுள் ஒவ்வொன்றையும் உள்ளது உள்ளவாறு படத்தில் எழுதிக் காட்டும் வகையும் அந்நூலில் கூறப்பட்டிருந்தது.

3. பண்டைக் காலத்தில் பெரிய மாளிகை-களின் சுவர்களில் ஓவியங்கள் வரையப் பெற்றி-ருந்தன. முதலில் சுவரைச் சிறிதும் மேடுபள்ள-மின்றிச் சமனுக்கி, சுண்ணும்பு பூசி, அதன்மீது அழகிய ஓவியங்களைக் கண்ணைக் கவரும் முறையில் வரைந்தனர். பிராணிகளின் உருவங்கள், மலர்கள், வரலாற்று நிகழ்ச்சிகள் முதலியன விளக்கமாகத் தீட்டப்பட்டன. திருவிதாங்கூரைச் சேர்ந்த

பதுமநாபபுர அரண்மனையின் சுவர்களில் அழகிய ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. அந்தப்புர மாதர் கண்டு களிப்பதற்காக அவை தீட்டப்பட்டன எனக் கூறுவர். அழகிய மாதர்கள் ஊஞ்சலாடு-தல், பாடுதல், ஆடுதல் இவற்றைச் சித்தரிக்கும் ஓவியங்கள், அக்கால மாதர்கள் அணிந்த ஆடை வகையினையும் அணிகலன்களையும் விளக்குகின்-றன. அரசர்களின் திருவுருவங்களைத் தீட்டியுள்ள ஓவியங்கள் அவர்களுக்கு விரோதமாகச் செய்யப்-பட்ட சூழ்ச்சிகளையும் அவற்றினின்றும் அவர்கள் தப்பிச் செல்வதற்காக அவர்களுடைய பணியாட்-கள் தங்கள் உயிரைக் கொடுக்கத் துணிந்த தீரத்-தையும் நம் மனக்கண்முன் கொண்டு வருகின்றன. பாத்திரங்கள், அணிகலன்கள், ஆடைகள், மரச்-சாமான்கள், கட்டில்கள் முதலியவற்றிலும் சிறந்த உருவங்கள் காட்சியளிக்கின்றன.

4. **சித்தன்ன** வாசல் என்னும் ஊரிலுள்ள கோவில், ஓவியச் சிறப்பைக் காட்டுவதற்கு இடமா-யமைந்துள்ளது. கோவில்களின் சுவர்களிலும் கூரைகளிலும் தூண்களிலும் அழகான ஓவியங்கள் காணப்படுகின்றன. அரசர், அரசியர், நடன-மாதர், கடவுளர் இவர்களுடைய ஓவியங்கள் உள்-ளன. இவற்ருல், அக்கால மக்களின் ஓவியத் திற-மையும், ஆடை அணி முதலிய ஒப்பனைகளும் நன்கு தெரியவரும். **இராசராசன்** என்ற சோழ அரசன் தஞ்சையிற்கட்டிய கோவிலில் பல ஓவி-யங்களை எழுதுவித்தான். புராணக்கதை நிகழ்ச்சி-கள் அங்கே காணப் பெறுகின்றன. சமயக் கொள்கைகள், வழிபாடுகள் முதலியவற்றை அவ்-வோவியங்களால் நாம் அறிந்துகொள்ளலாம்.

5. மனிதன் தோன்றிய காலத்திலேயே ஓவியக் கலையும் தோன்றியது. மனிதன் தன் மனத்திலெழும் அழகுணர்ச்சியை வடிவத்தில் அமைக்க விரும்பினான்; மிருகங்கள், பறவைகள் முதலியவற்றின் வடிவத்தைச் செம்மண்ணாலும் கரியாலும் சுவர்களில் வரைந்தான். அதனைப் பார்க்குந்தோறும் அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டிருத்தல் கூடும். அந்த மகிழ்ச்சியே காகிதம், துணி, பலகை முதலியவற்றின்மீதும் ஓவியங்களை வரைய அவனைத் தூண்டியது. சிலர் இயற்கைக் காட்சிகளை அப்படியே சித்திரித்துக் காட்டினர். காலஞ்செல்லச் செல்ல, உருவங்களுக்கு வண்ணந்தீட்டும் வழக்கம் ஏற்பட்டது. பல வித வண்ணங்களைக் குழைத்துத் துகிலிகை கொண்டு தீட்டினர். திரைகளில் இத்தகைய வண்ண ஓவியங்கள் வரையப்பட்டன. கதைகளும் கவிகளும் ஓவியங்களாய் மாறின. நகைச்சுவை தோன்றப் படங்கள் எழுதப்பட்டன. ஆடைகளிலும், வீடுகளிலும் ஓவியங்கள் காட்சியளித்தன. பஞ்சு நூலாலும், பட்டு நூலாலும், சரிகையாலும் ஓவியங்கள் அமைக்கப்பட்டன.

6. தமிழ் நாட்டில் ஓவியக்கலை உயர்வு பெற்றிருந்தது என்பதைப் பழந்தமிழ் நூல்களால் அறியலாம். ஓவியப் புலவர் பலர் வாழ்ந்தனர். அரசருட்சிலரும் ஓவியம் வரைவதில் கைதேர்ந்தவராயிருந்தனர். அரண்மனைதோறும் சித்திர மண்டபங்கள் எழுந்தன. கோவில்கள் எழுத்தோவிய நிலையங்கள் ஆயின. சங்ககாலத்திற்குப்பின் ஏறக்குறைய ஐந்நூறுண்டுகள் வரை அயலார் படையெடுப்பால் துன்புற்றது. பின்பு, ஏழாம் நூற்-

ருண்டு முதல் ஒன்பதாம் நூற்ருண்டுவரை பல்லவ மன்னர் ஓவியக் கலையை வளர்த்தனர். ஒன்பதாம் நூற்ருண்டிற்குப் பிறகு தஞ்சையில் சோழர் ஆட்சி புரிய ஆரம்பித்தனர். சிவப்பணி செய்வதற்காகக் கோவில்கள் கட்டிய அவர்கள், ஓவியக் கலையையும் சிறப்பித்தார்கள். அண்மையில் சேர நாட்டு ஓவியப் புலவர் **இரவிவர்மா** என்பவர் ஓவியக் கலையைப் புதுமுறையில் வளர்த்தனர். மேல்நாட்டு ஓவிய முறைகளும் ஆதரிக்கப்பட்டன. இந்திய நாட்டின் பற்பல பகுதிகளிலும் ஓவியக் கலை போற்றப்பட்டு வருகிறது.

7. 'சித்திரமும் கைப்பழக்கம்,' என்பது தமிழ் நாட்டு முதுமொழி. ஓவியக்கலை உயர்ந்-தோங்க, நம் நாட்டுப் பழைய ஓவியங்களைப் படமெடுத்துப் பள்ளிகளிலும், பொருட்காட்சிச் சாலைகளிலும் வைத்து, யாவரும் கண்டுகளிக்கச் செய்யவேண்டும். அதனுல், இளைஞரும் முதிய-வரும் ஓவியம் தீட்ட முன் வருவர். ஓவியக் கலை-யைப் பற்றிய நூல்களை வெளியிட வேண்டும். ஓவியப் போட்டிகள் நடத்தி, ஊக்கமளித்தல் வேண்டும். இவ்வாறு செய்யின், நாட்டில் மீண்-டும் ஓவியக்கலை வளர்ச்சியுறும்.

### சொற்பொருள் விளக்கம்

அண்மை - சமீபம், வளன் - செழிப்பு, இயங்குதல் - அசைதல், வண்ணம் - நிறம், கை தேர்ந்திருத்தல் - தேர்ச்சி பெற்றிருத்தல், பணி - தொண்டு, தீட்டுதல் - வரைதல், மீண்டும் - திரும்பவும், போற்றப்படுதல் - பாராட்டப்படுதல்.

### பயிற்சி :

1. இரு பொருள் எழுது :—
   கலை, களி, தீட்டு, நூல்.
2. பிரித்தெழுது :—
   மேனடு, பற்பல, எழுத்தோவியம், நூற்றண்டு, சிலப்பதிகாரம்.
3. குறிப்பெழுது :—
   இரவிவர்மா, சித்தன்னவாசல்.

### வினக்கள் :

1. மக்கள் தங்கள் கருத்தை எவ்வாறு தெரிவிப்பார்கள் ?
2. கலைகள் எவ்வாறு வளர்ந்தன ?
3. சிலப்பதிகார நூலில் ஓவியக் கலையைப் பற்றிக் கூறியுள்ளது யாது ?
4. பண்டை மாளிகைகளிற் காணப்படும் சித்திரங்கள் எவற்றை விளக்குகின்றன ?
5. சித்தன்ன வாசல் ஓவியங்களால் அறியப்படுவன யாவை ?
6. மனிதன் முதலில் ஓவியத்தை எவ்வாறு வரைந்தான் ?
7. சித்திரக்கலை வளர நாம் மேற்கொள்ள வேண்டுவன யாவை ?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'ஓவியக்கலை வளர்ந்த விதம்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம் :

#### வின (அக வின, புற வின)

உனக்கு வேண்டுவது என்ன ?
இங்கு வந்தவர் யாவர் ?
நீ ஏன் திருடினய் ?

இவ்வாக்கியங்களிலுள்ள 'என்ன', 'யாவர்', 'ஏன்', என்பன வினச்சொற்கள் ; இவற்றிலுள்ள எ, யா, ஏ என்-

பன சொற்களின் உள்ளே நின்று வினாப் பொருளைத் தருகின்றன. இவை அகவினா எனப்படும்.

முதலில் ஓடியது எக்குதிரை ?
வந்தவன் இராமனா ?
நீ தேர்ச்சி பெற்றது யாங்ஙனம் ?
நீ கடிதம் எழுதினாயோ ?
நான் இதைச் செய்வேனே ?

இவ்வாக்கியங்களிலுள்ள 'எக்குதிரை', 'யாங்ஙனம்', 'செய்வேனே', 'இராமனா', 'எழுதினாயோ' என்பன வினாச்சொற்கள் ; இவற்றிலுள்ள எ, யா, ஏ, ஆ, ஓ என்பன சொற்களின் புறத்தே நின்று வினாப்பொருளைத் தருகின்றன. எனவே, இவை புற வினா எனப்படும்.

கீழ் வருவனவற்றுள் அக வினாவையும், புற வினாவையும் எடுத்தெழுது :—

யாவரும் கண்டு களிக்கின்றனர் ?
ஓவியக் கலை எவரால் வளர்க்கப்பட்டது ?
தமிழை ஒப்பற்ற மொழி எனக் கூறுவது புகழாகுமே?
கலைகள் எவ்வாறு வளர்ந்தன ?
அவன் பரிசு பெற்றானா ?
உனக்கு இக்காற்றாடி எங்குக் கிடைத்தது ?

## 3. கற்பின் வன்மை

1. காவிரி நதி பாயும் வளமிக்க சோழநாட்டை ஆண்டு வந்த கரிகாற்சோழன், உழுதொழில் புரிந்து வந்த நாங்கூர் வேள் என்பவர் மகளை மணஞ்செய்தான். நாங்கூர் வேண்மாள் வயிற்றில் பிறந்தவள் ஆதி மந்தி என்னும் அழகுமிக்க மங்கை. அறிவிற்சிறந்து, புற அழகுக்கேற்ப அடக்கமும், ஒழுக்கமும் பெருங்கற்பும் பேரணியாகக் கொண்டு விளங்கினள் அவ்வனிதை. அரசிளங்குமரர் பலர் அவளைத் தம் இல்லாளாகக்கொள்ள அரிதின் முயன்றனர். ஆயினும், ஆட்டன் அத்தி என்ற ஆடலிற்சிறந்த சேரவரசனே அவள் மனத்திற்குகந்தவனாயினன். அவன் கரிகால் வளவன்பால் ஆதி மந்தியை இரந்து பெற்று, அவள் இல்லத்தைத் தனதில்லமாகக் கொண்டு, சோழ நாட்டிலேயே வளர்ந்து வரலாயினன்.

2. சோழநாட்டில் ஆண்டுதோறும் காவிரிப் புதுப்புனல் விழா நடைபெறும். அரசன் தன் குடும்பத்துடனும் அமைச்சருடனும் தானைத்தலைவருடனும் அவ்விழாவைச் சிறப்பிப்பன். அவர்கள் கழார் என்னும் ஊரையடுத்த துறையில் காவிரியின் அழகைக் கண்டு களித்திருந்தார்கள். ஆடலில் வல்ல ஆட்டனத்தி, மிக அழகாக ஓடிவரும் புதுப்புனலில் இறங்கி, நடனங்கள் பல செய்து, தனக்கு அக்கலையிலுள்ள வன்மையைக் காட்டுவான்போன்று நீந்தினான். அதனைக் கண்ணுற்ற கரிகாலன் முதலியோர் வியப்பும் மகிழ்வும் எய்தினர். திடீரெனக் காவிரி பெருக்கெடுத்து

ஒரு சுழலில் அவனை அமுக்கி இழுத்துக்கொண்டே சென்றது. ஆதி மந்தி, தன் கணவன் நீரால் இழுத்துச் செல்லப்படுவதைக் கண்டு அலறினள். கரிகாலன் ஆட்டனத்தியைக் கரைக்குக் கொணரு-மாறு தன் ஏவலாளருக்குக் கட்டளையிட்டான். காவிரியின் பெருக்கை எதிர்த்து அவர்களால் யாது செய்ய இயலும்? ஆயினும், அரசன் ஆணைக்கு இணங்க நீரில் குதித்தனர் பலர். ஏவலர் அவனரு-கில் சென்றனரேயன்றி, அவனை மீட்டுக்கொணர்ந்-தாரில்லை. சிறிது நேரத்தில் அவன் நீரில் மூழ்கி-விட்டனன். கண்டான் கரிகாலன்! கவலை மீக்-கூர்ந்து கலங்கினன்; அரிப்புக்காரரைக் கொண்டு காவிரியின் எல்லாத் துறைகளிலும், மடுக்களிலும் மதகுகளிலும் ஆட்டனத்தியின் உடலைத் தேடுவித்-தான். காவிரி ஆட்டனத்தியைக் கடலிற்கொண்டு போய்ச் சேர்த்துவிட்ட பின், அவன் அவர்களுக்கு எவ்வாறு அகப்படுவான்? அரிப்புக்காரர் தேடித் தேடிச் சோர்ந்து வறிதே மீண்டனர்.

3. அத்தி அகப்படாமையை அறிந்த ஆதி மந்தி, உயிரிழந்தாள் போன்று மூர்ச்சித்து விழுந்துவிட்டாள். சிறிது நேரங்கழித்து எழுந்த அவள், "ஆட்டனத்தியைக் கண்டீரோ? அவ-ரைக் கடல் கொள்ளவில்லை! காவிரிப்புனலும் அடித்துப் போகவில்லை! எங்கேயோ நடனஞ் செய்யச் சென்றிருக்கிறர்!" என்றனள்; பின்னர்க் காவிரிக்கரை வழியே சென்று ஊர் ஊராய்த் தேடி-னள். வீரர்கள் கூடி விநோதக்கூத்து நிகழ்த்து-மிடங்களிலும், மகளிர் கூடித் துணங்கைக் கூத்து ஆடுமிடங்களிலும் சென்று, 'என் காதலரைக் கண்டீரோ?' என்று கேட்டுக்கொண்டே, கடலை

அடைந்து, கடற்கரையில் நின்று புலம்பினுள். 'காவிரித்தாயே, உன்னைப்போலும் மங்கையாகிய என்னை நீ மாங்கல்யம் இழக்கச் செய்வாயோ? என் தந்தையின் புதல்வியில்லையோ நீ? உன் உடன் பிறந்தாளின் உறுதுயர் போக்காயோ? உனக்கு அரிதின் முயன்று அழகிய கரையிடுவித்த என் தந்தைக்கு நீ செய்யும் கைம்மாறு இதுவோ? கடிதில் என் கணவரை எனக்குக் காட்டு. யான் அவரைப் பிரிந்து உயிர் வாழச்சகியேன்! என்னையும் அவருடன் சேர்ப்பி,' என வருந்திக் கூறினள்.

4. ஆட்டனத்தி அலை நீரால் அடித்துக் கொண்டு போகப்பட்டானேயன்றி உயிர் நீங்கினுனில்லை. உணர்ச்சியற்ற அவன் உடலை மருதி என்ற பாடினி கண்டு, தன் இல்லத்துக்கு எடுத்துச் சென்று, இளைப்பாற்றி, உயிர் பிழைக்கச் செய்தாள். அவன் உயிர் பெற்றெழுந்து, அவளுடன் வாழ்ந்து வரலாயினன். அவன் முன் போல ஆடல் நிகழ்த்த, மருதி பாடல் இசைத்தனள். அவளது இசையின்பத்தில் ஈடுபட்ட அத்தி, ஆதி மந்தியை மறந்தனன்; மருதியின் மாசிலா அன்புடைமைக்கு நன்றியுள்ளவனுய் அவள் விரும்பியவாறு அவளுடன் கடற்கரையில் வாழ்ந்தனன்.

5. ஆதி மந்தியின் அழுகுரல் கேட்ட மருதி, விரையில் வெளியே வந்து, அவளை அண்மி, 'அம்மா, உனக்குற்ற துன்பம் யாது?' எனக் கேட்டனள். ஆதி மந்தி, 'அன்னையே, என் பெயர் ஆதி மந்தி. யான் கரிகாற்பெருவளத்தான் மகள்; ஆடலிற்சிறந்த அத்தியை மணந்தேன். நாங்கள் கருத்தொருமித்து வாழ்க்கை நடத்தினேம்; காவி-

ரிப் புதுப்புனல் ஆட வந்தோம். காவிரியின் அழ-கில் ஈடுபட்டு ஆடிய என் ஆட்டனத்தியை அவள் கடலிற்கொண்டு சேர்த்துவிட்டாள். கணவரை இழந்து புலம்புகின்றேன்! கடற்கரையில் வாழும் அன்னுய், நீ அவரைக் கண்டாயோ?' என வினவினள். அது கேட்ட மருதி மனமுருகினள்;



தான் கடலினின்றும் கொண்டு சென்றவன் அவள் கணவனே என்பதை அறிந்தனள்; அத்தியை அழைத்து வந்து, அவள்முன் நிறுத்திஞள். ஆதி மந்தி அளவிலா உவகையுடன் ஆனந்தக் கண்ணீர் உகுத்தனள். நெடுநேரம் இருவரும் பிரிந்திலர். அவரது அன்பைக் கண்ட மாருதி, ஆதி மந்தியின் கற்புத்திறனே வியந்தாள்; அவள் இல்வாழ்க்-கைக்கு இடையூருகத் தான் வாழ்வது தக்கதன்று

என மனத்தில் எண்ணினள் ; ஆதி மந்தி தன் கணவனைப் பிரிந்து உயிர் வாழ இயலாமையை உணர்ந்தனள் ; 'இவ்வுடம்பு நமக்கு இனி வேண்டுவதின்று,' என எண்ணிக் கடலிற்பாய்ந்து இறந்தனள்.

6. அதனால் பெரிதும் துயருற்ற ஆதி மந்தியும் ஆட்டனத்தியும் மருதியின் தன்னலமற்ற தன்மையை எண்ணியெண்ணி யுருகினர் ; பின்னர்த் தம் ஊர் சென்றனர். அவர்களைக் கண்ட அனைவரும் ஆதி மந்தியின் கற்புத்திறனையும் அன்பின் மிகுதியையும் பெரிதும் வியந்தனர். ஆதி மந்தி தன் கற்பின் வன்மையால் இழந்த தன் கணவனை மீண்டும் பெற்று, உலகம் புகழ இல்லறம் நடத்தினள்.

### சொற்பொருள் விளக்கம் :

கரிகாற்சோழன் - பகைவரால் இடப்பட்ட தீயாற் கால் கரியப்பெற்ற சோழ மன்னன், வேள் - உழுவித்துண்ணும் வேளாளன், புனல் - நீர், ஆட்டன் - ஆடுவதில் சிறந்தவன், (கூத்தன்), நடனம் - நர்த்தனம், மீக்கூர்ந்து - அதிகரித்து, மடு - பள்ளம், கரையிடுவித்தான் - காவிரியின் நீர் பயனன்றி ஓடி வயல்களை அழியாதபடி கரை கட்டச் செய்தான், மருதி- பாணர் வகுப்பைச் சேர்ந்தவள் ; இசையையே தொழிலாகக் கொண்டவள்.

### பயிற்சி :

1. பிரித்து எழுது :—
   பேரணி, மாசில்லா, பாடலழகு.

2. இரு பொருள் எழுது :—
   களி, அரிப்பு, அத்தி, பிழை, அணை.

3. கோடிட்ட இடத்தை ஏற்ற சொல்லால் நிரப்பு :—

இடு — இடுவி
சேர் — ——
புரள் — ——
—— — நடத்து.

### வினாக்கள் :

1. ஆதி மந்தி யாரை மணந்தாள் ?
2. 'ஆட்டனத்தி' என்னும் பெயர்க் காரணம் யாது ?
3. ஆட்டனத்தி காவிரியில் மூழ்கக் காரணம் என்ன ?
4. ஆதி மந்தி தன் கணவனைத் தேடி எங்குச் சென்றனள் ?
5. நீரில் மூழ்கிய அத்தி, யாரால் மீட்கப்பட்டனன் ?
6. ஆதி மந்தி தன் கணவனை மீண்டும் பெற்ற விதம் யாது ?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

ஆதி மந்தி ஆட்டனத்தியைத் தேடிச்சென்ற நிகழ்ச்சியை நீ நேரிற்கண்டாற்போல ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம் :

#### உயிர், மெய்யின் வகை

(குறில், நெடில், வலி, மெலி, இடை.)

(அ) உயிரின் வகை :—

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ—இவ்வெழுத்துக்கள் பன்னிரண்டும்உயிரெழுத்துக்கள். இவற்றை உச்சரிக்குமிடத்து, அ, இ, உ, எ, ஒ என்பன ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்பனவற்றைவிட உச்சரிப்பில் குறைந்து ஒலிப்பதையறியலாம்.

குறுகி ஒலிக்கும் எழுத்துக்கள், குறில் அல்லது குற்றெழுத்து எனப்படும்.

நீண்டு ஒலிப்பவை, நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும்.

உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டில், குறில் ஐந்து; நெடில் ஏழு,

குறில் :—அ, இ, உ, எ, ஒ.

நெடில் :—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

ஆதலின், உயிர் எழுத்துக்கள் குறில், நெடில் என இரு வகைப்படும்.

(ஆ) மெய்யின் வகை :—

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—இவை பதினெட்டும் மெய்யெழுத்துக்கள். இவற்றை உச்சரிக்கும்போது, க், ச், ட், த், ப், ற் என்பன வன்மையான ஓசையுடையனவாயும், ங், ஞ், ண், ந், ம், ன் என்பன மென்மையான ஓசையுடையனவாயும், ய், ர், ல், வ், ழ், ள் என்பன இடைப்பட்ட ஓசையுடையனவாயும் ஒலித்தலை அறியலாம்.

வன்மையான ஓசையுடையன, வல்லெழுத்து, வல்லினம், வன்கணம் எனவும் ; மென்மையான ஓசையுடையன, மெல்லெழுத்து, மெல்லினம், மென்கணம் எனவும்; இடைத்தரமான ஓசையுடையன இடையெழுத்து, இடையினம், இடைக்கணம் எனவும் பெயர் பெறும்.

வல்லெழுத்து :—க், ச், ட், த், ப், ற்,—க, ச, ட, த, ப, ற.

மெல்லெழுத்து :—ங், ஞ், ண், ந், ம், ன்—ங, ஞ, ண, ந, ம, ன.

இடையெழுத்து :—ய், ர், ல், வ், ழ், ள்—ய, ர, ல, வ, ழ, ள.

மெய்யெழுத்துக்களை உச்சரிக்கும்போது ‘ அ ’ என்னும் உயிரெழுத்தைச் சேர்த்தே உச்சரிக்க வேண்டும்.

## 4. பிசிராந்தையார்

1. பண்டைப் புலவர் புலமையிற் சிறந்து விளங்கினர்; தம் புலமைக்கேற்ற பொற்புறு குணங்கள் அமைந்து, மக்களுக்கு எடுத்துக் காட்டாய் வாழ்ந்து வந்தனர். அவருள் மனை வாழ்க்கை மாண்புறப் பொருந்தி, நட்புப் பேற்றுக்குச் சிறந்த சான்ருய், நூல் வல்லோரும் பிறரும் புகழத்தக்க மாண்புமிக்க குணக்குன்ருய்த் திகழ்ந்தவர் பிசிராந்தையார் என்னும் தண்டமிழ்ப்புலவர். பாண்டி நாட்டுக் கடற்கரையை அடுத்த 'பிசிர்' என்பது அவர் பிறந்த ஊராகும். அவர் பிசிர் என்னும் ஊரிற் பிறந்தமையானும், ஆதன் தந்தையாதலின் ஆந்தை என்னும் பெயர் உடைமையானும், 'ஆர்' என்னும் சிறப்பு விகுதி சேர்த்துப் 'பிசிராந்தையார்' என வழங்கப்பட்டார்.

2. பிசிராந்தையார் இளமையில் தமிழ் இலக்கிய இலக்கணங்களைத் தக்க ஆசிரியர்பால் கற்று, கற்றதற்கேற்ப ஒழுக்கமும் வாய்க்கப் பெற்றனர். அவரது நல்லியல்புக்கேற்றவாறு, அவர் மனைவியாரும் நிறைந்த கல்வியும் சிறந்த ஒழுக்கமும் உடையவர்; தம் மக்களுக்குக் கல்வியறிவைத் தாமே புகட்டி வந்தனர். 'சிறுமையிற் கல்வி சிலையில் எழுத்து,' என்பதற்கிணங்க, பிசிராந்தையாருடைய மக்கள் கல்வியறிவிற் சிறந்து, ஒழுக்கமுடையவர்களாய், 'அன்னையும் பிதாவும்முன்னறி தெய்வம்,' எனப் பெற்ருேரைப் போற்றி ஒழுகினர்கள்; இங்ஙனம், 'மாண்ட என் மனைவியொடு

மக்களும் நிரம்பினர்,' எனப் புலவர் பிறரிடம் புகழ்ந்து கூறும் வண்ணம் மக்களும் மனைவியாரும் அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து புலவர் விருப்பம் போல நடந்து வந்தமையால், புலவரது இல்லறம் நல்லறமாய்த் திகழ்ந்தது.

3. அக்காலத்தில் **பாண்டியன் அறிவுடை நம்பி** என்பான் பாண்டி நாட்டைப் புரந்து வந்தான். அவன் சிறந்த ஒழுக்கமுடையவன்; கல்வி கேள்விகளிற் சிறந்தவன்; அறிவு ஆற்றல்களில் மிக்கவன். எனவே, அவனைக் குடிகள் போற்றி, '**அறிவுடை நம்பி**' என வழங்கினார்கள். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்,' என்னும் மூதுரைக்கு இணங்க, அறிவு மிக்க புலவர் பலர் அறிவுடை நம்பியை அடைந்து, அவனுடன் அளவளாவி மகிழ்வர். அவனும் அவருடன் அளவளாவி மகிழ்தலையே பெரிதும் விரும்பி வாழ்வானாயினன். கற்றவர்பால் அறிவுரை கேட்டு அதன் வழி ஒழுகுபவனாய்க் கற்றாரின் நன்மதிப்புக்குரியவனாதலின், புலவர்களை அச்சமின்றி அவனுடன் பழகி அவனுக்கு உறுதி மொழி புகன்றார்கள்.

4. ஒரு நாள் அரசவையில், 'அரசன் குடிகளிடம் எவ்வாறு இறைகொள்ளவேண்டும்?' என்னும் வினா எழுந்தது. அப்பொழுது பிசிராந்தையார் அரசனை நோக்கி, "அரசரேறே, ஒருமா என்னும் அளவினும் குறைந்த நிலமாயினும், அதில் விளைந்த நெல்லைக்கொண்டு யானைக்குப் பல நாட்கள் கவளமாகிய உணவை அளிக்கலாம். ஆனால், நூறு செய் அளவுடைய பெரிய நிலமாயினும், யானையையே அதன்கண் விளைந்த நெல்லை உண்ணும்படி விட்டுவிட்டால், அது உண்-

ணும் நெல்லைவிடக் காலால் மிதித்துப் பாழாக்கும் நெல்லே அதிகமாகும். அது போலவே, அரசன் திறை வாங்கும் முறைப்படி குடிகளிடமிருந்து வாங்குவானாயின், குடிகள் மிகுதியான பொருளை அவனுக்குச் சம்பாதித்துக்கொடுத்துத் தாங்களும் தழைத்து வாழ்வார்கள். அவ்வாறன்றி, தீங்கு நினைப்பவரும், கீழ்மக்களும், அரசியல் முறையை நன்கு உணராதவர்களும், அரசனுக்கு உறுதி கூறாது அவன் மனங்கோணாது நடத்தல் வேண்டு-மென எண்ணி ஒழுகுபவருமான அமைச்சரும் பிறரும் சொல்வதைக் கேட்டு அரசன் குடிகளை வருத்திப் பொருள்கொள்வானாயின், யானை புகுந்த வயல் போல அவனும் உண்ணப்பெறான்; குடிமக்-களும் அழிவார்கள்,'' என்றுரைத்தார். பாண்டி-யனும் அவரது அறிவுரையை ஏற்று அதன்படி நடந்தான். புலவர் அரசனிடம் பரிசில் பெற்றுத் தம்மூர் சென்றனர்.

5. பிசிராந்தையாரின் உயிர் நண்பன் உறை-யூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்த கோப்பெருஞ்சோழன் ஆவன். இருவரும் ஒருவரையொருவர் நேரிற்கண்டவரல்லர். ஆயி-னும்,

'புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.'

என்ற வள்ளுவர் வாக்குக்கு இலக்காய், அவ்-விருவரும் ஒருவரை ஒருவர் பாராமலும், கலந்து பழகாமலுமிருந்தும், உணர்ச்சியால் நட்புக்-கொண்டவராவர். பிசிராந்தையார் புலவர் பிற-ருடன் அளவளாவுங்காலத்தும் தம் நண்பனாகிய

கோப்பெருஞ்சோழனுடைய நற்குணங்களைப் பாராட்டி மகிழ்வர். கோப்பெருஞ்சோழனும் ஆந்தையார்பால் உயரிய நட்புக்கொண்டிருந்தான். இவ்வாறிருக்குங்கால், கோப்பெருஞ் சோழன் தன் மக்களின் தீயொழுக்கங்காரணமாக உயிர் துறக்க எண்ணி, வடக்கிருக்கத் துணிந்தனன்.



6. சோழன் வடக்கிருத்தலை அறிந்து, சான்-றோர் பலர் அவனைச் சூழ்ந்தனர். அவன் தன் ஆருயிர் நண்பரான ஆந்தையாருக்கு ஓரிடம் ஒழித்து வைக்குமாறு கேட்டுக்கொண்டான். சான்-றோர் அவனிடம், " பாண்டி நாட்டுப் புலவர் இங்கு எங்ஙனம் வருவர்? உன்னை நேரிற்காணுதவர் உன்னைக் காண வருவரோ?" என்றனர். அவன், " பெரியீர், ஐயுறவேண்டா! ஆந்தையார் என்பால்

உணர்ச்சியொத்த நட்புடையவர்; என் பெயரையே தம் பெயராகச் சொல்லி மகிழ்பவர்; யான் இன்புற்ற நாளில் வாராவிடினும், யான் துன்புறும் இந்நாளில் தவருது இங்கு வருவார். அவர் வந்து-கொண்டேயிருக்கின்ருர்,'' என்று அவர்கள் வியப்-புறும் வண்ணம் கூறினன். அவன் கூறியவாறே, அவன் நிலையை உணர்ச்சியால் அறிந்து ஆந்தை-யார், உடனே புறப்பட்டு, மலை நாடு என எண்ணு-மலும், மெய் வருத்தம் பாராமலும், நெடுந்தூரத்-தையும் சில நாட்களில் நடந்து கடந்து, அரச-னிருந்த இடத்தை அடைந்தனர். சான்ருேர், 'இஃதென்ன புதுமை!' என்றனர். அரசனும் புலவரும் ஒருவரையொருவர் கண்ணீர் பெருக இறுகத் தழுவினர். என்னே அன்பின் வன்மை!

7. இந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற சான்ருேர், இருவரையும் போற்றினர். சான்ருேருட்சிலர், ஆந்தையாரின் இளமைத் தோற்றத்தைக் கண்டு, "பெரியீர், பன்னுள் முன்னரே உம்மைப்பற்றிக் கேள்வியுற்ருேம். பலயாண்டுகள் கழிந்துவிட்டன. யாங்கள் முதுமையுற்ருேம். நீவிர் இளமையுடன் இருக்கக் காரணமென்ன?'' என வியந்து கேட்ட-னர். பிசிராந்தையார் அவர்களை நோக்கி, "அன்-பர்களே, 'உமக்குக் கழிந்த யாண்டுகள் பலவா-யிருக்க, இங்ஙனம் இளமையுடன் இருக்கக் காரணமென்ன?' எனக் கேட்கின்றீர்கள். அதற்-குரிய காரணம் கூறுகின்றேன்: என் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பப்பெற்று என் சொற்படி நடக்கின்ருர்கள். என் ஏவலரும் குறிப்பறிந்து யான் விரும்புவதையே செய்யும் இயல்பினர். என் அரசனும் தீயனசெய்யாது, குடிகளைத் தன் செங்-

கோலாட்சியால் புரப்பவன். இவற்றினும் சிறப்பாக, என் ஊரில் நற்குணங்களால் நிறைந்து, பெரியோருக்குப் பணிந்து, ஐம்புலன்களும் அடங்கப்பெற்ற சான்றோர் வாழ்கின்றனர். ஆதலின், என் வீட்டிலும், ஊரிலும், நாட்டிலும் யான் கவலையுறாது வாழ்தற்குரிய சிறப்புப் பெற்றுள்ளேன். மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்துவதாலேயே எனக்கு நரை ஏற்படவில்லை,'' என விடையிறுத்தனர். யாவரும் அவரைப் போற்றினர்.

8. ஆந்தையாரும் அரசனைப் போன்று உண்ணாநோன்பை மேற்கொண்டனர். **கண்ணகனார்** என்னும் புலவர், அவர் செயலைப் பாராட்டி, 'பவளமும், முத்தும், பொன்னும், மணியும் தாம் தோன்றுமிடத்தால் தூரத்திலுள்ளனவாயினும், அழகிய அணிகலன் செய்யுமிடத்து அவை ஒன்று சேர்தல் போன்று, பெரியோர் பெரியோரையே நாடிச்சேர்வர்,' எனக் கூறினர். சில நாட்களில் அரசனும் புலவரும் மண்ணுலக வாழ்வை நீத்தனர்.

**சொற்பொருள் விளக்கம் :**

புலமை - அறிவு, பொற்பு - அழகு, மாண்ட - மாட்சிமைப் பட்ட, புணர்ச்சி - சேர்ந்து வாழ்தல், பழகுதல் - பல முறை சேர்ந்து ஒழுகுதல், புரந்து - பாதுகாத்து, உறுதி - நன்மை, மா - மிகச்சிறிய அளவு நிலம், செய் - நிலத்தின் பெரிய எல்லையைக் குறிக்கும் அளவு (வயல் எனவும் கூறுவர்). வடக்கிருத்தல் - உயிர் துறக்க விரும்பியவர் ஆற்றிடைக்குறையில் தருப்பைப்புல் பரப்பி, அதன்மீது வடக்கு நோக்கி உட்கார்ந்து, உணவும் நீரும் கொள்ளாது உயிர் நீத்தல். இது பண்டையோர் மேற்கொண்ட முறை.

## பயிற்சி :

1. இரு பொருள் எழுது :—
மாண்ட, கோலம், புலன், ஐயம்.

2. கோடிட்ட இடங்களை நிரப்பு :—
தீங்கு —— கீழ்மக்களும் —— —— நன்கு உணராத வரும் அரசனுக்கு —— கூறுது —— —— நடத்தல் வேண்டுமென —— —— அமைச்சரும் பிறரும் —— —— அரசன் குடிகளை —— பொருள் கொள்வானு யின், —— —— வயல் போலத் —— —— ——; குடி மக்களும் ——.

3. பிரித்து எழுது :—
செங்கோல், பிசிராந்தையார், என்றுரைத்தார், தண் ணீர்.

## வினாக்கள் :

1. பிசிராந்தையார் என்பவர் யார்?

2. பிசிராந்தையாரின் உயரிய வாழ்க்கைக்குக் காரண மென்ன?

3. பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்குக் கூறிய அறிவுரை யாது?

4. சான்றோர் வியப்புக்குக் காரணம் என்ன?

5. பிசிராந்தையார் நரையின்றி வாழக் காரணம் என்ன?

6. பிசிராந்தையாரின் நட்புத் திறன் எவ்வாறு தெரிய வரும்?

7. கண்ணகனார் அரசனையும் புலவரையும் பாராட்டிக் கூறியது யாது?

## கட்டுரையாக்கப் பயிற்சி :

‘பிசிராந்தையாரும் அறிவுடை நம்பியும்,’ ‘ஆந்தை யாரும் கோப்பெருஞ்சோழனும்’ என்பன பற்றிக் கட்டுரை எழுது.

## இலக்கணம் :

### இன எழுத்து :

அ ஆ, இ ஈ, உ ஊ, எ ஏ, ஒ ஓ—இவற்றை உச்சரிக்கு மிடத்து. முதலில் நிற்கும் அ, இ, உ, எ, ஒ என்பவற்றின் நீண்டு ஒலிக்கும் ஒலியையுடையனவே, ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்பது தெரிய வரும்.

ஆதலின், அ, ஆ ; இ, ஈ ; உ, ஊ ; எ, ஏ ; ஒ, ஓ என்பவை ஒன்றற்கொன்று இனமாகக் கொள்ளப்படும். ஐ, ஔ என் பன முறையே இ, உ என்னும் ஒலியில் முடியுமாதலின், ஐ காரத்துக்கு இகரமும், ஔகாரத்துக்கு உகரமும் இனவெழுத் துக்களாம்.

மெய்களுள் வலிய ஓசையுடைய வல்லினம் ஆறுக்கும் மெலிய ஓசையுடைய மெல்லினம் ஆறும் இனமாம். இடை யினம் ஆறும் ஓரினமாகும்.

இனவெழுத்துக்கள் :

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ இ ஒ ஓ ஔ உ
க ங ச ஞ ட ண த ந ப ம ற ன
யரலவழள

# 5. ஒரு மாணவன் நிகழ்த்திய சொற்பொழிவு

## (நாட்டுப்புறக் கல்வி)

அன்புடையீர்,

வள்ளுவர் கழக ஆண்டுவிழாக் கொண்டாடப்படும் இந்நாள் எமக்கு ஒரு நன்னாளேயாகும். கல்வியின் பயன் உணர்வார், வள்ளுவர் பொன்மொழிகளைப் போற்றுவர். வள்ளுவர் ஒழுக்க நூல் வகுத்த அறிஞராய், மக்களுக்குக் 'கற்றதற்கேற்ப நிற்றலே ஒழுக்கம்,' என்றார். ஆதலின், கற்றல் மக்களுக்கு இன்றியமையாததென்பது தெளிவு. கல்வியின் சிறப்பிலேயே நாடு மேன்மையுறும். நாடு மேன்மையுற, இந்நாட்டிலுள்ள மக்கள் கல்வியறிவு பெறுதல் வேண்டும். நமது நாடு கிராமங்கள் மிக்க நாடாதலின், கிராம மக்கள் கல்வியிற் கருத்தூன்றி வருதல் இன்றியமையாததாகும். இதனைக் கருத்திற்கொண்டேயான் நாட்டுப்புறக் கல்வியைப்பற்றிச் சிறிது பேச விழைகின்றேன்.

நாட்டுப் புறங்களிற் பயிலத்தகுங் கல்வி முற்றும் தொடக்கக் கல்வியேயாம். அது படித்தல், எழுதுதல், கணக்குப் பார்த்தல் என்னும் முப்பிரிவினது. படித்தல், எழுதுதல், கணக்குப் பார்த்தல் ஆகிய இக்கல்வியே கிராம மக்களின் வாழ்க்கைக்கு வேண்டும் அறிவைத்தந்து, அவர் மேற்கொண்டு வரும் தொழில்களுக்கு உறுதுணையாயமையும். இத்தொழில்களுள் மிகச் சிறப்புடையது வேளாண்-

மையேயாம். இத்தொழிலைக் கிராம மக்கள் இளமை தொடங்கியே செய்து வருகின்றனர்கள். ஐந்தாண்டு தொடங்கு முன்னரே இத்தொழிலை மேற்கொள்வாருமுளர். ஆதலின், நாட்டுப்புற மக்கள் கல்வி பயிலும் காலம் ஒரு சில ஆண்டுகளேயாகும். அச்சுருங்கிய கால அளவுக்குள் அவர்தம் வாழ்க்கைக்கு உதவும் கல்வியை அவர்களுக்குக்கற்பித்தல் வேண்டும். அக்கல்வியும் அவர்கள் வாழ்நாள் முழுவதும் பயன்படக் கூடியதாகவுமிருத்தல் வேண்டும்.

முற்காலத்தில் கல்வியாரம்பத்தில், எழுத்துக்கள் அகரம் முதலாக அமைந்துள்ள முறைகொண்டு பயிற்றப்பட்டன. இம்முறையால் எழுத்துக்களை நிரல்பட உணரும் அறிவு உண்டாகின்றது. பிற்காலத்தில் செய்யுட்களின் பொருளையறிய, அகராதியைப் பயன்படுத்துவதற்கு இவ்வறிவு வேண்டற்பாலதாகும். ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், நல்வழி, நன்னெறி முதலிய நீதி நூல்கள் நாட்டுப்புறத்து மாணவர்க்கு ஒழுக்கத்தை வளர்ப்பதற்கு உதவுவன ; இக்கால அபிநயப் பாடல்கள் ஒரு சிறிதும் பயன்படுவன அல்ல.

நாட்டுப்புற மாணவருக்குக் கணக்கறிவு இன்றியமையாதது. இதனையுணர்ந்தே, முன்னோர் வாய்பாடுகள் பல இயற்றியுள்ளனர். அவற்றை நெட்டுருச் செய்தலாலே, பொருள்களின் விலை, பொருள்களைப் பலருக்குப் பங்கிடும் முறை யாவும், ஏடும் எழுத்தாணியும், தாளும் எழுது கருவியுமின்றிக் கணிக்கப்பட்டு வந்தன. நமது இந்திய நாட்டு அரசாங்கத் திட்டப்படி புகுத்தப்படவிருக்-

கும் தசாமிச முறைக்குப் பண்டைக்கால இலக்கம், நெல் இலக்கம், கீழ்வாய் இலக்கம், குழி மாற்று முதலாகிய எண்சுவடிகள் வேண்டுவன அல்ல என்பதே என் கருத்து.

பொது அறிவு பற்றிக் கூறப்புகின், நாட்டுப்புற மாணவர் முதற்கண் தமது ஊர், நகரம், நாடு இவற்றின் எல்லை, பிரிவு, பெயர்க் காரணங்கள் முதலியவற்றை அறிவதுடன், தம் ஊரின் முற்றளவு, அதன்கண் உள்ள நன்செய், புன்செய், தோட்டம், குடியிருப்பு, புறம்போக்கு முதலியவற்றின் தனித்தனி அளவு ஆகியவற்றை அறிதல் வேண்டும். நிலமளக்கும் கருவிகள், நிலத்தின் அளவைக் கணக்கிடும் முறை, பங்கிடும் முறை, நிலத்திற்கு இறுக்கவேண்டும் இறை முதலியனவும் அறிதற்குரியன. இக்காலத்தில் அரசாங்கத்தார் மக்களுக்கு அளிக்கும் உதவி, அவ்வுதவியைப் பெறுவதற்குரிய வழி வகைகள் இவற்றைப் பற்றிய அறிவும் இன்றியமையாததாகும். தேர்தல் முறை பற்றியும், மக்களுக்கு அரசாங்கம் அளித்துள்ள வாக்குரிமை பற்றியும் தெள்ளிய அறிவு வேண்டும்.

உழவுத் தொழில் சிறப்புற நடத்த, அவ்வூரில் பயிரிடப்படும் தானியங்களின் விதைப்பு, நடவு, அறுவடைக் காலங்கள், அத்தானியங்களின் மதிப்பு இவற்றைப் பற்றிய தேர்ந்த அறிவு வேண்டும். கூட்டுறவுச் சங்கங்கள், நூல் நிலையங்கள், கிராமநலச் சங்கம், அஞ்சலகம் இவற்றால் கிராம மக்கள் அடையும் நன்மைகளையும் உணரவேண்டும். ஓய்வு நேரங்களில் செய்வதற்குரிய குடிசைக் கைத்தொழில்களைப் பற்றி அறிதலுடன், அவற்றைச் செய்து வரும் பழக்கமும் ஏற்படுத்துதல்

வேண்டும். உடனல வழிகள் கற்பித்தலும் அவசியமாகும்.

கல்வியே மக்களின் கண்ணுகும். கேடில் விழுச் செல்வமும் அதுவேயாம். 'யாதானும் நாடாம்; ஊராம்' என்னும் பரந்த மனப்பான்மை அளிப்பதும் கல்வியேயாதலின், அதனை நாட்டுப்புற மாணவரும் நன்முறையில் பயின்று, நலம் பெற வேண்டுமெனக் கூறி, என் சிற்றுரையை முடித்துக்கொள்கின்றேன். இங்குக் குழுமி, என் சிற்றுரையைச் செவி மடுத்த யாவருக்கும் என் நன்றி உரியதாகுக!

### சொற்பொருள் விளக்கம்

நிற்றல் - நிலைபெற்றிருத்தல், உறுதுணை - பெருந்துணை, நிரல் - வரிசை, ஆத்தி சூடி - ஆத்தி மாலையை அணிந்த சிவன், இப்பெயர் - 'ஆத்தி சூடி' எனத் தொடங்கும் நூலைக் குறிக்கும், ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி என்பவை ஔவையார் இயற்றிய நூல்கள், நன்னெறி—சிவப்பிரகாசர் இயற்றிய நூல், முற்றளவு - பரப்பளவு, இறை - வரி, கேடில் - அழிவில்லாத, குழுமி - கூடி, விழுச்செல்வம் - சிறந்த செல்வம், செவி மடுத்த - கேட்ட.

### பயிற்சி

1. பிரித்தெழுது :—
   நன்னுள், உடனலம், முப்பிரிவு, ஐந்தாண்டு, தசாமிசம்.
2. இரு பொருள் எழுது :—
   வேளாண்மை, ஆண்டு, தாள்.
3. எதிர்ச்சொல் எழுது :—
   சிற்றுரை, இளமை, பரந்த.
4. இறை, இரை; கழகம், கலகம்; விழை, விலை—இச் சொற்களின் வேறுபாட்டையுணர்த்த வாக்கியங்கள் எழுது'

## வினுக்கள்

1. 'கிராம மக்கள் கல்வி பெற வேண்டுவது இன்றியமையாதது,' என்பதனை விளக்கு.

2. தொடக்கக் கல்வியில் கற்பிக்கப்படுவன யாவை?

3. நாட்டுப்புற மக்கள் பொது அறிவு பெற அவர்களுக்கு எவற்றைக் கற்பித்தல் வேண்டும்?

4. நாட்டுப்புறங்களில் முற்காலத்தில் கணக்கறிவு ஏற்படக் கற்பிக்கப்பட்டன யாவை?

5. தொழில் சம்பந்தமாக நாட்டுப்புற மாணவர் அறிய வேண்டுவன யாவை?

6. கல்வியின் சிறப்பு யாது?

## கட்டுரையாக்கப் பயிற்சி

நாட்டுப்புற மக்களுக்குக் கல்வி இன்றியமையாதது; அவர்களுக்குக் கற்பிக்கத்தகும் ஒழுக்க நூல்கள் - வாய்ப்பாடுகளின் பயன் - கிராம மக்களின் பொது அறிவுச் செய்திகள் – கிராமங்களில் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தல்—இத்தலைப்புக்களை விளக்கியெழுதி, ஒரு கட்டுரையாக்கு.

## இலக்கணம்

### மாத்திரை (குறில், நெடில், மெய், ஆய்தம்)

எழுத்துக்களின் ஓசையை அளக்க மாத்திரை என்னும் கால அளவு உண்டு. எழுத்துக்களை உச்சரிக்கும் கால அளவு மாத்திரை எனப்படும். நாம் ஒரு முறை இயல்பாகக் கண்ணை இமைத்தாலோ, அல்லது கையை நொடித்தலோ கொள்ளும் நேரமே ஒரு மாத்திரை எனப்படும்.

குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று; நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு. இதை மெய்களுடன் சேர்ந்து, உயிர்மெய்க் குறிலாகவும், உயிர்மெய் நெடிலாகவும் உச்சரிக்கும் போதும் அம்மாத்திரைகளே பெறும். மெய்யெழுத்திற்கும், ஆய்தத்திற்கும் தனித்தனி மாத்திரை அரை.

உயிர்க்குறிலுக்கும், உயிர்மெய்க்குறிலுக்கும் மாத்திரை ஒன்று; உயிர் நெடிலுக்கும் உயிர்மெய் நெடிலுக்கும் மாத்திரை இரண்டு; மெய்யெழுத்துக்கு மாத்திரை அரை; ஆய்த எழுத்துக்கு மாத்திரை அரை. மெய்யுடன் உயிர் சேரும் போது மெய் தன் அரை மாத்திரையை இழந்துவிடும்.

## 6. அன்புள்ளம்

1. உலகின்கண் தோன்றியுள்ள உயிர்கள் யாவும் உரிமையுடன் வாழ்தலையே விரும்பும். முட்டையினின்றும் வெளிப்படும் உயிர்கள் முதல், தாயின் அகட்டினின்றும் பிறக்கும் சேய்கள் ஈறுக, வெளியுலகில் சென்று உலா வருதலை எதிர்நோக்கி நிற்றல் கண்கூடு. பறவைக் குஞ்சுகள் பறந்தெழுதலும், ஆன் கன்றுகள் துள்ளி விளையாடலும், குரங்குக் குட்டிகள் கிளைக்குக் கிளை தாவிப் பாய்தலும் அவற்றின் உரிமை வேட்கையையே உணர்த்துவன. சேய்கள் குறுகுறு நடந்து வெளிச்செல்ல முயலுதலும் இவ்வுணர்ச்சியின் விளைவேயாம். அவற்றைக் கட்டுப்படுத்தின், அவை துன்புறுதலையும், விம்மியழுதலையும், நோக்கின், மக்களினம் தன் விருப்பிற்கேற்ப ஒழுகுதலை விழையுமேயன்றிப் பிறர் கட்டுப்பாட்டிற்குட்பட்டிருத்தலை விழையாதென்பதையும் ஊகித்தறியலாம். சேய்கள் இவ்வண்ணம் இன்னலுறுமிடத்து, முதியோர் தம் உரிமையிழந்து, பிறர்க் காட்டும் நிலையேற்படின், அவர் மனம் எவ்வாறு துன்புறும்!

2. இக்காலக் குடியாட்சிக்கு எடுத்துக் காட்டாகத்திகழும் வடஅமெரிக்க நாட்டினர், 17 ஆம் நூற்றுண்டில் மக்களினத்திற்கே மாறு தரும் செயலான அடிமை வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர்; ஆப்பிரிக்க நாட்டுக் கறுப்புநிற மக்களான நீகிரோக்களைத் தம் வன்மையால் வேட்டையாடிப் பிடித்துக் கைகால்களில் விலங்கு மாட்டி, விலங்குகளினும்

கேடாக வேலை வாங்கி, உரிமையின்றி உழலச் செய்தனர்; அவர்களை ஆடுமாடுகளைப் போன்று விலை கூறி, அவலநிலைக்குள்ளாக்கி, வாட்டி வதைத்தனர்; அவர்கள் அறியாமையாற் சிறு குற்றம் செய்யினும், ஈவிரக்கமின்றிக் கசையடி வழங்கி, கடுந்தண்டம் விதித்து வந்தனர். மக்களை மாக்களாகக் கருதிப் பொருள் தேடும் முயற்சியில், அப்பஞ்சை மக்களைப் பருத்திக் காடுகளில் பகலவன் வெம்மையையும், பனியின் கொடுமையையும் தாங்கி, அல்லும் பகலும் உழைத்து உதிரமொழுகச் செய்தனர். இவ்வுழைப்புக்குப் பயனாய் அவ்



வேழை மக்களுக்குக் கிடைத்தன கசையடியும், குத்தும், உதையும், ஓயா வசையுமே. எவரேனும் இவற்றிற்கு முடிவு காண முயன்று, தப்பியோட முயல்வாராயின், வேட்டை நாய்களை ஏவியும், ஏவலரை அனுப்பியும் அவர்களைப் பிடித்து வரச் செய்து, சொல்லொணுத் துயருக்காளாக்கினர். ஆயினும், உயிருடன் இருந்து உழல்வதினும் சாவையே விரும்பி, வெளியுலகைத் தேடிச்சென்ற

அடிமை நீகிரோவர்களுக்குப் புகலிடமாயமைந்த அன்பர் நிலேயங்கள் பல அருள் உள்ளம் வாய்ந்த மக்களால் நிறுவப்பட்டிருந்தன.

3. கல்லினும் வன்னெஞ்சர்களால் கசையடியும் வசை மொழியுமே பெற்று வந்த அடிமைகளிடத்து அன்பு கொண்டு அவர்களுக்கு உரிமை வழங்க முயன்ற வெள்ளேயர்களும் அக்காலத்து நாடெங்கும் காணப்பட்டார்கள். 'அடிமைகளே விலங்கினும் கேடாக நடத்துதல் தவறு; அவர்களும் ஆறறிவு படைத்த மக்களே; அவர்களுக்கு உரிமை வழங்கி, நாட்டின் நற்குடிகளாய் வாழச் செய்தல் வேண்டும்,' என அவர்கள் அமெரிக்க நாட்டுச் சட்ட மன்றத்திலும், நகர்களின் தெருக்களிலும், கிராமங்களிலும் பறை சாற்றித் தமக்கு ஆதரவாளரைத் தேடி வந்தார்கள். ஆயினும், அடிமைகளால் பெரும்பொருள் ஈட்டிய நிலக்கிழாரும் பிறரும் அவர்களே எதிர்த்தனர். 'தப்பியோடும் அடிமைகளுக்கு அடைக்கலம் நல்குவோர் நாட்டின் துரோகியர் ஆவர்,' என்னும் சட்டத்தையும் சட்டமன்றத்தில் அவர்கள் நிறைவேறச் செய்தார்கள். இப்படிப்பட்ட விலங்குச் சட்டமும் அன்னுரை அச்சுறுத்தவில்லே. அவர்கள் நகரங்களின் இரைச்சலும், பகட்டும், பொய் வாழ்வும், தன்னலமும் சேராத தொலேவிடங்களில், அமைதி நிலேயங்களான அன்பர் நிலேயங்களே நிறுவினர்கள்; சாதி, சமய, இன, நிற வேறுபாடின்றித் தொண்டு புரியும் தூயமனத்தினரை அந்நிலேயங்களில் தங்கி, அல்லலுற்றுத் தப்பிவரும் அடிமைகளுக்கு அடைக்கலமுதவச் செய்தார்கள். இத்தகைய நிலேயம் ஒன்றில், மழையும் புயலும்

மந்தாரமான மாலை வேளையில் அந்நிலையத்தவர் தம் மனைவியருடன் அளவளாவிக்கொண்டிருந்தனர்.

4. அச்சமயம் வேலைக்காரப் பெண் அங்கு வந்து, ''ஐயா, நம் புறங்கடை வாயிலில் இளம்பெண்ணொருத்தி அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிருள்,'' என அறிவித்தாள். தலைவரும் அவர் மனைவியாரும் உடனே அங்குச் சென்று, இளம் பெண் ஒருத்தி புறக்கடை வாயிற்படியின்மீது தலையை வைத்துக்கொண்டு, தன்னை மறந்து உறக்கத்தில் ஆழ்ந்திருத்தலைக் கண்டனர். அவளருகில் ஓர் ஆண் குழந்தை குளிரால் விரைத்துப்போய் அவள் அணைப்பில் உறங்கிக்கொண்டிருந்தது. அவர்கள் அவளை எழுப்பி, வீட்டினுள் அழைத்துச் சென்று, சூடான தேநீர் பருகச் செய்தார்கள். பின்னர் அவள் தான் அங்கு வந்த வரலாற்றைப் பின் வருமாறு கூறினுள் :

5 ''யான் ஓர் அடிமைப் பெண் ; அறுபது கல் தொலைவிலுள்ள அமுதப் பண்ணையினின்றும் தப்பியோடி, இங்கு வந்துள்ளேன். என் உரிமையாளர் சற்குணர் ; அடிமைகள்மீது அன்புடையவர் ; யாங்கள் ஒரு குடும்பத்தினர் போன்றே வாழ்ந்து வந்தோம். எம் தலைவருக்குப் பணமுடை ஏற்பட்டதனுல், அடிமை வாணிகன் ஒருவனிடம் கடன் வாங்கினர். குறித்த காலத்தில் கடனை அவரால் செலுத்த முடியவில்லை. ஆதலின், அவ்வணிகன் அக்கடனுக்கு ஈடாக என் மகனை—இப்பாலகனை—விற்கும்படி கேட்டான். வேறு வழியின்றி, எம் தலைவரும் இவனை அவ்வணிகனுக்கு விற்றுவிட உடன்பட்டு, விற்பனை முறியும் எழுதிக்

கொடுத்தனர். மறுநாட்காலையில் அவ்வணிகனுடன் இப்பாலகன் செல்ல வேண்டியவனுயிருந்தனன். என் மகனைப் பிரிந்து வாழ வேண்டுமே என்ற எண்ணம் என் மனத்தில் பெரு வேதனையை உண்டாக்கியது. இவனைப்பிரிந்து வாழ என் மனம் ஒருப்படவில்லை. ஆதலால், இரவிலேயே இவனை எடுத்துக்கொண்டு ஓடோடியும் வந்துவிட்டேன்! மரங்களிடையே ஒதுங்கியும், புதர்களுக்கிடையே மறைந்தும் வந்த யான், வழியில் பேரியாறு பெறுக்கெடுத்தோடியதைக் கண்டு, அண்மையிலுள்ள விடுதியில் தஞ்சம் புகுந்தேன். சிறிது நேரத்தில், என் மகனை வாங்கிய அடிமை வணிகன் இருவருடன் என்னைத் தேடிக்கொண்டு அங்கு வந்துவிட்டான். அவன் கையிலகப்பட்டுத் துன்புறுவதைவிட இறப்பதே நலம் எனத் துணிந்து, பேரியாற்றில் குதித்துவிட்டேன். என் மீது இரக்கங்கொண்டு அவ்வாறு என்னை இழுத்து வந்து, இந்நிலையத்தினருகே சேர்த்துவிட்டது. என் மார்போடு அணைத்திருந்த இச்சிறுவனும் யானும் கடவுள் அருளால் உயிர் தப்பிக் கரை சேர்ந்தோம். அங்குக் குளிராயிருந்தமையின், இங்கு வந்தேன். தயவு செய்து அவ்வடிமை வணிகனிடம் எங்களைக் கொடுத்துவிடாதீர்கள்!"

6. அவள் வரலாற்றைக் கேட்ட தலைவர் மிகவும் இரக்கமுற்று, "பெண்ணே, சிறிதும் அஞ்சாதே! இது அன்பர்கள் நிலையம்; மக்களாய்ப் பிறந்தும், மக்கட்பண்பில்லாமல், விலங்குகளாய், உங்களைப் போன்றோரைக் கொடுமையாய் நடத்தும் கயவர்களிடமிருந்து தப்பி வரும் அடிமைகளின் அரண்; அனைத்துயிரும் ஒன்-

றென்று என்னும் அருள் மனத்தினரால் நடத்தப் பெறும் இல்லம் ; மக்களுக்குள் வேற்றுமை பாராட்டும் இழிக்குணம் இங்கு இல்லை. எத்தனை நாட்களாயினும் நீ இங்கும் தங்கலாம்,'' என்றனர்.

அடிமைப் பெண் : ஐயா, உங்கள் பேரன்பிற்கு என் நன்றி உரியது. யான் இங்கு நீண்ட நாள் தங்க விரும்பவில்லை. என் கணவர் இரு வாரங்களுக்கு முன்னர்த் தம் கொடிய முதலாளியிடமிருந்து தப்பியோடிவிட்டார். நான் அவரைச் சந்திக்கவேண்டும். அவரைக் கண்டால், அவருடன் சேர்ந்து அடிமைகளுக்கு விடுதலையளித்துள்ள கானடாத் தேசத்துக்குப் போய்விடுவேன்,'' என்ருள்.

தலைவர் : பெண்ணே, தப்பியோடி வரும் அடிமைகள் இந்நிலையத்துக்கு வந்து, எங்கள் உதவியாற்ருன் ஏரியைக் கடந்து கானடாவை அடைய முடியும். ஆதலின், உன் கணவர் இங்கு வரும் வரை நீ இங்குத் தங்கியிரு.

அடிமைப் பெண் : ஐயா, பெரிதும் நன்றி கூறுகிறேன் ! உங்கள் விருப்பப்படியே செய்கிறேன்.

தலைவர் : பெண்ணே, உதவி செய்ய வேண்டுவது எங்கள் கடமை; இறைவர் அருள் வடிவினர்; அவர் படைப்பில் ஏற்றத் தாழ்வு இல்லை. இதனையுணர்ந்தே யாங்கள் யாவரையும் எம்மவராக எண்ணி, உதவி வருகின்ருேம். இன்னும் இரண்டு நாட்களில் மூவர் எங்கள் நிலையத்திற்கு வரப்போகின்றனர். உன் கணவரும் அவர்களுள் ஒருவராயிருந்தால், இன்னும் மூன்று நாட்களில் நீ கானடாவை அடைந்துவிடுவாய். அந்நாட்டை

அடைவதற்கு ஏரியைக் கடந்து செல்ல வேண்டும். ஏரியைக் கடக்க மரக்கலம் ஏறவேண்டும். அதற்-காக, நீ மாறுவேடம் பூண்டு உன் உருவத்தை மாற்றுதல் நலமாகும். உன்னைத் தேடி வருபவர் யாவராயினும், அவர் உன்னை இன்னாரென அறிந்துகொள்ளுதல் கூடாது. ஆதலின், யான் கூறுகின்றபடி செய்.

**அடிமைப் பெண் :** ஐயா, நீங்கள் என்ன வேடங்கொள்ளச் சொன்னாலும், அவ்வாறே செய்-கின்றேன். யான் அடிமை வணிகன் ஆட்களிடம் அகப்பட்டால், என் உயிர் என் உடலில் நில்லாது!

**தலைவர் :** சரி, நீ உன் அழகிய கூந்தலைக் கத்தரித்து, ஆண் உடை தரித்து, ஓர் ஆடவனாகத் தோன்ற வேண்டும். உன் மகனையும் பெண்ணாக மாற்றிவிட வேண்டும்.

**அடிமைப் பெண் :** ஐயா, உங்கள் அறிவு-ரைக்கு என் நன்றி உரியதாகுக!

7. மறுநாட்காலையில் அன்பர் நிலையத்தில் அழகிய இளைஞன் ஒருவன் தன் கையில் மூன்று வயதுள்ள பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு, அங்குமிங்கும் உலாவிக்கொண்டிருந்தான். அவன் மனத்தில் அமைதி குடிகொண்டிருந்தது. ஆயி-னும், அவன் கண்கள் புதியவராக வருவோரைக் கூர்ந்து கவனித்துக்கொண்டேயிருந்தன. இரண்டு நாட்கள் இவ்வாறு கழிந்தன. மூன்றும் நாள் இரவு கறுப்பு மனிதர் மூவர் அன்பர் நிலையத்துள் புகுந்தனர். இவர்களுள் ஒருவன் சுருண்ட மயி-ரும், விசாலமான மார்பும், கூரிய கண்களும் உடையவனாய் அழகிய தோற்றத்துடன் காணப்-பட்டான். அவனைக் கண்ட அளவில், அங்கு

நின்ற இளைஞன், 'ஆ! என் அன்ப!' எனக் கூறிக்கொண்டே அவனிடம் சென்று அவன் மார்பில் சாய்ந்துவிட்டான். சிறிது திகைத்த அம்மனிதன் அவ்விளைஞனை உற்று நோக்கி, 'ஆ! என் கண்மணி!' என வியப்புத் தோன்றக் கூறினன். அச்சமயம் அங்கு வந்த தலைவர், அவ்விருவரையும் உள்ளே போகப் பணித்தனர்.

8. மூன்றும் நாட்காலையில், ஏரி கரையில் கானடா செல்லும் மரக்கலம் பாய்விரித்துச் செல்லத் தயாராய் நின்றது. அன்பர் நிலையத் தலைவர் அக்கரை செல்லுவதற்குரிய மூன்று கட்டணச் சீட்டுகளுடன் முதியோர் ஒருவரையும், இளைஞன் ஒருவனையும், ஒரு பெண் குழந்தையையும் அழைத்துச் சென்று, மிகத் தாழ்ந்த குரலில் அவர்களுடன் பேசிக்கொண்டு நின்றனர். அவர்கள் கப்பலின் மேற்றளத்தில் ஏறியமர்ந்த பின், முதியவர் தலைவரை நோக்கி, "ஐயா, நீங்கள் எம் போன்ற ஏழைகளின் நலம் கருதி, உங்களுக்கு வரும் இன்னலையும் பொருட்படுத்தாது உழைத்து வருகின்றீர்கள். நீங்கள் அன்புள்ளங்கொண்டு செய்து வரும் அறப்பணிக்கு எம் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். 'யாவரும் கேளிர்' என்ற மனப்பான்மை உங்களிடம் குடிகொண்டுள்ளது. ஆதரவற்ற எம் போன்றோருக்கு அருந்துணையாய் அமைந்து, எம் வாழ்க்கையை மலரச் செய்த உங்கள் அறப்பணி என்றும் ஓங்குக! உங்கள் அன்புள்ளம் என்றும் வாழ்க!" என நன்றியுணர்ச்சியுடன் கூறினர். தலைவரும் புன்சிரிப்புடன், "அன்பரே, நீவிர் நும் மனைவியையும் மகனையும் அடையப் பெற்றதற்குக் காரணம்

இறையருளே; பிறரெவரையும் அன்பு நோக்கால் நோக்குதலே இறைவருக்கு விருப்பு; நீவிரும் இறைவரைப் போற்றி, செல்லும் நாட்டு மக்களுக்கு அன்புப்பணி புரிமின். இதுவே நீவிர் செய்யத்தக்க பணி; சென்று வருக!'' எனப்புகன்று, அவர்களிடம் விடை பெற்றுத் தம் நிலையத்திற்கு மீண்டனர்.

### சொற்பொருள் விளக்கம் :

அகடு - வயிறு, சேய் - குழந்தை, வேட்கை - விருப்பம், அவலம் - துன்பம், கசை - சவுக்கு, பஞ்சை மக்கள் - எளிய மக்கள், வன்னெஞ்சர் - கொடிய மனத்தினர், கிழார் - உரிமையாளர், நல்குதல் - அளித்தல், கயவர் - கீழ் மக்கள், கேளிர் - உறவினர்.

### பயிற்சி :

1. பிரித்தெழுதுக :—
   உதவியாற்றுன், தாயினகட்டினின்றும், பறந்தெழுதல், பிறர்க்காட்படு.
2. வாக்கியங்களிலமைத்து எழுது :—
   அல்லும் பகலும், சொல்லொணு, அறப்பணி, குறுகுறு.
3. பொருள் வேறுபாட்டை விளக்கு :—
   அக்கரை, அக்கறை; பணி, பனி; கருப்பு, கறுப்பு; ஏரி, ஏறி.

### வினக்கள் :

1. உயிர்களிடத்துள்ள உரிமை வேட்கையை எவ்வாறு அறியலாம்?
2. அமெரிக்கரை மாசுறச் செய்தது யாது?
3. அடிமைகள் அடைந்த துன்பத்தை விளக்கமாக எழுது.
4. அன்பர் நிலையம் ஏற்பட்ட நோக்கம் என்ன?

5. அன்பர் நிலையத் தலைவர் செய்த உதவி யாது?

6. அடிமைப்பெண் தன் கணவனை எவ்வாறு மீண்டும் சந்தித்தாள்?

7. அடிமைப்பெண் தப்பிச் சென்றது எவ்வாறு?

## கட்டுரையாக்கம் :

'அன்பர் நிலையத் தொண்டு', 'அடிமைப் பெண்ணின் தாயுள்ளம்' என்பன பற்றிக் கட்டுரை எழுது.

## இலக்கணம் :

சொல். (இடுகுறி, காரணப் பெயர்கள்)

1. மண், நிலம், கல், நெல்.
2. பறவை, அணி, வளையல்.

முதல் வரிசையிலுள்ள சொற்களுக்குப் பெயர்க் காரணம் கூற இயலவில்லை. அவை, பொருளைக் குறிப்பதற்கு முன்னோர்கள் காரணம் கருதாமல் இட்ட பெயர்கள். ஆதலின், அவை இடுகுறிப் பெயர்கள்.

இரண்டாம் வரிசையிலுள்ள சொற்களுக்குப் பெயர்க் காரணம் கூறலாம். அவை, காரணம் பற்றி வழங்கப்படும் பெயர்கள் ஆதலின், காரணப் பெயர்கள் எனப்படும்.

பறவை—பறப்பது, அணி—அணியப்படுவது, வளையல்—வளைவாய் இருப்பது.

காரணப் பெயர், இடுகுறிப் பெயர்களை எடுத்தெழுது :—

முடி, பொன்னன், மரம், தூண், தண்ணீர், படை.

# 7. ஜேம்ஸ் குக்கு

1. புதிய பொருள்களைக் கண்டு களிக்க விழைவது மக்கள் யாவருக்கும் இயல்பாய் அமைந்த குணமாகும். சிறப்பாகச் சிறுவர்கள் புதிய செய்தியை அறியவும், புதிய கதைகளைக் கேட்கவும், புதிய பொருள்களைக் காணவும் விரும்புவார்கள். இக்குணமே உலகின் முன்னேற்றத்துக்குக் காரணமாகும். இளமையில் இக்குணம் அமைந்து, புதிய இடங்களுக்குச் சென்று, பிறர் காணாத இடங்களைக் கண்டு பிறர்க்கு அறிவித்துப் புகழ் பெற்றவரே **ஜேம்ஸ் குக்கு** என்னும் ஆங்கிலேயராவர்.

2. ஜேம்ஸ் குக்கு, கி. பி. 1728ஆம் ஆண்டு, இங்கிலாந்தில், **யார்க்ஷயர்** என்னும் ஊரில், ஏழைக் குடியானவரின் புதல்வராய்ப் பிறந்தார். ஆதலின், அவர் கல்வி கற்கும் வசதியில்லாமையால், இளமையிலேயே ஒரு கடையில் வேலை செய்து வந்தார். அவ்வேலையை அவர் விரும்பவில்லை. வெளி நாடு சென்று அங்குள்ள மக்களின் நடை உடை பாவனைகளை அறிய அவர் மனம் விரும்பியது.



அவர் வெளி நாடு சென்று திரும்பும் மாலுமிகளைக் காணும் போதெல்லாம் தமக்கு அப்-

பேறு எப்போது கிடைக்கும் என ஏங்கி நிற்பர். இவ்வெண்ணம் நாளுக்கு நாள் வலுப்பெற்றுக் கடற்படையில் சேர அவரைத் தூண்டியது. கடையினின்றும் நீங்கிக் கப்பற் படையைச் சேர்ந்த அவர், தமது குன்று' ஊக்கத்தாலும் திறமையாலும் படிப்படியாய் உயர்ந்தார். கடலின் ஆழத்தைக் கணக்கிடுவதில் அவர் மிக்க திறமை பெற்று விளங்கினர். அரசாங்கத்தார் அவரது ஆற்றலைக் கண்டு அவரைக் கப்பலுக்குத் தலைவராக்கினர்.

3. ஜேம்ஸ் குக்குக்கு 1768ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், 36ஆம் நாள் பிளிமத்து என்னும் துறைமுகத்திலிருந்து சில விஞ்ஞானிகளுடன் பசிபிக்குக் கடலிலுள்ள தீவுக்குச் செல்லுமாறு இராயல் கழகத்தாரிடமிருந்து ஒரு வேண்டுகோள் வந்தது. பதினெட்டு மாத கால அளவிற்குப் போதுமான உணவுப் பொருள்கள் கப்பலில் ஏற்றப்பட்டன. ஜேம்ஸ் குக்கு இரண்டரை மாதம் பிரயாணஞ் செய்து, தென்னமெரிக்காவின் கிழக்குக் கரையிலுள்ள ரியோ-டி-ஜனிரோ என்னும் துறைமுகத்தை அடைந்தனர். அங்குள்ள போர்த்துகீசியர் ஆங்கிலேயரைச் சந்தேகிக்கும் இயல்பினராயிருந்தனர். ஆதலின், குக்கு அத்துறைமுகத்தை நீங்கித் தென்கோடியிலுள்ள டியோரா டெல்பியூகோ என்னும் தீவையடைந்தனர். அங்கு அவருடன் சென்ற தாவர அறிஞர் டாக்டர் சோலந்தர், பதின்மருடன் சில செடிகளை ஆராயத் தொடங்கினர். குளிர் மிகுதியாகவே அவர் உறங்கத் தொடங்கினர். அவ்வுறக்கம் மேற்கொண்டவர் உயிர் துறப்பர் என்பதை

அறிந்த உடன் சென்றவர்கள், நெருப்பை மூட்டி அவரை விழித்தெழச் செய்து, கப்பலுக்கு அழைத்துச் சென்றார்கள். இங்ஙனம் அவர் பேராபத்தினின்றும் தப்பினர்.

4. அவர்கள் அத்தீவினின்றும் புறப்பட்டுத் தென்னமெரிக்காவின் தென்முனையைச் சுற்றிக் கொண்டு, 1769ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள், பத்தாம்நாள் டஹிட்டித் தீவை அடைந்தார்கள். அங்குள்ள மக்கள் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்கள். அங்கு அவர்கள் மூன்று மாதம் தங்கினார்கள். குக்குடன் சென்றவர்கள் அத்தீவைப் பற்றிய செய்திகளைக் குறித்துக்கொண்டார்கள். 'இத்தீவிலுள்ள மக்கள் உயரமானவர்கள்; அழகானவர்கள்; பழுப்பு நிறம் வாய்ந்தவர்கள்; நாள்தோறும் மும்முறை குளிப்பவர்கள்; உடல் முழுவதும் பச்சை குத்திக்கொள்பவர்கள்; முரட்டுத் துணி நெய்யவும், கூடை முடையவும் அறிந்தவர்கள்; நட்புணர்ச்சிக்கு, அடையாளமாகப் பசுங்கிளைகளை ஏந்தி எங்களை வரவேற்றார்கள்,' என்பது அவர்கள் குறிப்பிற் கண்ட செய்தியாகும். குக்கு அம்மக்களுக்குத் தாம் கொண்டுபோன எலுமிச்சை, நாரத்தை, கிச்சிலி முதலிய பழமரங்களின் விதைகளை அளித்துப் பயிரிடும் விதத்தையும் கூறினர்; அத்தீவிற்குச் சொசைட்டித் தீவு எனப் பெயரிட்டனர்.

5. டஹிட்டித் தீவிலிருந்து புறப்பட்ட தலைவர் குக்கு, நியூஸீலந்து தீவின் வடகிழக்குக் கரையை 1769ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 7ஆம் நாள் அடைந்தனர். அத்தீவின் மக்கள் அவர்களை நன்கு வரவேற்கவில்லை. அத்தீவிலுள்ள மலையுச்-

சிக்கு ‘குக்கு மலைச் சிகரம்’ எனப் பெயரிடப்பட்டது. தென் தீவையும் வட தீவையும் பிரித்த நீர்ப்பகுதியைக் ‘குக்கு நீர்ச்சந்தி’ என வழங்கினார்கள். வடக்குத்தீவில் நர மாமிசம் உண்ணும் மக்கள் இருந்தார்கள்; அதனால், அங்குள்ள நீர்ப்பகுதியைக் ‘கானிபால்ஸ் பே’ என வழங்கினார்கள். அவ்விடத்தை விட்டுத் தலைவர் குக்கு ஆஸ்திரேலியாக் கண்டத்தின் கிழக்குக் கரையை அடைந்தனர்.

6. அவ்விடம் மிகவும் செழிப்புள்ளதாயிருந்தது. மரம், செடி கொடிகள் பசுமையுடன் விளங்கின. ஆகையால், அந்நீர்ப்பகுதியைப் ‘பாட்டனி பே’ என வழங்கினர். அங்குக்காணப்பட்ட வினோதமான பிராணியைக் ‘கங்காரு’என வழங்கினர். அங்குள்ள மக்கள் உடல் உறுப்புக்களுக்கு வெள்ளை, சிவப்பு நிறங்களைத் தீட்டிக்கொள்வார்கள்; கிளிஞ்சில்களைக் கோத்து அணிந்துகொள்வார்கள். அவர்கள் மீன் பிடித்தும், வேட்டையாடியும் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் குக்குத் தலைவரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் அன்புடன் நடத்தினார்கள்.

7. அவ்விடமிருந்து புறப்பட்ட கப்பல், பவளப்பாறைகளும் மணல் திட்டுகளும் நிறைந்த நீர்ப்பகுதியை அடைந்து, பெருஞ்சேதத்தினின்றும் தப்பி, யார்க்கு முனையை அடைந்தது. பின்னர்க் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று, சாவகத்தீவிலுள்ள பட்டேவியாவில் சிறிது காலம் தங்கினர். பிறகு மேற்கு நோக்கிச்சென்று, ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கை முனையை அடைந்து, ஒரு மாத காலம் தங்கி, அங்கிருந்து புறப்பட்டு,

1771ஆம் ஆண்டு, ஜூலைத்திங்கள், 12ஆம் நாள் இங்கிலாந்தை அடைந்தனர்.

8. குக்கு இரண்டாம் முறையும் கடற்பிரயாணஞ்செய்து, தென்கடலில் பெரிய கண்டம் எதுவுமில்லை என்பதைக் கண்டறிந்தனர்; 1776ஆம் ஆண்டு தம் மூன்றும் கடற்செலவை மேற்கொண்டு, பசிபிக்குப் பெருங்கடலில் உள்ள ஹாவாய்த் தீவுகளைக் கண்டனர். அவரது முயற்சியின் பயனாகவே, ஆங்கிலேயர் நியூஸிலந்து முதலிய தென்கடல் நாடுகளில் குடியேறிக் கைத்தொழில், பயிர்த்தொழில் முதலியவற்றை வளர்க்க முடிந்தது. தரைநூல், தாவரநூல், உயிர்நூல் இவற்றிற்கும் அவர் கண்டனவும் கேட்டனவும் பெரிதும் பயன்பட்டன.

9. ஜேம்ஸ் குக்கு, 1779ஆம் ஆண்டில், ஹாவாய் என்னுமிடத்தில் அந்நகரத்தவரால் கொல்லப்பட்டார்.

### சொற்பொருள் விளக்கம் :

நடை உடை பாவனைகள் - பழக்கவழக்கங்கள், பதின்மர் - பத்துப்பேர், துறப்பர் - நீங்குவர், நர மாமிசம் - மனிதர் இறைச்சி, கானிபால் - மனித இறைச்சியை உண்பவன், கங்காரு - ஒரு விநோதப்பிராணி, அது தன் வயிற்றில் உள்ள பையில் தன் குட்டியை வைத்துக்கொள்ளும். பின்னங்கால்களால் குதித்து ஓடும்.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—

   பதினெட்டு, தென்கோடி, மும்முறை, பேராபத்து.

2. எதிர்ச்சொல் எழுது :—

   புதிய, உறங்கு, சிறிது, முரடு.

3. ஆற்றல், கண்டன, கேட்டன, கடற்செலவு இவற்றை வாக்கியங்களில் அமைத்துக் காட்டு.

### வினாக்கள் :

1. இளமைப் பருவத்தில் குக்கு விரும்பியது என்ன?
2. குக்கு றியோ டி ஜனீரோவை விட்டு நீங்கக் காரணம் என்ன?
3. டாக்டர் சோலந்தருக்கு ஏற்பட்ட ஆபத்து யாது?
4. டஹிட்டித் தீவில் குக்கு எவ்வாறு வரவேற்கப்பட்டார்?
5. டஹிட்டித் தீவு மக்களைப் பற்றி நீ அறிந்ததென்ன?
6. குக்குத் தலைவரை வரவேற்காதவர் யாவர்?
7. 'பாட்டனி பே' என்பது யாங்குள்ளது?
8. ஆஸ்திரேலியாவிலுள்ள விசித்திரப் பிராணி எது? அதன் இயல்பு என்ன?
9. குக்குவின் கடற்செலவு மக்களுக்கு எவ்வாறு பயன் பட்டது?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'குக்குவின் முதற்கடற்செலவு', 'குக்குவின் தொண்டு' என்பன பற்றிக் கட்டுரைகள் எழுது.

### இலக்கணம் :

#### சுட்டுப்பெயர், வினாப்பெயர்

(அ) சுட்டுப்பெயர் :

அவன், அவள், அவர், அது, அவை
இவன், இவள், இவர், இது, இவை
உவன், உவள், உவர், உது, உவை.

இவை அ, இ, உ என்னும் சுட்டெழுத்துக்களின் அடியாகப்பிறந்த பெயர்கள். ஆதலின், இவை சுட்டுப்பெயர்களாம்.

சுட்டுப்பொருளில் வரும் பெயர்கள் சுட்டுப்பெயர்கள்.

(ஆ) வினாப்பெயர் :

எவன்? எவள்? எவர்? எது? எவை?
ஏவன்? ஏவள்? ஏவர்? ஏது? ஏவை?
யாவன்? யாவள்? யாவர்? யாது? யாவை?

இவை எ, ஏ, யா என்னும் வினாவெழுத்துக்களின் அடியாகப் பிறந்த பெயர்கள். ஆதலின், இவை வினாப்பெயர்களாம்.

வினாப்பொருளில் வரும் பெயர்கள் வினாப்பெயர்கள்.

## 8. பண்டைத்தமிழர் ஆடைகள்

1. 'ஆடையில்லா மனிதன் அரைமனிதன்', என்பது தமிழ் நாட்டில் வழங்கும் பழமொழி. விலங்கிற்கும் மக்களுக்கும் உள்ள வேறுபாடு கூறப்புகின், முதற்கண் ஆடையின்மையையும், ஆடையுடைமையையுமே கூறலாம். ஆதலின், ஆடையில்லா மக்களை மாக்கள் எனவே கூறுவர் அறிவுடையோர். ஆடையே அறிவின் விளைவு; நாகரிகத்தின் சின்னம்; வாழ்க்கையின் ஆடி. தமிழ் மக்களின் ஆடைகளே அவர்கள் வாழ்க்கையின் கண்ணுடியாத் திகழ்ந்தன. அவற்றைப் பற்றிய செய்திகள் தமிழ் நூல்களிற் பெரிதும் இடம் பெற்றிருத்தலே இவ்வுண்மையை உணர்த்தும்.

2. தமிழர் அணிந்த ஆடைகள் பெரும்பாலும் பருத்தி நூலால் ஆனவை. அக்காலத்துப் பெண்-



டிர்க்கு நூல் நூற்றல் சிறந்த தொழிலாய் இருந்து வந்தது. இலக்கண நூலாசிரியர் **பவணந்தியார்**

நூலியற்றும் புலவனைப் பருத்தி நூல் நூற்கும் பெண்ணாக உருவகப்படுத்திக் கூறினர். இதினின்-றும், நூல் நூற்றல் பெண்டிர் செய்துவந்த தொழில் என்பது பெறப்படும். நூல் நூற்றல் காருக வினை-களில் ஒன்ருய் இருந்து வந்ததெனினும், சிறப்பாக அதனை மேற்கொண்டவர் கணவனை இழந்த பெண்டிரேயாவர். அவர்களையே 'பருத்திப் பெண்டிர்' என்பர். அவர்கள் நூற்ற இழை மிக நுண்ணியதாகவும் மென்மையாகவும் இருந்தது. இழையின் நுண்மையால், அதனுல் நெய்யப்பட்ட ஆடையும் மிகவும் நுண்ணியதாய் இருந்தமை பெறப்படும்.

3. ஆடைகள் பருத்தி நூலானேயன்றி, பட்டு நூலாலும் எலிமயிர் முதலியவற்ருலும் நெய்யப்-பட்டன. அவை பாலாவி, புகை, பாம்பின் சட்டை, மூங்கிலின் மெல்லிய தோல்போன்று மிகமென்மை-யாயிருந்தன என்பதும் தெரியவருகின்றது. எலி மயிரால் கம்பளங்கள் நெய்யப்பட்டன. அக்காலத்-தில் பல வகை ஆடைகள் இருந்தனவென நூல்கள் கூறும். ஆடைகளில் பூத்தொழில் செய்யும் வழக்கமும் சங்ககாலத்தில் இருந்து வந்தது. பட்-டாடைகளின் கரைகளில் திரள முடிந்த முடிகள் அழகு பெற அமைக்கப்பட்டிருந்தன. இவற்றை அரசர்கள் தங்களிடம் பரிசில் பெறவரும் பாணர்க-ளுக்கு வழங்குவார்கள். மணமண்டபத்தின் விதா-னம் நீலப்பட்டினுலும், பந்தல் முத்தினுலும் அமைக்கப்பட்டிருந்தன. சரிகை கலந்து நெய்யப்-பட்ட மஞ்சள் நிறப் பட்டாடை 'பீதாம்பரம்' என்றும், 'பொன்னுடை' என்றும் வழங்கப்-பட்டது. இக்காலத்தும் அறிஞர்களுக்குப் பொன்-

ஞடை போர்த்தும் வழக்கம் தமிழ் நாட்டில் காணப்படுகின்றதன்றோ?

4. ஆடைகள் தறியினின்றும் அறுக்கப்பட்டமையால் 'அறுவை' என்றும் பெயர் பெற்றன. துணி, துண்டு என்பனவும் இக்காரணம் பற்றியனவே. ஆடை நெய்தோர் 'அறுவையர்' என வழங்கப்பட்டனர். அவர்கள் வாழ்ந்து வந்த தெரு 'அறுவையர் தெரு' என வழங்கப்பட்டது.

5. பாரி மகளிர் ஒளவையாருக்குச் சிற்ருடை நல்கினர். சிறுவர் அணிந்த ஆடை 'சிற்ருடை' எனப்பட்டது. முழந்தாள் வரை அணியப்பெற்ற வட்டுடையும் அக்கால வழக்கிலிருந்தது. இளந்தளிர்களாலும் மலர்களாலும் ஆக்கப்பட்ட தழையுடையும் பெண்களால் அணியப்பட்டவை அகப்பொருள் நூல்களால் தெரியவருகின்றது. இவை அழகுக்காக ஆடைகளின்மீது அணியப்பட்டன. துறவிகள் காவியுடை உடுப்பார்கள். நூற்றுவர் பின் தொடர வந்த பொற்கொல்லன் சட்டை அணிந்திருந்தான் என்பது சிலப்பதிகாரத்தால் தெரிகிறது. உடலைத்தனக்குள் அடக்கியிருப்பதால் 'மெய்ப்பை' எனவும், மெய் புகுந்துள்ள பையாதலின் 'மெய்புகுபை' எனவும் சட்டை வழங்கப்பட்டது. 'கஞ்சுக மாக்கள்' என்னும் பெயர் அரசியல் அலுவலாளரைக் குறிக்கும். மக்கள் மேலாடை, அரையாடையாகிய ஈராடைகளே உடுத்து வந்தார்கள். தமிழகத்தின் தட்பவெப்ப நிலைக்கேற்ப அவர்கள் ஆடைகளை அவ்வப்போது மாற்றி அணிந்தார்கள். புகாரிலுள்ள பெண்டிர் இரவுப் பொழுதுக்கேற்பக்கோலம் புனைந்தனர் என்பதனுல் இதனையறியலாம்.

6. தமிழ் மக்கள் இயற்கை வாழ்வு வாழ்ந்தார்கள் என்பது வெளிப்படை. ஆதலின், அவர்கள் ஆடை-யணியும் காலத்தும் அவ்வியற்கை வழியினின்றும் பிறழவில்லை. ஔவை மூதாட்டியாரும் 'உண்பது நாழி; உடுப்பது நான்கு முழம்,' என்றே பாடினர். திறன்பட ஆடைகள் நெய்யப்பட்டன. அவை பிற நாடுகளுக்கு அனுப்பப்பட்டு, பெரும்பொருள் ஈட்டுதற்கு உதவின. பண்டு போலத் தமிழ் மக்கள் நெய்தற்றொழிலிற் சிறப்புறுவார்களாக!

### சொற்பொருள் விளக்கம் :

சின்னம் - அறிகுறி (அடையாளம், ஆடி - கண்ணாடி, காருகவினை - வீட்டில் செய்யப்படும் தொழில், அரவுரி - பாம்பின் சட்டை, நோக்கு - பார்வை, மறுகு - தெரு, கஞ்சுகம் - சட்டை, தட்பம் - குளிர்ச்சி.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   நுண்டுகில், பட்டாடை, சிற்றுடை.
2. இரு பொருள் எழுது.:—
   ஆடி, இழை, தறி.
3. திகழ், சூழ், நுண்மையாக, முதல்வர்—இவற்றை வாக்கியங்களில் அமை.

### வினாக்கள் :

1. மனித நாகரிகம் எதனால் அறியப்படுகிறது?
2. நூல் நூற்றல், பெண்டிர்க்கே உரிய தொழில் என்பதை விளக்கு.
3. முன்னோர் நெய்த ஆடைகளின் சிறப்பு எத்தகையது?
4. அக்காலத்தில் வழக்கத்தில் இருந்து வந்த ஆடைகள் சிலவற்றைக் குறிப்பிடு.
5. பட்டாடைகள், தமிழ் நாட்டில் நெய்யப்பட்டமைக்குச் சான்று கூறு.
6. மக்கள் அணிந்த ஆடைகளைப் பற்றி எழுது.

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'முற்காலப் பெண்டிரும் நெய்தற்றொழிலும்', 'முன்னோர் செய்த நெய்தற்றொழில்', 'பழந்தமிழர் ஆடை வகை' என்பவற்றைப் பற்றிக் கட்டுரை எழுது.

### இலக்கணம் :

அ. கீழ் வருவனவற்றுள் அகச்சுட்டுப் புறச்சுட்டுகளை குறிப்பிடு :—

அக்காலத்தில், அவர், அவை, இவ்வுண்மை, அதனை, இவற்றை.

ஆ. கீழ்வருவன இன்ன பெயரென எழுது :—

அறுவை, துணி, மெய்புகு பை, பாணர், கலன்.

இ. 'இக்காலத்து'—இச்சொற்றொடரிலுள்ள எழுத்துக்களின் மாத்திரையைக் கூட்டி எழுது.

ஈ. 'அறுவையர்'—இச்சொல்லிலுள்ள குறில், நெடில்களைக் குறிப்பிடு.

உ. 'இன்றீந்த'—இச்சொற்றொடரிலுள்ள எழுத்துக்களை இனப்படுத்து.

# 9. உரையாடல்

**மோகனன் :** அண்ணு, என் தோழர்கள் என்னைக் ‘கத்தி மூக்கன்’ என்று ஏளனம் செய்கிருர்களே! இந்த மூக்கே இல்லாவிட்டாலும் துன்பமில்லைபோலிருக்கிறதே!

**கமலாகரன் :** தம்பி, அப்படிச் சொல்லாதே, உலகத்தில் ஒரே மாதிரியான மூக்குடையவர் இருவரேனும் இல்லை. மூக்குத்தான் மக்களுக்கு அழகைத் தருகின்றது. உனக்கு கத்தி போன்ற மூக்கு இருப்பது உனக்கு அழகுதானே! அதற்காக ஏன் வருந்துகின்ருய்?

**மோகனன் :** என் மூக்கு அழகாயிருந்தால், பிறர் ஏன் என்னை ஏளனம் செய்கிருர்கள்? மிருகங்களுக்கு இருப்பது போல, முகத்துடன் முகமாய் மறைந்து, இரு துவாரங்கள் மாத்திரம் இருத்தல் போதுமென்றே நினைக்கிறேன்.

**கமலாகரன் :** உன் அறிவுதான் என்னே! மூக்குச் சப்பையாய் இருந்தால் அவனைச் ‘சப்பை மூக்கன்’ என்றும், மூக்கே இல்லாத ஒருவனை, ‘மூக்கறையன்’ என்றும் நாம் சொல்லுகின்ருேமல்லவா? அவ்வாறிருந்தால், உன் நிலைமை என்னவாகுமெனச் சிறிது யோசித்துப் பார்!

**மோகனன் :** ஆம், அண்ணு, நான் பக்கத்து வீட்டுப் பழனிக்கு அரைகுறையான மூக்கு இருப்பதனுல், அவனை, ‘மூக்கறையன்’ என எத்தனையோ முறை ஏளனம் செய்திருக்கிறேன். நான் நினைத்தது தவறுதான்.

**கமலாகரன் :** மோகனு, நீ மூக்கின் அமைப்-

பையும் அதன் பயனையும் அறிந்தால், மூக்கைப் பற்றிய உன் கருத்து முற்றிலும் மாறிவிடும்.

மோகனன்: அண்ணு, அதைப்பற்றி விளக்கமாகச் சொல்.

கமலாகரன்: மூக்கின் முன் பாகம் வெறுந் தசையாலானது; எலும்பாலானதாயிருக்குமாயின் குழந்தை ஓடியாடி விளையாடும்போது தன் மூக்கை உடைத்துக்கொள்ளும். இது இறைவனது படைப்பின் பெருமையைக் காட்டுகிறதன்ருே? மனிதனை அழகுபடுத்துவதும் மூக்குத்தான் என்பதை நீ அறிவாய். மூக்கின் துவாரங்கள் கீழ் நோக்கியிருக்கின்றன. ஆதலின், நாம் உட்கொள்ளும் காற்று இவை வழியாகச் சென்று காற்றுப் பையை அடைகிறது. மூக்கின் உட்பாகத்தில் பொந்துகளும் சந்துகளும் தசைச் சவ்வுமிருக்கின்றன. நாம் உட்கொள்ளும் காற்றில் நச்சுக் கிருமிகளும் தூசிகளும் உள்ளன. மூக்கின் முன்பாகத்திலுள்ள மயிர்கள் தூசிகளைத் தடுத்துவிடுகின்றன. துர்நாற்றத்திலுள்ள கிருமிகளையும் அம்மயிர்களே உட்செல்லாது தடுக்கின்றன.

மோகனன்: அவ்வாருயின், மூக்கை அடைத்துக்கொண்டு, துர்நாற்றமுள்ள காற்றை வாயினுல் உட்கொள்வதனுல் புப்புசங்களில் கிருமிகள் நுழைந்துவிடுகின்றனவா!

கமலாகரன்: ஆம், அதனுலேதான் துர் நாற்றமுள்ள காற்றை உட்கொள்ளாதபடி மூக்கைப் பொத்திக்கொள்கிருேம். வாயினுல் சுவாசிக்கும்போது கிருமிகளும் உள்ளே சென்றுவிடுகின்றன. மூக்கு வழியாகக் காற்றை உட்கொள்ளும்

போது, மூக்கிலுள்ள மயிர்கள் வாயிற்காவலர் போல நின்று அவற்றைத் தடுத்துவிடுகின்றன.

**மோகனன் :** இதனுலேதான், பெரியோர் வாயினுல் சுவாசிக்கக் கூடாது என்கின்றனர் போலும்!

**கமலாகரன் :** மூக்கிலுள்ள மயிர்களைக் கடந்து செல்லும் கிருமிகள் மூக்கிலுள்ள சளிச்சவ்வின்மேல் ஒட்டிக்கொள்ளும்; பின்பு, அங்குச் சுரக்கின்ற கிருமி நாசினியால் கொல்லப்படும். சளிச்சவ்வின் மேற்பரப்பில் கண்ணுக்குத் தெரியாத மிகச் சிறிய உரோமம் போன்ற உறுப்புக்கள் இருக்கின்றன. இவை எப்பொழுதும் உள்ளிருந்து வெளியே அசைந்துகொண்டிருக்கும். இவைகளே உள்ளே சென்ற தூசிகளை வெளியே தள்ளுகின்றன. மூக்கின் பயனை அறிந்துகொண்டாயா?

**மோகனன் :** ஆம், அண்ணு, அறிந்துகொண்டேன். சில சமயங்களில் கண்ணைக் கசக்கும்போது, மூக்கில் நீர் வருகிறதே! அதற்குக் காரணம் என்ன?

**கமலாகரன் :** கண்ணில் உற்பத்தியாகும் நீர் ஒரு குழாய் வழியாக மூக்கின் உட்பாகத்திற்கு வருகிறது. அங்கு அது ஆவியாகின்றது. கண்ணிலிருந்து மிகுதியான நீர் வரும்போது, அது மூக்கு வழியாக வெளிப்படுகின்றது. இதனுலேதான் கண்ணீர் உகுக்கும்போது, மூக்கிலும் நீர் வருகின்றது.

**மோகனன் :** 'அழுத கண்ணும் சிந்திய மூக்கும்' என்று சொல்லுவது இதனுலேதான் போலும்! மூக்கிலுள்ள மயிர்களுக்கு நாம் உட்-

கொள்ளும் தூசிகளையெல்லாம் வெளியே தள்ளக் கூடிய ஆற்றல் உண்டா ?

**கமலாகரன் :** நாம் மிகுதியாகத் தூசிகளை உட்கொள்ளும் போது, அவற்றால் தூசிகளை வெளியே தள்ள முடியாது. மாவு அரைக்கும் ஆலை, மரம் அறுக்கும் பட்டறை, சிமிட்டித் தொழிற்சாலை இவற்றில் வேலை செய்பவர்கள், தங்கள் ஆயுட்காலத்தில் நூறு இராத்தல் தூசியை உட்கொள்ளுகின்றார்கள் என்பதைக் கணக்கிட்டுள்ளனர். அவர்களுடைய காற்றுப் பைக்குள் தூசிகள் செல்ல முடியும். அதனால் அவர்களுள் சிலர் காச நோயினால் வருந்துகின்றனர். தூசிகள் உட்செல்லாதவாறு பாதுகாப்புடன் இருப்பின், ஓரளவிற்கு மூக்கு வாயிற்காவலன் போல நின்று தூசியை உட்செல்லாது தடுக்கும்.

**மோகனன் :** அண்ணா, மூக்கினால் மனிதனுக்கு உண்டாகும் பயனை அறிந்துகொண்டேன்.

### சொற்பொருள் விளக்கம் :

ஏளனம் செய்தல் - இகழ்ச்சி செய்தல், பொந்து - பெரிய துவாரம், சந்து - சிறிய துவாரம், நச்சுக்கிருமி - நஞ்சுள்ள சிற்றுயிர், புப்புசங்கள் - காற்றுப் பைகள், நாசனி - அழிப்பது, உகுத்தல் - சொரிதல்.

### பயிற்சி :

1. பிரித்து எழுது :—
   நச்சுக் கிருமி, மேற்பரப்பு, கண்ணீர்.
2. எதிர்சொல் எழுது :—
   நாற்றம், உட்கொள்ளுதல், துன்பம்.
3. ஓடியாடி, சிந்திய மூக்கு, சந்து பொந்து—இவற்றை வாக்கியத்தில் அமை.

### வினாக்கள் :

1. மூக்கு மனிதனுக்கு எவ்வாறு பயன்படுகின்றது ?
2. மூக்கினுள் தூசியை வெளியே தள்ள அமைந்தது யாது ?
3. வாயினால் சுவாசிப்பது தீமை. ஏன் ?
4. மூக்கிற்கும் கண்ணுக்கும் உள்ள தொடர்பு யாது ?
5. காச நோயினால் மக்கள் வருந்தக் காரணம் என்ன ?

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'மூக்கின் அமைப்பும் அதன் பயனும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம் :

#### திணை (உயர்திணை, அஃறிணை)

மக்கள் பகுத்தறிவுடையவர்கள். எனவே, அவர்கள் உயர்ந்த ஒழுக்கமுடையவர்கள். உயர்ந்த ஒழுக்கத்தை 'உயர்திணை' எனலாம். ஆதலின், மக்கள் உயர்திணைப் பொருள்கள்.

மாடு, ஆடு, பறவை முதலியன பகுத்தறிவில்லாத பொருள்கள் ; எனவே, உயர்ந்த ஒழுக்கமில்லாதவை. ஒழுக்கம் அல்லாத திணை 'அல்திணை' (அஃறிணை). ஆதலின் மக்கள் அல்லாத பொருள்கள் யாவும் அஃறிணைப் பொருள்களாம்.

திணை இருவகைப்படும். அவை உயர்திணை, அஃறிணை என்பன.

உயர்திணை—மக்கள், தேவர், நரகர்.

அஃறிணை—விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, மரம் முதலியன.

# 10. இராசராசன்

1. பண்டைத் தமிழ் நாடு சேர, சோழ, பாண்டிய மன்னர்களால் ஆளப்பட்டது. காலந்தோறும் இப்பேரரசர்களுள் ஒருவர் வன்மை பெற்று, மற்றையரிருவரையும் அடக்கி, தமிழ் நாட்டில் தாமே தனியாட்சி செய்துவந்தனர் என்பதை வரலாற்ருல் அறியலாம். இவர்களுள் **தஞ்சைப் பெருவுடையார் கோவிலைக் கட்டி,** இறவாப் புகழ் பெற்ற **இராசராசன்** முதன்மையானவனெனக் கூறத் தக்கவனுவன். கி. பி. 900 முதல் கி. பி. 1300 வரை சோழர்கள் தமிழ் நாட்டில் சிறந்து விளங்கினுர்கள். அவர்கள் முயற்சியினுல், தமிழகத்தில் தமிழ் ஓங்கியது; சைவமும், வைணவமும் தழைத்தன. இது காரணமாக விண்ணை முட்டும் கோபுரங்களுடன் கோயில்கள் நாடெங்கும் திகழ்ந்தன. இப்பணிகளில் தலைசிறந்து விளங்கியவன் முதலாம் இராசராச சோழனுவன்.

2. இராசராசன் **சுந்தர சோழன்** மகன். இவன் தாய் **வானவன் மாதேவி.** சுந்தர சோழன் இராட்டிர கூடர்களை வென்று, காஞ்சியை மீட்டவன். இராசராசனுக்கு உடன் பிறந்தோனுகிய **ஆதித்த கரிகாலன்** இளமையில் வீரபாண்டியன் தலையைப் பந்தாகக்கொண்டு விளையாடியவன். அவர்களுக்குப் பின் அரசு கட்டில் ஏறிய இராசராசன் பெருவீரனுய் விளங்கினுன். சோழ நாட்டுப் பெருமையை உலகறியச் செய்தவன் இராசராசனேயாவான்.

3. இராசராசன் அரசு கட்டில் ஏறிய சமயத்தில், உள் நாட்டுக் குழப்பம் மிகுந்திருந்தது. அவன் தன் நுண்ணுணர்வினுல் அரண்மனையிலுள்ள மக்களைக் கட்டுப்பாட்டுக்குட்படுத்தினுன்; அரசகுலத்தினரின் ஒழுங்கு மீறிய செயல்களைக் கண்டித்தான்; வீண் புகார்களை ஒழித்தான். அதனுல், அரண்மனையில் அமைதி நிலவியது. பின்னர் அவன் தன் படைப்பலத்தைப் பெருக்கினுன்; 'வேளைக்காரப் படை' என்ற வீரமிக்க படையை நிறுவினுன்; தன் புகழ் பெருக்கப் போற்மேற் சென்ருன். சேரர் புறமுதுகிட்டனர். இராசராசன் தன் கடற்படையின் பலத்தால் சேரர்தம் மரக்கலங்களைச் சிதைத்தான். இதனையே 'காந்தளூரில் கலமறுத்தான்' எனக் கல் வெட்டுக்கள் கூறும். இராசராசன் சேரனை வலி அழித்த பின், பாண்டியனுடன் பொருது அவனையும் வென்ருன். பாண்டியனுக்குத் துணையாயிருந்த ஈழநாட்டரசன் தோல்வியுற்றுத் தன்னுடு சென்ருன். தென்னுட்டைத் தன்னடிப்படுத்திய சோழன் வடநாடு நோக்கினுன்.

4. சாளுக்கிய மன்னர் மேலைச் சாளுக்கியர், கீழைச் சாளுக்கியர் என வழங்கப்பட்டனர். சாளுக்கியனுன விமலாதித்தனைப் போரில்வென்று, அவனுக்குத் தன் மகளான குந்தவையைத் திருமணஞ் செய்வித்தான். பின்னர் அவனுதவி பெற்று, சத்தியாசிரயன் என்னும் சாளுக்கியனை வலியிழக்கச் செய்தான்; கங்கபாடியையும் மலை நாட்டையும் வென்று கைப்பற்றினுன்; இவ்வாறு செல்லுமிடமெல்லாம் வெற்றி பெற்று, தன் நாட்டை விரிவு படுத்தினுன். சோழ நாடு

துங்கபத்திரை நதி வரையிற் பரவியிருந்தது. இராசராசன் மும்முடிச் சோழன், சயங்கொண்டான் என விருதுப் பெயர்கள் வழங்கப் பெற்றான்.

5. இராசராசன் சைவப் பற்றுடையவன்; ஆயினும், பிற சமயங்களை பழிப்பவனல்லன். இவன் மலாயாவையும் சுமத்திராவையும் ஆண்ட சைலேந்திரனுக்கு நாகப்பட்டினத்தில் பௌத்தக் கோயில் ஒன்று கட்ட இசைவு தந்ததோடு, ஆனை



மங்கலம் என்னும் ஊரினையும் அதற்கு முற்றூட்டாகக் கொடுத்தான்; தனக்குச் 'சிவபாத சேகரன்' என்னும் சிறப்புப் பெயர் வழங்கப்பட்டமையால், தான் சிவத் தொண்டு செய்யக்

கருதி, தஞ்சையில் சிவாலயமொன்றை எடுப்பித்-தனன். அதனைக் கட்டுவதற்கு ஆறு ஆண்டுகள் சென்றன. தமிழ் நாட்டுக் கோவில்களில் மிகப் பெரியது அதுவே. அக்கோவிலின் கோபுர நிழல் தரையில் விழாவண்ணம் கட்டப்பட்டுள்ள திறமை யாவரும் வியத்தற்குரியது. அக்கோபுரத்தின் விமானக்கல் ஒரே கல்லாகும். அதனை மேலே ஏற்றுவதற்கு, நான்கு மைல் தூரம் சாரம் அமைக்கப்பட்டது எனவும், அதனை மெய்ப்பிக்கச் '**சாரப் பள்ளம்**' என்னும் ஊர் உள்ளது எனவும் கூறுவர். கோவிலின் உட்சுற்றில் அறுபத்து மூன்று நாயன்மார் உருவங்களும் காணப்படு-கின்றன. இராசராசன் கோவிலில் நாடோறும் தேவாரம் பாடக் குருடர்களையும் நியமித்திருந் தான் எனக் கல் வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

6. இராசராசன் காலத்தில் சேர பாண்டி நாடுகள் '**இராசராச மண்டலம்**' என்னும் பெயரால் வழங்கப்பட்டன. சேரனும் பாண்டிய-னும் இராசராசனை எதிர்த்துப் போரிட்டு, தோல்வியுற்று, நாட்டை விட்டு ஓடினர். சோழன் இரு நாடுகளையும் ஒன்று சேர்த்து, தன் ஆட்சி-யுள் கொண்டு வந்தான்; தன் மகன் இராசேந்-திரனை அந்நாட்டின் காவலனாக்கினான். இதனால், சோழ நாடு மாட்சிமையுடன் விளங்கியது. இராசராசன் நிலத்தையளந்து, நிலத்தீர்வை விதித்தான். அளவைகள் அரசன் முத்திரையுடன் விளங்கின. '**ஆடவல்லான் மரக்கால்**' என்பது அவன் காலத்து வழங்கிய மரக்காலின் பெயர். அவன் காலத்து ஆட்சியாளர் தத்தம் கடமைகளை நன்கு ஆற்றி வந்தனர். ஊர்க் கணக்குகள்

தணிக்கை செய்யப்பட்டன. நன்முறையில் நீதி வழங்கப்பட்டது. இராசராசன் ஆட்சிக்காலம் சோழப் பேரரசின் பொற்காலமெனக் கருதப்படு-கிறது.

### சொற்பொருள் விளக்கம் :

தஞ்சை - தஞ்சாவூர், தழைத்தல் - செழித்தல், விண்ணை முட்டும் - வானளாவும், அரசு கட்டில் - சிங்காதனம், கட்டுப் பாடு - ஒழுங்கு, வேலைக்காரர் - அரசனுடைய மெய்காப்பாளர்; அரசனுடன் போருக்குச் சென்று, அவன் அழியின், தாமும் உயிர் விடுவர், புறமுதுகிடுதல் - தோற்றோடுதல், விருதுப் பெயர் - வெற்றிக்கு அறிகுறியான பெயர், முற்றூட்டு - ஏக போகமாக அனுபவிப்பதற்கு வரியின்றி வழங்கப்பட்ட நிலம்.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   பேரரசு, நாடெங்கும், மும்முடி, சிவாலயம்.
2. எதிர்ச்சொல் எழுது :—
   பழித்தல், தோல்வி, கட்டு, பெருக்கு.
3. வாக்கியங்களில் அமைக்க :—
   வலியிழக்கச் செய், தன்னடிபடுத்து, இசைவு தர, மெய்ப்பி.

### வினுக்கள் :

1. சோழர்களுள் முதன்மையானவன் யாவன்?
2. அவன் பெற்றோர் யாவர்? உடன் பிறந்தோன் யாவன்?
3. இராசராசன் அரசு கட்டில் ஏறியதும் செய்தது என்ன?
4. இராசராசன் வெற்றிகளைப் பற்றி எழுது.
5. இராசராசன் செய்த சிவத்தொண்டு யாது?
6. இராசராசன் நாட்டிற்குச் செய்த நன்மைகள் யாவை?

## இலக்கணம் :

### பாம் : (ஐம்பாற்பெயர்)

**உயர்திணை :**

மக்கள் ஆண், பெண் என இரு பகுப்பாகப் பிரிக்கப்படுகின்றார்கள்.

1. ஆண்களைக் குறிக்கும் பெயர் ஆண்பாற் பெயர் எனப்படும்.

**உதாரணம் :** அவன், இராமன், ஆசிரியன், அரசன்.

2. பெண்களைக் குறிக்கும் பெயர் பெண்பாற் பெயர் எனப்படும்.

**உதாரணம் :** அவள், சீதை, ஆசிரியை, அரசு.

3. ஆடவர்களில் ஒருவருக்கு மேற்பட்டவர், பெண்களில் ஒருவருக்கு மேற்பட்டவர், இரு பாலாரிலும் ஒருவருக்கு மேற்பட்டவரின் பெயர் பலர் பாற்பெயர் எனப்படும்.

**உதாரணம் :** அவர், ஆசிரியர், அரசர், ஆசிரியைகள், அரசிகள்.

ஒருவர் என்பது ஓர் ஆடவனையோ, ஒரு பெண்ணையோ குறிப்பிடின், அஃது 'உயர்வுப் பன்மை அல்லது மரியாதைப் பன்மை' எனப்படும்.

**அஃறிணை :**

அஃறிணையில் ஆண், பெண் என்னும் பகுப்பு இருப்பினும், அதைச் சிறப்பாகக் கொள்ளாததால் ஒன்று, பல என்னும் இரு பிரிவுகளே உள்ளன.

4. அஃறிணைப் பெயர்களில் ஒன்றைக் குறிக்கும் பெயர் ஒன்றன்பாற்பெயர் ஆகும்.

**உதாரணம் :** அது, பசு, நாற்காலி, தெரு.

5. அஃறிணைப் பெயர்களில் ஒன்றுக்கு மேற்பட்டவற்றைக் குறிக்கும் பெயர் பலவின்பாற்பெயர் ஆகும்.

**உதாரணம் :** அவை, பசுக்கள், நாற்காலிகள், தெருக்கள்.

கீழ்வரும் சொற்கள் இன்னபால் என்பதைக் குறிப்பிடு :—
அண்ணன், தச்சன், மயில், வீடு, மாணவிகள், இவர், வேடர், குறத்தி.

# 11. சமூக வளர்ச்சி

1. மக்கள் தோன்றிய காலத்தில் தனி வாழ்க்கை நடத்திய மனிதன், மக்கள் இனம் பெருகப் பெருகச் சேர்ந்து வாழ வேண்டியவனானான். முதற்கண், தன் குடும்பத்துடன் உறவு கொண்டான்; தன் குடும்பத்தவர்களுக்காகத் தான் உழைக்கும் பொறுப்பை ஏற்றான். குடும்பங்கள் பெருகின. குடும்பங்கள் பெருகவே, ஒரு குடும்பத்தினர் பிற குடுபத்தினருக்கு உதவக்கூடிய நிலை ஏற்பட்டது. ஒரு குடும்ப உறுப்பினர் தாம் செய்யும் தொழில் வாயிலாக மற்றக் குடும்பத்தினருக்கு உதவி, இவ்வாறு ஒரு பிரிவினர் மற்றப் பிரிவினர்க்கு இன்றியமையாதவராகிவிட்டனர். எனவே, பலர் கூடி ஒருவர்க்கு ஒருவர் உதவியாக வாழ்ந்து வரும் அமைப்பின் அடிப்படையில் **சமூகம்** தோன்றலாயிற்று.

2. மனிதன் தன் வயிற்றை வளர்க்க வேண்டியவனாயிருக்கின்றான்; யாவர்க்கும் பொதுவான பகையையும் அழிக்க வேண்டியவனாயிருக்கின்றான்; தான் வாழுமிடத்தை வளப்படுத்த வேண்டியவனாயிருக்கின்றான். இவற்றிற்கெல்லாம் தனி மனிதன் உழைப்பைவிட, பலர் சேர்ந்து உழைப்பது மிக்க பயன் தருவதாகும். சமூகத்தை உடலுக்கு ஒப்பிடின், மக்களைத் தனித்தனி உறுப்புக்களாகக் கூறலாம். உறுப்புக்கள் ஒன்று சேர்ந்து உழைப்பதால் உடல் முழுதும் வளர்ச்சி பெறுவது போல, தனிப்பட்ட மக்களின் உழைப்பால் சமூகம் நன்மை பெறுகிறது. பலர் கூடி உழைப்பதனால்,

மிகுதியான உணவுப் பொருள்களையும், வாழ்க்-கைக்கு வேண்டும் ஆடை முதலியவற்றையும் உண்டாக்கலாம். பலர் சேர்ந்து தொழில் செய்யத் தொடங்கியவுடன், அவர்களுக்குள் ஏற்பட்ட ஒத்-துழைப்புக் காரணமாக அவர்கள் பொருளாதாரத் துறையிலும் மேம்பட்டார்கள். இதனை நடை-முறையில் அறிந்த பின்னரே, சமூகம் வளர்வதா-யிற்று.

3. சமூக வளர்ச்சி ஏற்பட ஏற்பட, மனிதன் சமூகத்தினின்றும் பிரிந்து வாழ முடியாதவனா-னான். சமூக வாழ்க்கையில் அதன் உறுப்பினனான மனிதன், சமூகத்துக்குத் தன் உழைப்பைக் கொடுத்து, தனக்கு வேண்டுவனவற்றை அதனிட-மிருந்து பெற்றுக்கொண்டான். இக்காலச் சமூ-கத்தில் ஆசிரியர், அரசாங்கப் பணியாள், தச்சர், கொல்லர், கணக்கர், உழவர், வணிகர் முதலியோர் இருக்கின்றனர். இவர்களுள் ஒருவர் மற்றவருக்கு உதவ வேண்டுபவரே. உழவர் உழைப்பால் பிறர் உணவுப் பொருள்களைப் பெறுகின்றனர். உழ-வரோ, தச்சர், கொல்லர் முதலிய கைத்தொழிலா-ளர் உதவியைப் பெறுகின்றனர். இருவரும் அர-சாங்கப் பணியாளர் ஒத்துழைப்பின்றேல், நல்-வாழ்வு பெற முடியாது. இவ்வாறு ஒப்பிட்டுப் பார்ப்பின், ஒருவரது உதவி மற்றவருக்குத் தேவைப்படுதலை உணரலாம். ஆதலின், சமூக உறுப்பினர்களுக்குள் ஏற்றத்தாழ்வு இருத்தல் கூடாது என்பது விளங்கும். வள்ளுவரும், உழவு, வாணிகம் இவற்றைச் சிறப்பித்து, வேறுபாடில்-லாச் சமூகம் வேண்டும் என்பதை உணர்த்தியுள்-ளார். இதை உணரின், சமூகம் வளர்ச்சியடைய

மக்களுக்குள் சாதி சமய வேறுபாடு நீங்கவேண்டுவது இன்றியமையாததாகும்.

4. மக்களிடையே ஒற்றுமை ஏற்படின், சமூகம் பல வழியிலும் முன்னேற்றம் அடையும். சமூகமாக மனிதர் வாழத்தொடங்கிய சமயத்தில், ஒவ்வொருவரும் தாம் பெற்ற பொருளைப் பிறருக்குக் கைம்மாறு கருதாது வழங்கி வந்தனர். உழவன் விளைவித்த உணவுப் பொருளில் தனக்கு உள்ளது போக எஞ்சியதைப் பிறருக்கு அளித்து வந்தான். பிறர் அவனுக்கு உதவினர். காலஞ்செல்லச் செல்ல, பண்டமாற்று முறை ஏற்பட்டது. இதுவே பின்னர் நாணயங்கள் வழங்குவதற்குக் காரணமானது. பொருளுக்குப் பொற்காசுகள், அல்லது வெள்ளிப் பணங்கள் செலுத்தும் முறை ஏற்பட்டது. சில காலஞ்செல்ல, பாங்குகள் ஏற்பட்டன. வணிகர் பாங்குகளைப் பயன்படுத்திப் பொருள்களைக் கடனுகை வாங்க ஆரம்பித்தனர். உண்டியல்கள் வழங்கப்பட்டன. இவ்வாறு, மக்கள் பல்வேறு துறைகளிலும் உழைக்க ஆரம்பித்தார்கள். உழைப்புப் பெருகப் பெருக நாட்டின் பொருளாதாரமும் செம்மையுறுகின்றது.

5. சமூக முன்னேற்றத்தால் விளைந்த பயன்கள் பல. புதியனவும் சிறந்தனவுமான போக்குவரவுச் சாதனங்களைக் காண்கிறோம். நீராவிக் கப்பல்களும், வானவூர்திகளும் கடலிலும் வான வெளியிலும் உலா வருகின்றன. புகை வண்டித் தொடர்களும், தாமியங்கிகளும் தரையில் பவனி வருகின்றன. மின்சாரக் கருவிகளும், விளக்குகளும் மக்களுக்குப் பல்வேறு வசதிகள் அளிக்கின்றன. மனிதன் தன் வீட்டிலிருந்துகொண்டே,

உலகச் செய்திகளை ஒலி பரப்பியின் மூலம் அறிந்துகொள்கிருன்; தன் அலுவலகத்துடன் தொலையொலினியின் மூலம் தொடர்புகொள்கிருன்; பல ஆயிரக் கணக்கான கல் தொலைவிலுள்ள மனிதனைத் தொலைக்காட்சி மூலம் கண்டு, அளவளாவுகின்ருன்; மருத்துவக்கலையிலும் புதியபுதிய மருந்துகள், சத்திரக் கருவிகளைக் கண்டுபிடித்துள்ளான். சமூக முன்னேற்றமே வாழ்வின் முன்னேற்றம் என்பதில் ஐயமுண்டோ!

6. சமூகக் கல்வியால் தொழிலறிவும் செயல் திறனும் பெற்றுள்ள மக்கள் ஒழுக்கத்திலும் உயர்வு பெறின், அதுவே சமூகத்தின் முழு வளர்ச்சியாகும். உலக மக்கள்,

> " பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்; சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமையான்."

என்னும் திருக்குறட்பாவினுல், நல்லன, தீயனவாகிய செய்தொழிலால் மக்கள் உயர்வு தாழ்வு பெறுவர் என்பதை உணர்ந்து, தீயன விலக்கி, நல்லன மேற்கொண்டு, சமூகத்தை அறிவிலும், ஆற்றலிலும், ஒழுக்கத்திலும் மேம்பாடுறச் செய்தல் வேண்டும்.

### சொற்பொருள் விளக்கம்

இனம் - வகுப்பு, உறவு - தொடர்பு, அரசாங்கப் பணியாளர் - அரசாங்க அலுவலர், ஏற்றத் தாழ்வு - உயர்வு இழிவு, கைம்மாறு-(பிரதியுபகாரம்) பதிலுதவி, உண்டியல் - கையெழுத்திட்ட நாணய உறுதிச் சீட்டு (பணமுறி), உலா வருதல் - சுற்றி வருதல், தாமியங்கிகள் - மோட்டார் வாகனங்கள், தொலைக்காட்சி - டெலிவிஷன், ஒவ்வா - பொருந்தாத, செய்தொழில் - இங்கு நல்வினை தீவினைகள், உயிர் - உயிர்களுள் சிறந்த மக்களினம்.

பயிற்சி :

1. பிரித்தெழுது :—
 பொருளாதாரம், ஏற்றத்தாழ்வு.
 வேறுபாடில்லா, பொற்காசுகள்.
2. வாக்கியங்களில் அமை :—
 பெருகப்பெருக, புதிய புதிய, நல்லன தீயன.
3. எதிர்ச்சொல் எழுது :—
 தனி வாழ்க்கை, பிரிந்து, முன்னேற்றம், புதியன.

வினாக்கள் :

1. சமூகம் எவ்வாறு தோன்றியது ?
2. சமூகத்தை எதற்கு ஒப்பிடலாம் ?
3. பலர் கூடி உழைப்பதன் பயன் என்னை ?
4. சமூகத்தில் சேர்ந்துள்ள பல்வேறு வகுப்பினர் யாவர் ?
5. சமூகம் வளர்ச்சி அடைய, நீங்கள் வேண்டுவது யாது ?
6. மக்களின் உழைப்புப் பல்வேறு துறையிலும் எவ்வாறு பெருகியது ?
7. சமூக முன்னேற்றத்தால் விளைந்த பயன்கள் யாவை ?
8. சமூகம் முழு வளர்ச்சியடையச் செய்ய வேண்டுவது யாது ?

கட்டுரையாக்கப் பயிற்சி :

'சமூகமும் பண்டமாற்றும்', 'தனி மனிதனும் சமூகமும்', 'சமூக வளர்ச்சியும் புதிய கருவிகளும்'—இந்தத் தலைப்புக்களைக் கொண்ட கட்டுரைகள் எழுது.

இலக்கணம் :

எண் : (ஒருமை, பன்மை)

அவன், அவள், அது, மனிதன், பெண், சமூகம்—இவை ஒரு பொருளைக் குறிக்கும் ; ஒருமை எண்.

அவர்கள், அவை, தச்சர், பலர், பல—இவை ஒன்றுக்கு மேற்பட்ட பல பொருள்களைக் குறிக்கும் ; பன்மை எண்.

அவன், அவள்—உயர்திணை ஒருமைப் பெயர்கள்.

அவர், அவர்கள்—உயர்திணைப் பன்மைப் பெயர்கள்.

அது—அஃறிணை ஒருமைப் பெயர்.

அவை—அஃறிணைப் பன்மைப் பெயர்.

ஒருமைக்குப் பன்மையும், பன்மைக்கு ஒருமையும் எழுது:
 இவன், பல, ஆடவர், மக்கள், மாணவி, கண்டது.

## 12. இலக்கியச் சொற்போர்க் கழகம்

(இளங்கோவன் தன் நண்பன் வடிவேலனுக்கு எழுதிய கடிதம்)

30, மேலைத் தெரு,
வடக்கன் குளம்,
30—8—1960.

அன்புள்ள வடிவேலா,

இவண் அனைவரும் நலம். அவண் உள்ளார் அனைவர் நலமும் அறிய விழைகிறேன்.

நீ அன்புடன் எழுதிய கடிதம் கிடைக்கப் பெற்றேன். நீ உன் பள்ளியின் சொற்பயிற்சி மன்றம் பற்றி எழுதியிருந்தாய். யானும் எம்-பள்ளியில் நடைபெறும் இலக்கியச் சொற்போர்க் கழகம் பற்றி உனக்கு எழுத விழைகின்றேன் :

எம் ஒற்றுமைக் கழக உயர்நிலைப் பள்ளியின் மாணவ மாணவியருக்காக இலக்கியச் சொற்-போர்க்கழகம் ஏற்பட்டுள்ளது. இக்கழகம் ஐந்து இல்லங்களாய் இயங்குகின்றது. முதல் நான்கு இல்லங்களும் மாணவருக்காகவும், ஐந்தாம் இல்-லம் மாணவியருக்காகவும் செயலாற்றுகின்றன. இவ்வைந்து இல்லங்களுமே தனித்தனி ' அ ' ' ஆ ' என்னும் பிரிவுடையன. ' அ ' பிரிவு உயர்படிவத்-தினருக்காகவும், ' ஆ ' பிரிவு இடைப் படிவத்தின-ருக்காகவும் அமைக்கப்படுகின்றன. இப்பிரிவு-களின்றி, ஒரே இல்லமாய் இருத்தல் நன்று என நீ நினைப்பாய். சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்-

பட்டிருப்பதனுல், அவ்வப்பிரிவு மாணவ மாணவியர் அச்சமின்றித் தம் கருத்துக்களை எடுத்துரைக்கும் வாய்ப்புப் பெறுகின்றனர் ; பன்முறை சொற்பொழிவாற்றும் வசதியுமுண்டு. ஒரே இல்லமாய் இருக்குமாயின், பேச விழைகின்றவர் பலரும் பெருந்தொகையினரான மாணவ மாணவியரின் முன் நின்று பேச அஞ்சுவர். ஒரு சிலருக்கே அவ்வச்சம் ஏற்படாது. 'அறையில் ஆடி அம்பலத்தில் ஆடு,' என்னும் பழமொழிக்கேற்ப, தத்தம் இல்லங்களில் பேசிப் பழகுகின்ற மாணவர் திங்களுக்கு ஒரு முறை திறந்த அரங்கில் தம் திறனைக் காட்டும் வாய்ப்பு அளிக்கப் பெறுகின்றனர். இவ்வாறு நான்கு இல்லங்களும் ஒருமுறை பள்ளியின் பொது அரங்க மேடையில் பள்ளி மாணவ மாணவியர் யாவரும் கூடியுள்ள சமயத்துத் தத்தம் இல்லச் சார்பாகச் சொற்பொழிவாற்றியும், இசைத் திறனைக் காட்டியும், சொற்போர் ஆற்றியும் வருகின்றனர். இம்முறையால், மாணவ மாணவியர் படிப்படியாகத் தம் பல்வேறு ஆற்றல்களை வளர்த்துவரும் பயிற்சி அளிக்கப் பெறுகின்றனர். ஆண்டிறுதியில் ஐந்தில்லத்தவரும் ஒன்று சேர்ந்து, ஆண்டு விழாக் கொண்டாடுவர். அந்நாளில் அனைவரும் பள்ளி மாணவர் மாணவியர் என்ற நோக்கத்துடன், விழா நிகழ்ச்சிகளில் ஒத்துழைப்பர். ஆண்டு விழா இனிது நடைபெற இல்லங்களின் ஒத்துழைப்பு இன்றியமையாதது. ஒவ்வோர் இல்லமும் சொற்பொழிவு ஆற்றுவதற்கும், பாட்டுப் பாடுவதற்கும், சொற்போர் நிகழ்த்துவதற்கும் தக்க மாணவரைத் தேர்ந்தெடுத்து

அனுப்பும். அம்மாணவர் பற்பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு திறமையுடன் செயலாற்றுவர்.

இலக்கியச் சொற்போர்க்கழகத்தின் முதற் கூட்டம் பொறுப்பாசிரியரின் தலைமையிற்கூடும். அவ்வமயம், மாணவ இல்லத் தலைவரும், செயலா-ளரும், உட்கழகத்தினரும் மாணவர்களால் தேர்ந்-தெடுக்கப்படுவர். இல்லத்தலைவர்தாம் இல்லக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவர். செயலா-ளர் கூட்ட நிகழ்ச்சிகளைக் குறிப்பர்; கூட்ட நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதும் அவருடைய வேலையேயாகும். உட்கழகத்தினர் கூட்டத்தில் பேசப்பட வேண்டுவன, பாடப்பட வேண்டுவன, நடிக்கப்பட வேண்டுவன இன்னின்ன என முன்னதாகவே முடிவுசெய்து, பொறுப்பாசிரியரின் உடன்பாடு பெற்று, மாணவத் தலைவரிடம் தெரி-விப்பர். அவர் செயலாளருடன் கலந்து, கூட்டம் நடை பெறுவதற்கு ஒரு வாரத்துக்கு முன்னரே இல்ல உறுப்பினருக்கு அறிவிப்பர். பள்ளிக்கூட அறிவிப்புப் பலகையில் அறிவிப்பு இதழ் ஒட்டி வைக்கப்படும். இவ்விதழில் பொறுப்பாசிரியர், தலைமையாசிரியர் இவர்களின் கையொப்பங்கள் காணப்படும்.

ஒரு பள்ளியாண்டில் எட்டுக் கூட்டங்கள் நடைபெறும். ஆண்டுவிழாவிற்கு, ஒரு திங்களுக்கு முன்னர், இல்லங்களின் சார்பாகச் சொற்பொழி-வுப் போட்டிகளும், சொற்போர்ப் போட்டிகளும், இசைப் போட்டிகளும் நடத்தப் பெறும். இவற்றில் வெற்றி பெற்றவர்களுக்கு இல்லச் சார்பிலும், தனிப்பட்ட முறையிலும் ஆண்டு விழா நாளன்று பரிசுகள் அளிக்கப்படும்.

இவ்யாண்டில் என் இரண்டாவது 'அ' பிரிவு இல்லத்தில், மாணவச் சமூகத்தொண்டு, விஞ்ஞான வளர்ச்சி, நம் நாட்டுப் பண்பாடு தமிழ்மொழி ஆட்சி மொழியாதலின் நன்மை, இன்பத் தமிழ், உரிமை வாழ்வு, மனித வாழ்க்கைப்போராட்டம் என்பன பற்றிய சொற்பொழிவுகள் மாணவர்களால் ஆற்றப்பட்டன. 'கட்டாயக் கைத்தொழிற் கல்வி நாட்டிற்கு வேண்டும், வேண்டா', 'கல்வி முறையில் சீர்திருத்தம் வேண்டும், வேண்டா', 'கூட்டுப் பண்ணை முறை நாட்டுக்கு வேண்டும், வேண்டா' என்பன பற்றிச் சொற்போர்களும் நடைபெற்றன. இவற்றுள், 'மாணவச் சமூகத் தொண்டு' என்பது பற்றி யான் பேசினேன். அதனைப்பற்றி விரிவாக யான் உனக்கு அடுத்த கடிதத்தில் எழுதுவேன்.

இலக்கியச் சொற்போர்க்கழகம் நன்கு நடைபெறுவதால், யாங்கள் எங்கள் கருத்துக்களைத் திறம்படப் பலர் முன் எடுத்துக் கூறும் பயிற்சி பெறுகின்றோம். இசையில் வல்ல மாணவ மாணவியர் தம் இசைத் திறனைப் பிறருக்குக் காட்டும் வாய்ப்புப் பெறுகின்றனர். ஓவியத்தில் விருப்பமுடையவர் நிகழ்ச்சி நிரல் எழுதப்படும் அறிவிப்பு இதழ்களில் அழகிய ஓவியங்களை வரைந்து தம் திறமையைக் காட்டுகின்றனர்.

இக்கால உலகில் அரசியலில் சொல் வன்மையுடையோரே சிறந்த இடம் பெறுகின்றனராதலின், எதிர்கால அரசியற்றுறையில் நன்கு உழைக்க, இக்கழகம் மாணவ மாணவியர்க்குச் சிறந்த பயிற்சி அளித்து, ஆட்சியாளரை உருவாக்குகின்றது என்பது என் கருத்து. இதனையறிந்து, நீயும், உன்

பள்ளியின் சொற்பயிற்சி மன்றத்தில் விருப்பத்துடன் சேர்ந்துழைப்பாய் என நம்புகிறேன்.

உன் அன்புள்ள நண்பன்,
இளங்கோவன்.

முகவரி :

திரு. மா. வடிவேலன்,
ஆரும் படிவம், ‘அ’ பிரிவு,
நாட்டாண்மைக் கழகப் பள்ளி,
கோவில்பட்டி.

சொற்பொருள் விளக்கம் :

சொற்போர் - விவாதம், குறிப்பிட்ட பொருள் பற்றி விவாதித்தல், அச்சம் - பயம், அம்பலம் - சபை, திறந்த அரங்கு-அறைக்குள் நடிப்பவர் பேசுபவர் ஆகியோர் நடித்துப் பேசும் பொது மேடை, பொறுப்பாசிரியர் - இல்ல மாணவர்க்கு வேண்டுவன செய்யும் பொறுப்புடைய ஆசிரியர், நிரல் - வரிசை.

பயிற்சி :

1. பிரித்தெழுது :—
பன்முறை, ஆண்டிறுதி, இவ்வைந்து.
2. எதிர்ச்சொல் எழுது :—
நன்று, விருப்பு, இறுதி, பழமொழி.
3. வாக்கியங்களில் அமை :
வாய்ப்பு, ஆற்றல், பயிற்சி, உருவாக்கு.

வினாக்கள் :

1. ஒற்றுமைக் கழக உயர்நிலைப்பள்ளியின் இலக்கிய சொற்போர்க் கழகம் ஐந்து பிரிவாகப் பிரிக்கப்படக் காரணம் என்ன?

2. கழகத்தின் நடைமுறைச் செயல்களைக் கண்காணிப்பவர் யாவர்?

3. உட்கழகத்தின் வேலை என்ன?

4. ஓராண்டில் மாணவர் எவ்வெப்பொருள் பற்றிப் பேசினர்?

5. கழகத்தால் மாணவர் அடையும் பயன்கள் யாவை?

### கட்டுரையாக்கப் பயிற்சி:

இக்கடிதத்தில் காணும் பத்திகளைக் கீழ்க்காணுமாறு பாகுபடுத்திச் செய்திகளை விவரித்தெழுது:—

1. முதற்பத்தி—இலக்கியச் சொற்போர்க் கழக அமைப்பும் இயங்கும் முறையும்.
2. இரண்டாம் பத்தி—இல்லப் பதவியாளரும் நடைமுறைகளும்.
3. மூன்றும் பத்தி—இல்லத்தில் பேசப்பட்ட பொருள்.
4. நாம்காம் பத்தி—கழகத்தால் மாணவ மாணவியர் அடையும் பயன்.

# 13. இலக்கியச் சொற்போர்க் கழகம்

**(இளங்கோவன் ஆற்றிய சொற்பொழிவு பற்றிய கடிதம்)**

அன்புடைய நண்ப,

'மாணவர் சமூகத் தொண்டு' என்னும் பொருள் பற்றி யான் ஆற்றிய சொற்பொழிவைப் பற்றி உனக்கு எழுத விழைகிறேன். அதனை நீ நன்கு ஆராய்ந்து அதனைப் பற்றிய உன் கருத்தை எனக்குத் தெரிவிக்கக் கேட்டுக்கொள்கின்றேன். சொற்பொழிவு பின் வருமாறு :

அன்புமிக்க தோழர்களே,

இவண் யான் பேச எடுத்துக்கொண்ட பொருள் 'மாணவர் சமூகத் தொண்டு' என்பதா-கும். முதற்கண் இச்சொற்றொடரின் பொருளை விளக்கிப் பின்னர் இதன் பல பிரிவுகளையும் கூறி, இதனால் எய்தும் பயனையும் இயன்ற அளவு எடுத்துக் கூற விழைகின்றேன் :

சமூகத் தொண்டு என்பது மக்கள் நலங்-கருதி, ஆக்கவழியில் உழைத்தலாகும். கல்வி, கைத்தொழில், உடனலம் இம்மூன்றிலும் மாணவர் அரசாங்கத்துடனும் பிற சங்கத்துடனும் சேர்ந்-துழைத்து, மக்கள் ஆக்கங்கருதி முயலுதல் மாணவர் சமூகத் தொண்டாம். முதற்கண், மாணவர் கல்வித்துறையில் உழைத்தல் எளிது. கற்ற மாணவர் கல்லாத மக்களுக்கு எழுத்தறிவு பயிற்றல் அவர் செய்யத்தகும் தொண்டாகும். விடுமுறை நாட்களில், தத்தம் கிராம மக்களில் எழுத்தறிவில்லாதாருக்கு எழுத்தறிவித்தல் வேண்-

டும். படிப்பில்லாதவர்களுக்குக் கடிதங்களை வாசித்துக் காண்பித்தும், கடிதங்கள் எழுத உதவியும், செய்தித் தாள்களை வாசித்து உலகச் செய்திகளைப் பாமர மக்களுக்குத் தெரிவித்தும் மக்களுக்கு உதவல் கூடும். முதியோர் பள்ளிகளில் சென்று அங்குள்ள பெரியோருக்குப் பல வகையில் பயன்பட உழைக்கலாம். தாம் பள்ளியிற் பயின்ற கதைகள், நீதிகள், விஞ்ஞானப் புதுமைகள் இவைபற்றிச் சொற்பொழிவு ஆற்றலாம். பாமரர்க்குக் கல்வியில் ஆர்வம் உண்டாக்கலாம். இவ்வாறு மாணவர் கல்வித் துறையில் தொண்டாற்றற்குரியவராவர்.

மாணவர் பள்ளியிற் கற்றறிந்த கைத்தொழில்களைக் கிராம மக்கள் செய்யுமாறு தூண்டலாம். தேனீ வளர்த்தல், கோழி வளர்த்தல் இவற்றை நன்முறையில் செய்வதற்கு அறிவுரை கூறலாம். புதிய முறையில் உரம் சேர்த்தற்குரிய வழிகளை உணர்த்தலாம். நூல் நூற்றல் ஒய்வு நேரத்தில் பொருள் வருவாயைப் பெருக்கும் வழி என்பதைக் கூறி, நடைமுறையில் செய்து காண்பித்தலும் வேண்டும். இவையேயன்றி, சமுதாய நலத் திட்டத்தின் கீழ், அரசாங்கம் அளிக்கும் பொருளுதவி, உரம் வழங்குதல், பொறுக்கு விதையளித்தல் இவற்றைப்பற்றி மக்களுக்குத் தெரிவித்து, அவர்கள் அவற்றைப் பெற்று, உழவுத் தொழிலை முன்னேறச் செய்ய வேண்டும். கிராமத் தொண்டர், அரசாங்கப் பணியாளர் இவர்களுடன் ஒத்துழைத்தலும் வேண்டும். இம்முயற்சிகளால் மாணவர் கிராம மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துதல் கூடும்.

வேண்டும். தம் பள்ளியின் சுற்றுப் புறங்களையும் அசுத்தம் செய்யாது பேணுதல் அவர்தம் கடமை. ஏழை மாணவர்க்குத் தம்மாலியன்ற உதவி செய்தல் வேண்டும். தமக்குப் பெற்ருேர் அளிக்கும் பணத்தில் ஆடம்பரச் செலவுகளைக் குறைத்து, ஏழை மாணவர்களுக்கு எழுது கருவி, புத்தகம் முதலியன வாங்கப் பொருள் வழங்குதலும் வேண்டும். மருத்துவ இல்லங்களுக்குச் சென்று, நோய் வாய்ப்பட்டோருக்கு ஆறுதல் கூறலாம். குருடர்க்கும், முடவர்க்கும் உதவி செய்யலாம். வழிப்போக்கர் வழி தெரியாது திகைக்கின், அவர்களுக்குச் செல்லவேண்டும் வழியைக் காண்பித்தல் வேண்டும்.

இறுதியாக, மக்கள் சமுதாய நலங் கருதிப் பணியாற்றும் செஞ்சிலுவைச் சங்கம் போன்ற சங்கங்களின் உறுப்பினராய்ச் சேர்ந்து பணியாற்றுதலும் மாணவர் சமூகத் தொண்டேயாகும். மாணவர் இளமையில் பொதுநலத் தொண்டு செய்து வருவதனுல், பெரியவர்களாகிக் குடும்பப் பொறுப்பை ஏற்குமிடத்தும், தன்னலமின்றித் தம் கடமையை ஆற்றும் பண்பு ஏற்படும். 'இளமையிற் பழக்கம் முதுமையிற் சுபாவம்.' ஆதலின் அன்பர்களே, மாணவப் பருவத்திலேயே மாட்சிமைப்பட்ட பொதுநலப் பண்புடன் விளங்கி, நாட்டுத் தொண்டு செய்யும் நற்பணியாளராய்ச் பணியாற்றுவீர்களாக!

என் சிற்றுரையை அமைதியுடன் செவிமடுத்த உங்களுக்கு என் நன்றி உரியதாகுக!

### சொற்பொருள் விளக்கம் :

எய்தும் - அடையும், ஆர்வம் - விருப்பம், சமுதாய நலத் திட்டம் - மக்கள் நலம் கருதி அரசினர் வகுத்துள்ள திட்டம், ஒளிச்சித்திரப் படம் - ஒளிக்கதிர் மூலம் திரைகளில் விழச் செய்து காட்டும் படம், செஞ்சிலுவைச் சங்கம் - ஹென்றி டுனண்டு என்பவரால் சுவித்ஸர்லாந்தில் ஆரம்பிக்கப்பட்ட உலகப்பொது ஸ்தாபனம்.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   சொற்றொடர், தொண்டாற்றற்கு, பொருளாதாரம், தடுப்பூசி, எழுத்தறிவு.
2. இரு பொருள் எழுது :—
   விதி, செலவு, பணி.
3. கோடிட்ட இடங்களைத் தகுந்த சொல்லால் நிரப்பு :—
   (அ) பள்ளியிற் பயின்ற —— நீதிகள், —— புதுமைகள் இவைபற்றிச் —— ஆற்றலாம்.
   (ஆ) இளமையிற் —— முதுமையிற் ——

### வினாக்கள் :

1. 'சமூகத் தொண்டு' என்பது யாது?
2. மாணவர் கல்வித் துறையில் செய்ய வேண்டிய தொண்டு யாது?
3. கிராம மக்களுக்குப் பொருளாதாரம் நன்னிலை பெற யாது செய்தல் வேண்டும்?
4. உடனல வழிகளாக மாணவர் மேற்கொள்ளத் தக்கன யாவை?
5. பள்ளியில் மாணவர் செய்யவேண்டும் தொண்டு யாது?
6. செஞ்சிலுவைச் சங்கத்தைப்பற்றித் தெரிந்தவைகளை எழுது.

### கட்டுரையாக்கப் பயிற்சி :

'மாணவரும் கல்வித் தொண்டும்' என்பது பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

'கிராம மக்களும் உடனலமும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுது.

கிராம மக்கள் பெரும்பாலும் உடனலம் பேணுதல் இல்லை; அதற்குரிய வழிகளை மேற்கொள்ளுதலும் இல்லை. மாணவர்களுக்கு இதில் பெரும் பொறுப்பு உண்டு. உணவு, உடை, நீர், உட்கொள்ளும் காற்று, சுற்றுப்புறம், வீடு இவற்றைச் சுத்தமாகப் பேணவேண்டிய விதிகளை மாணவர் எடுத்துக்கூற வேண்டுவது அவர்தம் கடமை. பலர் சேர்ந்து தெருக்களைப் பெருக்கிக் குப்பை கூளங்களை ஊருக்கு வெளியே எடுத்துச் சென்று, பெரும்பள்ளங்களில் இட்டு ஊரைச் சுத்தமாக வைக்க வேண்டும் வழியைச் செய்முறையில் செய்து காட்டலாம். மக்களை ஒருங்கு கூட்டி, உடனல வழிகளைப்பற்றிச் சொற்பொழிவு ஆற்றலாம். குடிநீர்க் கிணற்றின் சுற்றுப் பக்கங்களைச் செம்மைப்படுத்திக் கழிவு நீர்க் கால்களை வெட்டுவித்து உதவலாம். சுத்தமான உணவு, சுத்தமான உடை இவற்றின் இன்றியமையாமையை எடுத்துரைக்கலாம். அம்மை குத்துபவர், காலராப் போன்ற நோய்களுக்குத் தடுப்பூசி குத்த வருபவராகிய அரசாங்கச் சுகாதார இலாக்காப் பணியாளர்களுடன் ஒத்துழைத்து, அவற்றின் பயனைக்கூறி, விருப்பமில்லாத மக்களும் அவற்றை விரும்பி ஏற்றுக்கொள்ளுமாறு செய்தலும் செய்யத் தகும் தொண்டாகும். ஒளிச் சித்திரப் படங்கள் மூலம் கிராம வளர்ச்சித் திட்ட அலுவலர் நோய்களைப்பற்றியும், அவை வாராமல் தடுக்கும் முறைகளைப் பற்றியும் விளக்கிக் காண்பிக்கும்போது, அவற்றைக் காண மக்களை அழைத்துச் செல்லுதலும் நேரிதாம்.

மாணவர் வகுப்பறையிலும் சுத்தம் பேணுதல்

### இலக்கணம் :

#### வினைச்சொல் :

உழவன் உழுதான்—இவ்வாக்கியத்தில், உழவன் என்பது பெயர்ச் சொல்; உழுதான் என்பது உழவன் செய்த தொழிலைக் குறிக்கும் வினைச் சொல்.

ஆதலின், தொழிலைக் காட்டுவது வினைச்சொல்லாகும்.

உழவன் உழுதான்—உழுதான்—என்னும் சொல் இறந்த-காலம்.

உழவன் உழுகிருன்—'உழுகிருன்'—என்னும் சொல் நிகழ்காலம்.

உழவன் உழுவான்—'உழுவான்'—என்னும் சொல் எதிர்காலம்.

உழவன்—என்ற சொல் காலம் காட்டவில்லை.

ஆதலின், பெயர்ச் சொல் காலம் காட்டாது; வினைச்சொல் காலம் காட்டும்.

தொழிலைக் காலத்துடன் காட்டுவது வினைச் சொல்லாகும்.

# 14. உயிர்களை உண்ணும் ஓரறிவுயிர்கள்

1. அறிவு என்பது உணர்ச்சியைக் குறிக்கும். ஓரறிவு என்பது தொட்டறிதலாகிய உணர்ச்சியைக் குறிக்கும். மரம், செடி, கொடிகள் ஓரறிவு உயிர்களாம். அவை இடம் விட்டுப் பெயரா; வேர்கள் வழியாகச் செல்லும் சாரத்தையுண்டு வளர்கின்றன. இவற்றிற்குச் சுவை, ஒளி, ஓசை, நாற்றமாகிய பிற உணர்ச்சிகள் இல்லை. ஆயினும், சிற்சில செடிகள் வியக்கும் வண்ணம் பிற உயிர்களை உண்டு வாழ்கின்றன. அவை இயங்கும் வன்மை பெருவிடினும், தம்மீது உட்காரும் பூச்சிகள், அண்மையில் உலாவும் உயிர்கள் இவற்றைத் தம் இலைகளுக்குள் அகப்படுத்தி அவற்றை உயிர் பிரியச் செய்து, அவற்றின் சத்தை உட்கொள்கின்றன. இவ்வகைச் செடிகள் நம் நாட்டில் இலவாயினும் பிறநாடுகளில் உள்ளன. 'தொட்டாற்சுருங்கி' என்னும் செடி நம் நாட்டிலுள்ளது. நாம் அதனைத் தொட்டவுடன், அதன் இலைகள் ஒன்ருேடொன்று சேர்ந்துகொள்கின்றன. இதனைப்போன்றனவே உயிர் உண்ணும் செடிகள்.

2. வட அமெரிக்காவில், காரோலினு நாட்டில் '**வீனஸ் பிளை டிராப்**' என்னும் பெயருள்ள செடியின் இலைகள் உட்புறத்தில் கூரிய முள்ளுடையனவாய்க் காணப்படுகின்றன. பூச்சிகள் இவ்விலைகளின் மீது உட்கார்ந்தவுடன், இலைகளின் இரு மடல்களும் தாமாக மூடிக்கொள்கின்றன. உள்ளே அகப்பட்ட பூச்சிகள் அம்மடல்களிலுள்ள

முட்களால் குத்தப்பட்டு இறக்கின்றன. அவை இலைகளின் அடிப்பாகத்துக்குச் செலுத்தப்படுகின்றது. அங்குச் சுரக்கும் திரவத்தால் கரைந்து செடிக்கு உணவாகின்றன. மடல்கள் மீண்டும்



விரிகின்றன. பூச்சிகளை அகப்படுத்துவதற்கென்றே தனிப்பட்ட அமைப்புடைய செடிகளும் உள்ளன. கிழக்கு இந்தியத் தீவுகளில் 'நெபந்தீஸ்' என்னும் ஒருவகைச் செடி உள்ளது. அதன் இலைகளின் நுனிகளில், கம்பியால் கோக்கப்பட்ட குடம் போன்ற உறுப்பு இருக்கிறது. இக்குடம் போன்ற உறுப்பு வெவ்வேறு வடிவாகப் பெரிதாகவும் சிறிதாகவும் உள்ளது. இதன் நுனியில் இக்குடத்தை மூடத்தக்க, மூடி போன்ற ஓர் இலையின் பகுதி இருக்கிறது. இது நிமிர்த்திவைத்த குடம்போன்று இலையினின்றும் தொங்கும். இதன் வாய்ப்புறத்தில் தேனும் உட்புறத்தில் நச்சுத்திரவ-



மும் உள்ளன. தேனைக் குடிக்க வரும் பூச்சிகள், சிறிய பறவைகள் முதலியன இதன் வாயிற் புகுந்ததும் மூடி இறுக மூடிக்கொள்கிறது. பூச்சிகள் வெளியே வர முடியாமல் நச்சு நீரில் அமிழ்ந்து இறக்கின்றன. அந்நச்சு நீரினுல் கரைந்து இவை செடிக்கு உணவாகின்றன.

3. பூச்சிகளைத் தாமே பிடித்துண்ணும் செடிகளுமுள. அமெரிக்காவில் 'சன் டியூ' என்னும் செடியின் இலைகள் நீண்ட காம்புடையன. இலைகளின் நுனி உட்புறம் சுருண்டு, வெளிப்புறம் முட்களுடன் விளங்கும். முட்களின் நுனியில் ஒரு வகைப் பசை சுரக்கின்றது. பூச்சிகள் அண்மையில் வந்தவுடன் அச்செடி முன்னும் பின்னும் அசைந்தாடுகின்றது. பூச்சிகள் முட்களின் மேற்பட்டு ஒட்டிக்கொள்கின்றன. ஒட்டிக்கொள்-

ளும் பூச்சிகளை இலைகள் சுருட்டி வைத்துக் கொள்கின்றன. ஒரு வகை நீர் சுரந்து பூச்சிகளைக் கொன்று கரைக்கின்றது.

4. 'டையோனியா' என்னும் செடியும் இவ்வாறே தன் இலைகளால் உயிர்களை அகப்படுத்தி அவற்றை உணவாகக் கொள்கின்றது. அதன் இலை இரு பிரிவுகளுள்ளதாய், விளிம்பில் முட்கள் அமைந்ததாய் உள்ளது. முட்களில் ஒன்றைத் தொடினும் இலை மூடிக்கொள்ளும். அவ்விலையில் உட்கார வரும் பூச்சிகள் முட்களுள் ஒன்றைத் தொடினும் இலை உடனே மூடிக்கொள்ளும். பூச்சிகள் இலைகளினிடையே அகப்படுகின்றன. அச்சமயத்து அதனிடமிருந்து ஒரு வகைத் திரவம் உண்டாகி, அவற்றைக் கொன்று, சீரணிக்கச் செய்கின்றது. பூச்சிகள் செரித்த பின், இலைகள் மீண்டும் விரியும். இலைகள் பல நாட்கள் வரை மூடியிருத்தலும் உண்டு.

5. செடிகளின் தன்மையை ஆராய்வோர் வியப்புக்குரிய செடிகளைக் கண்டுபிடித்துள்ளனர். நமது நாட்டில் முற்காலத்தில் பிணி போக்கும் மருந்துதவும் செடிகளையே நம் முன்னோர் போற்றினர். ஊண் உண்ணும் செடிகள் மக்களுக்கு எவ்விதத்திலும் பயன்படுவனவாகத் தெரியவில்லை. அவற்றின் செயலைக்கண்டு வியப்புறலாமேயன்றி, அவை பயன்படுவன அல்ல. நமது நாட்டில் பகலில் விரிந்து காணப்பட்டு, இரவில் குவிந்து காணப்படும் இலைகளையுடைய தாவரங்கள் உள்ளன. அவற்றுள், 'வண்டு கடி இலை' என்னும் மரத்தின் இலைகளும் இரவில் தாமாகவே மூடிக்கொள்கின்றன. அவ்விலைகள் படை முதலியவற்-

# 22. பத்துப்பாட்டுக் காட்சிகள்

## (திருமுருகாற்றுப்படை)

(டாக்டர் மா. இராசமாணிக்கனுர், எம்.ஏ., எல்.டி.,
பி.எச்.டி., ஆராய்ச்சித்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.)

**முன்னுரை:**

திருமுருகாற்றுப்படை என்னும் பாட்டு, முருகப் பெருமானின் அருள் பெற்ற அடியான் ஒருவன், அவ்வாறு அருள் பெறுவதற்கு ஏற்ற பக்குவமுடைய வேருேர் அடியவனுக்கு அப்பெருமான் எழுந்தருளியுள்ள இடங்களையும், அவனுடைய சிறப்பியல்புகளையும் விளக்கிக் கூறி, அவனை அப்பெருமானிடம் ஆற்றுப்படுத்துவதாக (வழிப்படுத்துவது) அமைந்ததாகும். இது 317 அடிகள் கொண்ட நீண்ட அகவற்பா. இதனைப் பாடியவர் நக்கீரர் என்னும் புலவர் பெருமான். முருகப்பெருமான் கோயில் கொண்டுள்ள படை வீடுகள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவினன்குடி, திருஏரகம் (சுவாமிமலை) குன்றுதோருடல், பழமுதிர்சோலை (அழகர் மலை) என்பன. ஒவ்வொரு தலத்தின் சிறப்பும் திருமுருகாற்றுப்படையுள் விளக்கப் பெற்றுள்ளது. இங்கு இறுதி இரண்டு தலங்களைப் பற்றிய காட்சிகள் தரப்படும்.

## 1. குன்றுதோருடல்

முருகன்—குறத்தியர் குரவையாடல்:

எல்லாக் குன்றுகளிலும் குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகன் எழுந்தருளியிருப்பதாகப் பழந்தமிழர் நம்பினர்; எனவே, அவன் குன்றுதோறும் இருந்து அடியவர் அகங்களிக்க விளையாடியும், அருள் புரிந்தும் ஆவன செய்து வருவதாக நம் முன்னோர் நம்பினர்.

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். அங்கு வாழ்பவர் குறவர் எனப்படுவர். அவர்கள் வில்லாற் கொலைத்தொழில் புரியும் இயல்பினர்; தேனைப் புளிக்கவிட்டுச் செய்த கள்ளை மூங்கிற் குழையில் இட்டு முற்றும்படி செய்வர்; முற்றிய மதுவை மலைப்பகுதிகளில் உள்ள தம் உற்றார் உறவினருடன் உண்டு களிப்பர்; களிப்பு மிகுதலால் தொண்டகப் பறை கொட்டிக் குரவைக் கூத்து ஆடுவர். குரவைக் கூத்து என்பது எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடும் ஒரு வகைக் கூத்து. ஆடவர் அக்கூத்தினை ஆடுதலைக் கண்ட பெண் மான் போன்ற சாயலையுடைய குறமகளிர், தாமும் குரவையாடுவர். கச்சு, தண்டை, வாத்தியங்கள், மயில், கோழிக்கொடி தோள் வளை—இவற்றை யுடைய முருகப்பெருமான், ஆடவரும், பெண்டிரும் குரவையாடுதலைக் கண்டு தானும் ஆடலை விரும்புவன். மார்பில் சந்தனம் பூசப்பெற்ற வேலன் என்னும் வெறியாட்டயர்பவன் பச்சிலைக் கொடியையும் சாதிக்காயையும் இடையிட்டுத் தக்கோலக்காய், காட்டுமல்லிகை, வெண்டாளி முதலி-

யவற்றைக் கலந்து கட்டிய மாலையை முருகப் பெருமான் அணிவன்; சிவந்த ஆடையை உடுப்பன்; அசோகந்தளிரைக் காதிற் செருகிக்கொள்வன்; யாழோசை போலும் இனிய குரலுடைய பாடுமகளிருடனே குன்றுகள் தோறும் சென்று, குரவை ஆடும் குறத்தியர் கைகளைத் தழுவியும், ஏந்தியும், முன்கை கொடுத்தும் விளையாடுவன். இங்ஙனம் குறமகளிருடன் கைகோத்தாடுதல் குன்றுதோறாடும் குமரக் கடவுளது இயல்பாகும்.

## 2. பழமுதிர் சோலையின் இயற்கைக் காட்சி

பழமுதிர் சோலை என்னும் மலையிலிருந்து அருவிகள் ஆரவாரத்துடன் கொடிச் சீலைகளைப் போல அசைந்து வரும்; அகிற்கட்டைகளையும், சந்தன மரங்களையும் உருட்டித் தள்ளிக்கொண்டு வரும்; சிறு மூங்கில் மரங்களின் பூக்கள் நிறைந்த கிளைகள் ஒலிக்குமாறு அவற்றை வேரோடு பெயர்த்துத் தள்ளும். வானளாவிய உயர்ந்த மலையில் ஞாயிற்றின் மண்டலத்தைப் போல வட்டமாகச் சமைந்து குளிர்ந்து மணக்கும் விரிந்த தேன்கூடுகளைக் கெடுக்கும்; முற்றிய பலாச் சுளைகளை வாரிச் செல்லும்; மலை உச்சியில் உண்டான சுரபுன்னை மலர்களை உதிரச் செய்யும்; கரிய ஆண்பெண் குரங்குகளை நடுங்கச் செய்யும்; பெண் யானைகள் குளிரால் வருந்தும்படி நீரை வீசும்; அழுக்கடைந்த பொன்னும் மணியும் அழுக்கு நீங்கி ஒளி விட்டுப் பிரகாசிக்கும்படி அவற்றின் மேல் குதிக்கும்; பொன் துகளைக் கரையில் வீசும்; வாழை முறியும்படியும், தெங்கின் இளநீர்க் குலைகள் உதிரும்படியும் அவ்விரண்டையும் மோதும்;

மிளகுக் கொடியின் கரியமலர்க் கொத்துக்களைச் சாய்க்கும்; மயில்களும் பெட்டைக் கோழிகளும் அஞ்சி ஓடச் செய்யும்; ஆண் பன்றிகளும் கரடி-களும் அஞ்சிக் குகைகளிற் பதுங்கும்படி இரைச்-சலிடும். அவ்வோசை கேட்டுக் கொம்புடைய காட்டுப்பசு முழக்கமிட்டு ஆரவாரிக்கும். இத்-தகைய அருவிகளைக் கொண்ட பழமுதிர்சோலை மலையில் முருகப்பெருமான் கோயில் கொண்-டுள்ளான்.

### 3. குறமகள் பூசை செய்யும் காட்சி

முருக பூசை செய்யும் குறமகள் முதலிற் கோழிக் கொடியை நிறுத்துவாள்; அக்கொடிக்கு நெய்யும், வெண்கடுகும் அப்புவாள்; தான் வழி-படுதற்குரிய மந்திரத்தை வாய்க்குள் உச்சரிப்-பாள் அழகிய மலர்களைத் தூவுவாள்; மாறுபட்ட நிறத்தையுடைய இரண்டு ஆடைகளை உள் ஒன்-றும் புறம் ஒன்றுமாக உடுப்பாள்; சிவந்த நூலைத் தன் கையிற் காப்பாகக் கட்டிக்கொள்வாள்; பின்-னர் வெண்மையான நெற்பொறியைத் தூவுவாள்; குறுதியுடன் பிசைந்த வெள்ளரிசியைச் சிறு பலி-யாக இடுவாள்; சிறிய பசுமஞ்சளோடு நல்ல மணமுடைய சந்தனம் முதலியவற்றையும் தெளிப்பாள்; குளிர்ந்த பெரிய செவ்வலரி மாலை-யையும் பிற மாலைகளையும் ஒரே அளவாக அறுத்-துப் பூசை செய்யும் இடத்திற்கு மேல் நின்று தொங்க விடுவாள். "மலைப் பக்கத்து ஊர்களைப் பசியும் பிணியும் பகையும் வருத்தாதொழிக!" என்று வாழ்த்துவாள். பிறகு நறிய தூபம் கொடுப்பாள்; பிறகு தனது நிலத்துக்குரிய

குறிஞ்சிப் பண்ணைப் பாடி, மலையருவியோடு பல வாத்தியங்கள் ஒலிக்கச் சிவந்த மலர்களைத் தூவு-வாள்; குருதி கலந்த தினை அரிசியைப் பரப்பி முருகப்பெருமான் மகிழும்படி வாத்தியங்களை ஒலிக்கச்செய்து வழிபடுவாள். முருகக்கடவுள் அவளது உள்ளத் தூய்மைக்கு உவந்து அருள் புரிவான்.

### சொற்பொருள் விளக்கம் :

ஆறு - வழி, படை - படுத்தல் (செலுத்துதல்), நக்கீரர் - கடைச்சங்கப் புலவர்களுக்குத் தலைவர், குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடமும், பிணைந்து - கோத்து, துகள் - பொடி, விழையும் - விரும்பும், குருதி - இரத்தம், நறிய - மணமுள்ள, தூய்மை - பரிசுத்தம், உவந்து - மகிழ்ந்து.

### பயிற்சி :

1. பிரித்தெழுது :—
   அகங்களிக்க, பச்சிலை, அழுக்கடைந்த, வெள்ளரிசி, செவ்வலரி.
2. இரு பொருள் எழுது :
   படை, குழை, காப்பு.
3. 'ஒலிக்கும்' எனப் பொருள்படும் மூன்று சொற்களை இப்பாடத்திலிருந்து எழுது.

### வினாக்கள் :

1. திருமுருகாற்றுப்படை என்னும் பாட்டு எவ்வாறு அமைந்தது?
2. 'குன்றுதோறாடல்' என்பதன் பொருளை விளக்கி எழுது.
3. 'குரவைக் கூத்து' என்பதனை விளக்கு.
4. குமரக் கடவுளின் இயல்பு என்ன?
5. பழமுதிர் சோலையிலுள்ள அருவியின் செயல்களை எழுது.
6. முருக பூசை செய்யும் குறமகளின் தோற்றத்தையும், செயல்களையும் விளக்கி எழுது.

### கட்டுரையாக்கப் பயிற்சி :

பழமுதிர் சோலையிலுள்ள அருவியை நேரிற்கண்டாற் போல ஒரு கட்டுரை எழுது.

'குறமகளும் முருகனும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம்:

காடு + பசு—காட்டுப்பசு.

ஆறு + படை—ஆற்றுப்படை.

குற்றியலுகரச் சொற்களிலுள்ள ட, ற என்பன பிற சொல்லோடு சேருமிடத்து இரட்டித்தன.

பிரித்தெழுது :—

முரட்டு மனிதன், மாற்றுடை, வேற்றாள், வயிற்றுப் போக்கு

# 23. திருக்குறள் நாடகம்–I

(கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள்)

## காட்சி—1

காடு

(உறுப்பினர் : வேடர் தலைவர், காடன், நாகன் முதலியோர்)

(வேடர்கள் கூத்து நடைபெறுகிறது)

வேங்கைப்புலி, வெங்கரடி வேட்டையாடுவோம் !—நாங்கள்
வேலெடுத்துப் போர்புரிந்து வெற்றி காணுவோம் !
அலறிவரும் சிங்கத்தையும் அடித்து வீழ்த்துவோம் !
வில்லால் அடித்து வீழ்த்துவோம் :—அதன்
பிடரிமயிர் பிடித்துலுக்கிப் பிடித்துத் தள்ளுவோம்
நாங்கள் புரட்டித் தள்ளுவோம்—அதன்
குடல்கலங்கி உடல்பதறக் குத்திவீழ்த்துவோம் !
கையால் குத்தி வீழ்த்துவோம் !
கண்ணில் பட்ட பறவையெல்லாம் மண்ணில் விழச்செய்வோம்
நாங்கள் மண்ணில் விழச்செய்வோம் !
விண்ணில் தைக்கும் குறியைவைத்து வில்வித்தை கற்போம்
நாங்கள் வில்வித்தைக் கற்போம் !

நாகன் : அதோ தலைவர் வருகிறார்; அமைதியாக இருங்கள்.

காடன் : நாகரே, நம் தலைவர் எதற்காக இவ்வளவு அவசரமாக வருகிறார்.

நாகன் : காலையில் சொல்லியிருந்தார், நம் எல்லோரையும் சந்திக்க வேண்டுமென்று ; வந்துவிட்டார். வேடர் தலைவர் வாழ்க !

அனைவரும் : வாழ்க !

வேடர் தலைவர் : வேடர் குலத்தின் வீரர்களே, கோலாகலத்தில் மூழ்கிக் கூத்தாடும் உங்-

களைக் காணும்போது என் உள்ளமும் ஆனந்தக்-கூத்தாடுகிறது! எனினும், வாய்விட்டு மனமாரச்-சிரித்து மகிழக்கூடச் சத்தியில்லாமல் தளர்ச்சி-யடைந்துவிட்டேன். வயது முதிர்ந்த எனக்கு அயராது வேலை செய்யும் ஆற்றல் குன்றிவிட்டது. இனிமேல் உங்களில் ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்துக்கொள்வதே சிறப்பாகும்.

**காடன் :** எங்களுக்குள்ளே தலைவரா? ஏன்? உங்களுக்குப்பின், எங்கள் தலைவராயிருக்க வீரம் செறிந்த இரு மக்களைத் தந்திருக்கிறீர்களே? வழக்கப்படி, அவர்களில் ஒருவரே தலைவராக வர வேண்டும்.

**தலைவர் :** காடரே, வழக்கத்தை நான் மறந்துவிடவில்லை. என்றாலும், வனவிலங்குகளி-னிடையே கலந்து உறவாடி, வீரவாழ்க்கை நடத்-தும் நமது குலத்தினருக்குக் கோழையொருவன் வழக்கம் என்ற பெயரால் தலைவனாக வந்துவிடக்-கூடாது என்பதே என் எண்ணம்.

**நாகன் :** தலைவரே, நீங்கள் கூறுவதைப் பார்த்தால், உங்கள் வீரப் புதல்வர்களைக் கோழை-கள் என்றல்லவா கருதியிருப்பதாகத் தோன்று-கிறது! அப்படி உங்கள் திருவுள்ளம் நினைத்திருந்-தால், அது தவறு என்பதைப் பணிவோடு தெரி-வித்துக்கொள்கிறோம். உங்களுக்குப் பின் எங்க-ளுக்குத் தலைவராய் இருக்கும் ஆற்றல் உங்கள் மைந்தர் இருவரிடமும் உள்ளது.

**தலைவர் :** உங்கள் அனைவருடைய எண்ண-மும் அதுவானால், அப்படியே ஆகட்டும். என் மக்கள் இருவரில் தலைமைக்குத் தகுதியுடையவன் எவன்? தெரிந்துகொண்டீர்களா?

காடன் : இருவரும் தகுதியுடையவரே. ஆனால், வழக்கப்படி மூத்தவரே தலைமையை ஏற்க வேண்டும்.

தலைவர் : அது கூடாது. இருவரில் வீரன் எவனோ, அவனே தலைவனாக வேண்டும்.

காடன் : அதைப்பற்றி எங்களுக்கு இப்போது என்ன கவலை ? உங்களுக்குப் பிறகல்லவா அந்தக் கவலை.

நாகன் : தலைமைக்குத் தகுதியுடையவரை இப்போதே நம் தலைவர் முன்னே தேர்ந்தெடுத்துவிடலாமே ?

எல்லோரும் : ஆம், ஆம் ! அப்படியே செய்வோம்.

தலைவர் : எவ்வாறு தேர்ந்தெடுப்பது ?

நாகன் : நமது பரம்பரை வழக்கப்படி, அவர்கள் இருவரையும் இன்றே வேட்டைக்கனுப்புவோம். வெற்றியோடு வரும் வீரனுக்கே பட்டம் கட்டுவோம்.

தலைவர் : சரி, அப்படியே செய்வோம். பொன்னப்பனையும் சின்னப்பனையும் அழைத்து வாருங்கள்.

இருவரும் : அப்பா, வணக்கம்.

தலைவர் : மக்களே, உங்கள் வீரத்தின் உச்ச நிலையைக் கண்டறிய எங்களுக்கு இப்போது ஒரு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. எங்கே பார்க்கலாம். நீங்கள் இருவரும் உங்களுக்குப் பிடித்தமான கருவிகளை இப்போதே எடுத்துக்கொண்டு, தனித்தனியே சென்று வேட்டையாடி, வெற்றியோடு வந்து சேரவேண்டும். தெரியுமா ?

**இருவரும் :** அப்படியே ஆகட்டும் அப்பா; போய் வருகிறோம்.

## காட்சி—2

### பொன்னப்பன் குடிசை

**பொன்னப்பன் :** வள்ளி, வள்ளி, என் அம்பு எங்கே?

**வள்ளி :** அம்பு ஏன்? போரிடப் போகிறீர்களா?

**பொன்னப்பன் :** இல்லை கண்ணே! எனது வீர வேட்டையைப் பரீட்சை செய்ய விரும்புகிறார் என் தந்தையார்.

**வள்ளி :** வேடன் மகன் வேடனுக்கு வேட்டைப் பரீட்சையா?

**பொன்னப்பன் :** இதில் என்னோடு போட்டியிடுபவன் என் தம்பி.

**வள்ளி :** இருவரில் யார் திறமைசாலி என்பதை அறிவதற்காக?

**பொன்னப்பன் :** மைந்தர்களின் திறமையை அறியவேண்டுவது தந்தையின் கடமைதானே?

**வள்ளி :** நீங்கள்தான் இதில் வெற்றி பெறுவீர்கள் என்று நினைக்கிறேன். நீங்கள் குறிவைத்த எதுவும் தப்புவதில்லையே? இதோ ஈட்டி.

**பொ :** ஈட்டியா, ஈட்டி எதற்கு? வேண்டா. எனக்குத் கைத்திறனைவிட வில் திறன்தான் அதிகம். ஒரே அம்பில் ஒரு பிராணியைக் கொன்று கொண்டுபோய்ச் சேர்க்கிறேன் தந்தையாரிடம்.

**வள்ளி :** அப்படியானால் வில்லும் அம்பும் கொண்டு வருகிறேன்.

பொ : ஆம்; கூர்மையான அம்பு ஒன்றே ஒன்று போதும். மறு அம்பு தேவையில்லை. தந்தையார் கட்டளையும் விருப்பமும் அதுவே.

வள்ளி : இதோ ஒரே அம்புதான். எடுத்துச் செல்லுங்கள். வெற்றிச் செய்தியை விரைவினில் வந்து தெரிவியுங்கள்.

பொ : ஆஹா ! ஓடோடியும் வருவேன்.

வள்ளி : அதோ பாருங்கள்.

பொ : என்ன ?

வள்ளி : உங்கள் தம்பியார் சின்னப்பர் தெற்கு மலைக் காட்டை நோக்கித் தனியாக ஓடு-கிறார்.

பொ : வேலை எடுத்துக்கொண்டா ஓடுகிறான்? அதனால் எந்த விலங்கைக் குத்தப்போகிறான்? வீணாக அலைந்து திரும்புவான் பார் !

வள்ளி : ஓடும் விலங்குகளை அம்புகொண்டு எய்வதுதான் எளிது. அப்படியிருக்க வேலெடுத்-துப் போய்ப்பயனென்ன? பாவம்! வயதிலும் அனு-பவத்திலும் அவர் உங்களுக்குச் சிறியவர்தானே ! சென்று வரட்டும் தம் தோல்வியைத் தெரிவிக்க.

பொ : ஆம்; நான் இரண்டே விநாடியில் எனது வெற்றி வேட்டையை முடித்துத் திரும்பு-கிறேன். (போகிறான்.)

# 24. திருக்குறள் நாடகம்–II

## காட்சி—3

காடு

(காட்டிலே குருவிகளின் சத்தமும் யானையின் பிளிறல் ஒலியும் கேட்கின்றன.)

**ஒருவன் :** ஏய் தம்பி! எங்கே ஓடுகின்றாய்?

**சின்னப்பன் :** யாரது?

**ஒருவன் :** நான்தானப்பா! மரத்தின்மேல் இருக்கிறேன். ஓடிவந்து இதிலேயே ஏறிக்கொள்.

**சின் :** ஏன்?

**ஒரு :** இப்பொழுதுதான் ஒரு யானை அடிபட்டுக் கதறிக்கொண்டு இந்தக் காட்டுக்குள் ஓடிவந்தது. அதன் கண்ணில் பட்டால் உன்னைத் தொலைத்துவிடும்!

**சின் :** அதிருக்கட்டும். அந்த யானை எந்தப் பக்கம் போயிற்று?

**ஒரு :** அடே! எந்தப் பக்கம் போனால் என்ன? முதலில் மரத்தின் மீது ஏறு. கொஞ்சம் பொறுத்திருந்து அப்புறம் செல்.

**சின் :** நான் அந்த யானையைக் காணவேண்டும்.

**ஒரு :** காண வேண்டுமா?

**சின் :** ஆம், நான் அதை வேட்டையாடவந்தேன்.

**ஒரு :** என்னப்பா, வேடிக்கையாக இருக்கிறதே நீ சொல்வது! யானை வேட்டைக்குத் தனியாக வந்தாயா? கையில் ஒன்றுமில்லையே!

சின் : கையிலிருந்த வேலை அதன்மேல் வீசினேன். அதனோடு ஓடிவிட்டது யானை.

ஒரு: என்ன? நீ எறிந்த வேலா அதன் துதிக்கையில் பாய்ந்திருப்பது!

சின் : ஆம்; வயிற்றில் பாய்ந்திருந்தால் யானை அங்கேயே வீழ்ந்திருக்கும்; குறி சிறிது தவறி, துதிக்கையில் பாய்ந்துவிட்டது. இப்போதும் என்ன! எளிதாகச் சென்று வேலைப்பிடுங்கி, மறுமுறையும் குத்தினால் யானை வீழ்ந்துவிடும்.

ஒரு : தம்பி! இனி அது முடியாது. புண்பட்ட யானை புலிபோலச் சீற்றம் கொள்ளும். ஓரிடத்திலும் தங்காமல் ஓடிக்கொண்டேயிருக்கும். அதைத் தேடி அலைவது வீண் வேலை.

சின் : உன்னோடு இவ்வளவு நேரம் பேசியது தான் வீண் வேலை. நான் வேகத்தில் ஓடியிருந்தால் அந்த யானையை இதற்குள் பார்த்திருப்பேன். இந்த நேரத்திற்குள் அது எங்குச் சென்றதோ தெரியவில்லையே

ஒரு: நீ நான்கு காதம் சென்றாலும் அதைக்காண்பது அரிது. ஒரு வேளை திரும்பவும் வழி தவறி இந்தப் பக்கம் வந்தாலும் வரக்கூடும். தேடிப்போ. ஆனால், உன் உயிருக்கு அபாயம் உண்டு. இதில் எச்சரிக்கையாயிரு.

சின் : உன் ஆலோசனைக்கு என் நன்றி உரியது. உயிர் தமிழன்று. இதுவரை யானையின் காலடியைப் பின்பற்றி இங்கு வந்தேன். இக்காட்டில் யானையின் காலடி பதியவில்லை. இங்கிருந்து யானை எந்தப்பக்கம் போயிற்று என்பதை மட்டும் சொல். உதவியாயிருக்கும்.

ஒரு: சரியப்பா, சரி! அதோ அந்தத் தேக்குத் தோப்புத் திடலின் பக்கமாகத்தான் ஓடிற்று. போய்ப்பார்.

## காட்சி—4

குடிசை

(வேடர் தலைவன் முதலியோர்)

**தலை:** காடரே, இருவரில் யார் வெற்றி பெறுவார் என்பது உமது எண்ணம்?

**காடன்:** முதல்வரே வெற்றி பெறுவார். இதிலென்ன தடை?

(பொன்னப்பன், முயலைப் பிடித்த வண்ணம் வந்து, தந்தையை வணங்குகிறான்.)

**பொ:** அப்பா! இதோ இந்த முயல் என்னை ஏமாற்றிவிட்டு ஓட எவ்வளவோ முயன்றது. ஒரே அம்பில் வீழ்த்தினேன்! பொன்னப்பன் குறிக்குத்தப்ப முடியுமா என்ன?

**தலை:** (மகிழ்ச்சியோடு தலையைத் தடவிக்கொடுத்து) தம்பி, சின்னப்பன் எங்கே?

**பொ:** நான் அவனைப் பார்க்கவில்லையே! அவன் இன்னும் வரவில்லையா! (சின்னப்பன் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு வாடிய முகத்துடன் வருகிறான்.)

**நாகன்:** இளையவர் ஏன் இப்படி வாடிய முகத்துடன் வருகிறார்?

**தலை:** சின்னப்பா, என்ன செய்தி?

**சின்:** அப்பா, யானை வேட்டையாட எண்ணி யானைக் காட்டிற்குச் சென்றேன். வேட்டையும் கிடைத்தது. வேலையும் வீசினேன். குறி தவறிப்-

போய்விட்டது. யானையும் பிழைத்து ஓடிவிட்டது. நான் வேலையும் இழந்துவிட்டு வெறுங்கையோடு வந்திருக்கிறேன். அப்பா, மன்னிக்க வேண்டும்! நான் தோல்வியடைந்துவிட்டேன்!

எல்: ஆஹா!

தலை: (தன் மகனை மார்போடு அணைத்து) மகனே, இதுவா தோல்வி! அன்று அன்று! யானை வேட்டைக்கா சென்றாய்? நீயே வீரன்! என் வாழ்நாளில் நான் ஒரு நாளும் தனியே யானை வேட்டைக்குச் சென்றதில்லை. உன் பாட்டனும் தனித்துச் சென்றதில்லை. அவ்வளவு துணிவு எங்களுக்கு ஏற்பட்டதில்லை. செயற்கரிய செய்தாய் நீ! சிறிய செயலில் முனைந்து வெற்றிபெறுவதைவிட, பெரிய பெரிய செயலில் முனைந்து தோல்வியடைவது சிறப்பு. வேட்டை என்றதும் உள்ளத்தில் உயர்வை எண்ணினாய்; முயற்சி செய்தாய். தோல்வியடைந்தாய் என்றாலும், நீயே சிறப்புக்குரியவன்! நீயே வீரன்!

காடன்: சின்னப்பன் வீரன் மட்டுமல்லன். தலைவரே, வீரர்களின் தலைவன்.

எல்: தலைவர் சின்னப்பர் வாழ்க!

'கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.'

**சொற்பொருள் விளக்கம்:**

பிளிறு - ஆரவாரித்து, பிடரி-கழுத்தின் பின் பக்கம், அயராது - சோர்வடையாமல், கோழை - பயங்கொள்ளி, பரீட்சை - சோதனை, சீற்றம் - மிக்க கோபம், துணிவு - தைரியம் (அஞ்சாமை), கானமுயல் - காட்டிலுள்ள முயல், பிழைத்த - தவறிய, ஏந்தல் - தாங்குதல்.

## பயிற்சி :

1. பிரித்தெழுது :—
ஓடோடி, வெறுங்கை, பிடித்துலுக்கி, இக்காடு.

2. இரு பொருள் எழுது :—
ஏந்தல், கானம், பதி, வேலை.

3. வாக்கியத்தில் அமைத்து எழுது :—
அமைதி, குறி, செயற்கரிய, முனைந்து.

## வினாக்கள் :

1. வேடர் தம் வீரச் செயல்களாகக் கூறுவதென்ன ?

2. வேடர் தமக்குத் தலைவனை எவ்வாறு தேர்ந்தெடுத்தனர் ?

3. சின்னப்பன் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்படக் காரணம் என்ன ?

## இலக்கணம் :

கீழ் வருவன இன்ன சொற்கள் எனக் குறிப்பிடு :—
பிளிறி, இது, யார், சிறிய, அடைந்தாய்.

# செய்யுட் பகுதி

## I. வாழ்த்து

### (அ) தேவாரம்

சைவ சமயத்தைச் சேர்ந்த பெரியோர்களாகிய திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும், சுந்தரமூர்த்தி நாயனாரும் சிவபிரானைப் புகழ்ந்து பாடிய பாடல்களின் தொகுதிக்குத் 'தேவாரம்' என்பது பெயர். 'தேவாரம்' என்பது, தே+வாரம் எனப் பிரிந்து, தெய்வத்தைப் பற்றிய இசைப்பாடல்கள்' எனவும், 'தே+ஆரம்' எனப்பிரிந்து, 'தெய்வத்திற்கு அணியும் பூமாலை போன்ற பாமாலை' எனவும் பொருள்படும்.

மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன் :
கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரே ?
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே !

(உ - ம்.) வம் - வாருங்கள் ; வல்லிரே - வல்லமையுடையீரா ? புனிதன் - பரிசுத்தன், சால - மிக, ஏசற்றவர் - (ஏசு+அற்றவர்) குற்றம் அற்றவர்.

'இனிய கனிபோன்று இன்பந்தருவோனாகிய கடவுளை வாழ்த்தி வணங்கி இன்புற்று வாழ்தல் மனிதப் பிறப்பின் உரிய செயல்' என்பது கருத்து.

#### வினாக்கள் :

1. திருநாவுக்கரசர் மக்களை அழைத்துக் கூறுவதென்ன ?
2. ஈசன் என்ற கனி யாருக்கு இனியது ? எவ்வாறு இனியது ?
3. பிரித்தெழுது—பொற்கழல், ஏசற்றவர்.
4. பொருள் கூறு :—வல்லிரே, சால, ஏசு.

பூவினுக்(கு) அருங்கலம் பொங்கு தாமரை ;
ஆவினுக்(கு) அருங்கலம் அரனஞ் சாடுதல் ;
கோவினுக்(கு) அருங்கலம் கோட்ட மில்லது ;
நாவினுக்(கு) அருங்கலம் நமச்சி வாயவே.

—திருநாவுக்கரசர்

ஆசிரியர் வரலாறு :—ஆசிரியர்—திருநாவுக்கரசர். பெற்றோர்—புகழனர், மாதினியார். பிறப்பிடம்—திருவாமூர். தமக்கையார்—திலகவதியார். சமயம்—சைவம். காலம்: கி. பி. ஆரும் நூற்ருண்டு.

### அருஞ்சொற்பொருள் :

அருங்கலம் - ஆபரணம், ஆ - பசு, அரன் - சிவபிரான், அஞ்சு - ஐந்து, அஞ்சு ஆடுதல் - பசுவினிடத்திலிருந்து பெறும் பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்னும் ஐந்தையும் அபிடேகப் பொருளாகக் கொண்டு மூழ்குதல். கோ-அரசன், கோட்டம் - நீதியினின்றும் தவறுதல், நமச்சிவாய—சிவனுக்கு வணக்கம் (பஞ்சாட்சரமந்திரம்.)

'பசுவின் பால், தயிர், நெய், கோமயம், கோசலம் இவற்ருல் அபிடேகித்துச் சிவனை வழிபடல் வேண்டும்; அரசன் கோல் கோடாது ஆளுதல் வேண்டும்; நாவால் சிவன் நாமம்-போற்றல் வேண்டும்,' என்பது கருத்து.

### வினக்கள் :

1. பூக்களுள் சிறந்தது யாது?
2. சிவனை வழிபடுதல் எவ்வாறு?
3. நாவால் செய்யும் தொண்டு யாது?
4. அரசன் கடமை யாது?
5. பிரித்தெழுது :—அருங்கலம், அரனஞ் சாடுதல், கோட்டமில்லது.
6. பொருள் கூறு :—ஆ, கோ, கலம், கோட்டம், ஆடுதல்.

## (ஆ) திருவாசகம்

சைவ சமய குரவராகிய மாணிக்க வாசகரால் சிவபிரானைப் புகழ்ந்து பாடப்பட்ட பாடல்கள் 'திருவாசகம்' எனப்படும். திருவாசகம் என்பது, அழகிய இனிய சொற்களால் ஆகிய நூல்' எனப் பொருள்படும்.

எந்தை யாயெம் பிரான்; மற்றும் யாவர்க்கும்
தந்தை தாய்தம் பிரான்; தனக்(கு) அஃதிலான்;

முந்தி யென்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே.

—மாணிக்கவாசகர்

**ஆசிரியர் வரலாறு :**—ஆசிரியர்—மாணிக்க வாசகர், திருவாதவூரர். பிறப்பிடம்—திருவாதவூர், பெற்றோர்—சம்புபாதா சிருதர், சிவஞானவதியார்.

இவர் திருப்பெருந்துறையில், சிவபிரானால் ஆட்கொள்ளப் பட்டவர். நரி பரியாக்கிய திருவிளையாடல் இவரால் நடைபெற்றது என்பர். இவர் அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சராயிருந்தார். காலம் கி. பி. 9ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள் :

எந்தை - எமது தந்தை, பிரான் - தலைவன், தந்தை - தகப்பன், அஃதிலான் - அவ்வுறவின் முறை இல்லாதவன்.

'எம் தாயும் தந்தையும் தலைவனுமான சிவபிரான் யாவர்க்கும் அம் முறை உள்ளவனாயினும், தனக்குத் தாயும் தந்தையுமில்லாதவன்; யாவரும் அறிதற்கரியவன்; அவனே என் மனத்தினுள் வீற்றிருப்பவனாவான்' என்பது கருத்து.

### வினாக்கள் :

1. சிவபிரான் மாணிக்கவாசகருக்கு எவ்வுறவு முறை உடையவனாவான் ?
2. 'தனக்கு அஃதிலான்' என்பதன் பொருள் என்ன ?
3. இறைவனது இயல்பினை விளக்கி எழுது.
4. பிரித்தெழுது—எந்தை, அஃதிலான், அறிவருஞ் செல்வன்.
5. பொருள் எழுது :—பிரான், சிந்தை.

## (இ) தேம்பாவணி

இயேசுநாதரின் வளர்ப்புத் தந்தையாகிய சூசையப்பரின் வரலாற்றைக் கூறுவது இந்நூல். 'தேம்பா + அணி' எனப் பிரிந்து, 'வாடாத மலர் மாலை' எனப் பொருள்படும். இயேசுநாதரின் சரிதமும், கிறிஸ்து மதக்கொள்கைகளும் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

கார்த்திரள் மறையாக் கடலினுள் மூழ்காக்
கடையிலா தொளிர்பரஞ் சுடரே !
நீர்த்திரள் சுருட்டி மாறலை இன்றி
நிலைபெறும் செல்வநற் கடலே !
போர்த்திரள் பொருதக் கதுவிடா வரணே !
பூவனந் தாங்கிய பொறையே ?
சூர்த்திரள் பயக்கும் நேர்த்திறன் துடைத்துத்
துகள்துடைத் துயிர்தரும் அமுதே !

—வீரமாமுனிவர்

ஆசிரியர் வரலாறு :—ஆசிரியர்—வீரமாமுனிவர் ; இயற் பெயர் - கான்ஸ்டன்டைன் பெஸ்கி ; இவர் இத்தாலி நாட்டினர்; காஸ்திகிலியோனே என்பது பிறப்பிடமாகும். இவர் தமிழில் நூல் பல இயற்றியுள்ளார். காலம் : கி. பி. 18ஆம் நூற்றாண்டு.

அருஞ்சொற்பொருள் :

கார்த்திரள் - மேகக்கூட்டம், ஒளிர் - விளங்கும், 'மறையாமலும் மூழ்காமலும் விளங்கும் சுடர்', மாறு அலை, மடங்கும் இயல்புள்ள அலை, போர்த்திறள் - போர் புரியும் பகைவர் கூட்டம், கதுவிடா - உடைபடாத, பூவனம் - பூவுலகம், பொறை - மலை, சூர் - துன்பம்.

மேகத்தால் மறைக்கப்படாததும், கடலினுள் மூழ்கி மறையாததுமான சுடரே ! அலை வீசும் கடல் போலன்றி, நிலைபேறுடைய கடலே ! சாத்தானது கூட்டமாகிய பகைவர் போர் செய்யினும் தகர்க்க முடியாத கோட்டையே ! மக்களின் பாவச் சுமையைத் தாங்கியுள்ள மலையே ! உன்னை அடைந்தோர் துன்பத்துக்குக் காரணமான பாவத்தைப் போக்கி, இன்பம் பயக்கும் அமுதே !' என்பது பொருள்.

வினாக்கள் :

1. இறைவன் எத்தகைய சுடராவன் ?
2. இறைவன் எத்தகைய அரணவன் ?
3. தன்னை அடைந்தார்க்கு இறைவன் எவ்வாறு அருள் புரிகின்றான் ?
4. பிரித்தெழுது :—மாறலை, கதுவிடாவரணே, துடைத்துயிர்.
5. பொருள் எழுது :—கார், சூர், துடை, கதுவிடா.

## (ஈ) திவ்வியப் பிரபந்தம்

(பெரிய திருமொழி)

குலந்தரும் ; செல்வந் தந்திடும் ; அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் ; நீள்விசும் பருளும் ;
அருளொடு பெருநிலம் அளிக்கும் ;
வலந்தரும் ; மற்றும் தந்திடும் ; பெற்ற
தாயினும் ஆயின செய்யும் ;
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்.
நாராய ணாஎன்னும் நாமம்.

—திருமங்கையாழ்வார்

ஆசிரியர் வரலாறு :—ஆசிரியர்—திருமங்கையாழ்வார், தந்தை—நீலன், பிறப்பிடம்—திருக்குறையலூர், காலம்—கி. பி.; 8ஆம் நூற்றாண்டு.

இவர் சோழ மன்னனுக்குப் படைத்தலைவராய்ப் பணியாற்றி, ஆலி நாடு அளிக்கப்பெற்று, 'ஆலி நாடர்' எனப்பட்டார்.

### அருஞ்சொற்பொருள் :

நிலந்தரம் செய்யும் - இல்லாமற்போக்கும், விசும்பு - விண்ணுலகப் பதவி, பெருநிலம் - மோட்ச உலகம், வலம் - வெற்றி, 'ஓம் நமோ நாராயணாய' என்பது அஷ்டாக்ஷரமந்திரம்.

'திருமாலை வழிபடுபவர் நற்குடிப்பிறப்பு, செல்வம் முதலியன பெற்று, வாழ்க்கையில் வெற்றியுடன் அவனருளால், சுவர்க்க இன்பத்தையுமடைவர் என்பது கருத்து.

### வினாக்கள் :

1. திருமால் அடியவர் இம்மையிற் பெறும் பயன்கள் யாவை ?
2. அவர்க்கு மறுமையில் கிடைப்பன யாவை ?
3. அவர் மக்களுக்கு யாவர் போன்று உதவுவர் ?
4. பிரித்தெழுது :—துயராயின், விசும்பருளும்.

5. பொருள் எழுது:—நிலந்தரம் செய்யும், வலம், விசும்பு, நலம்.

'திவ்வியப் பிரபந்தம்' என்பது திருமாலின் அடியவர் களான பன்னிரண்டு ஆழ்வார்கள் விஷ்ணு தோத்திரமாகப் பாடிய நாலாயிரம் பாடல்களையுடைய நூல்.

## (உ) சீருப்புராணம்

இது நபிநாயகத்தின் வரலாற்றைக் கூறும் நூல். 'சீரு' என்னும் அரபுமொழி வாழ்க்கை வரலாறு எனப்பொருள்படும்.

சிறந்தமெய்ப் பொருளை யழிவிலா மணியைத்
தெரிந்துமுக் காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்
பிறந்தபல் லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பென்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே.

—உமறுப் புலவர்

**ஆசிரியர் வரலாறு:** ஆசிரியர் உமறுப் புலவர் தந்தை-யார் - சேகு முதலியார், பிறப்பிடம் - கீழ்க்கரை, ஆதரித்தவர் - சீதக்காதி என்னும் முஸ்லீம் வள்ளல்; காலம் - கி. பி. 17ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள்:

மெய்ப்பொருள் - உண்மைப் பொருள், இதயாசனம் - (இதய + ஆசனம்) மனமாகிய இருக்கை, மனத்தளவு உறை தல் - அறிவிற்கேற்ப ஞானமளித்தல், மதி - அறிவு.

'உண்மைப் பொருளாய், அழிவில்லாதவனாய், முக்காலமு முணர்ந்து ஆசையைத் துறந்தவருள்ளத்து வீற்றிருந்து, அவரவர் அறிவுக்கேற்ப அருள் செய்து, இன்பதுன்பம், பிறப் பிறப்பில்லாதவனாய இறைவனை மறவாது போற்றுதல் வேண்-டும்,' என்பது கருத்து.

வினுக்கள் :

1. இறைவன் யாவருள்ளத்து வீற்றிருப்பவனுவன் ?
2. இறைவன் எவை இல்லாதவன் ?
3. அவன் உயிர்கட்கு எவ்வாறு உதவுகின்முன் ?
4. பிரித்தெழுது :—
பிறப்பிறப்பு, பல்லுயிர், இதயாசனம், அளவுறைந்து.
5. பொருள் எழுது :—
துறத்தவர், சுவர்க்கப்பதி, மதி, இதயாசனம்.

# II. நீதிப்பகுதி

## (அ) நீதி நெறி விளக்கம்

குற்றமில்லாத மனத்துடனிருத்தலே ஒழுக்கமாம்

பொய்குறளே வன்சொல் பயனிலவென்(று) இந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து—மெய்யில்
புலமைந்தும் காத்து மனமா(சு) அகற்றும்
நலமென்றே நல்லா(று) எனல் ? 1

பிறர் பொருளே விரும்பாதவரே பொருளாற்சிறப்பர்

தத்தம் நிலேக்கும் குடிமைக்கும் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி—எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய(து) ஆகும் பொருள். 2

அறிவழியில் ஈட்டாத பொருள் அல்லல் விளேக்கும்

தீய செயற்செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே ; வேறல்ல;—தீயன
நல்லன ஆகாவாம், நாவின் புறநக்கிக்
கொல்லும் கவயமாய் போல். 3

### மெய்யறிவுடையார் செயல்

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாணல் நீள்கதவாச்
சேர்ப்பர் நிறைத்தாழ் செறிந்து. 4

### வீட்டுலகை அடைபவர்

கற்றுங்(கு) அறிந்தடங்கித் தீதொரீ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனம்திருந்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின்(று) ஒன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார். 5

—குமரகுருபரர்

**ஆசிரியர் வரலாறு** :—ஆசிரியர் குமரகுருபர சுவாமிகள்; பெற்றோர் - சண்முகசிகாமணிக் கவிராயர், சிவகாம சுந்தரி-யார்; பிறப்பிடம் - கைலாசபுரம். இவர் ஐந்து ஆண்டுவரை ஊமையாயிருந்து, பின்னர் முருகனருளால் பேசும் திறன் பெற்றனர் என்பர். காலம்–கி. பி. 1625–1688.

நீதிநெறி விளக்கம் நீதியாகிய வழியைக் காட்டும் வெளிச்சம் போல்வதாகிய நூல். இந்நூல் 101 செய்யுட்களைக் கொண்டது.

### அருஞ்சொற்பொருள் :

1. குறளை - கோட்சொல், பயனில - பயனிலாச் சொற்கள், எய்தாமை - பொருந்தாமல், புலம் ஐந்து - ஐம்பொறிகள் (மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன), வழுக்காது - நெறி தப்பிச் செல்லாமல், மாசு - (காமம், வெகுளி, மயக்கமாகிய) குற்றங்கள், நலம் - நற்செயல்.

மனம் மொழி மெய்களில் குற்றமில்லாது ஒழுகுதலே நல்-லொழுக்கம் எனப்படும்.

2. நிலை - தகுதி (நிலைமை), கடப்பாடு - முறைமை, தாள் ஊன்றி - விடாமல் முயன்று, எய்த்தும் - வருந்தியும் (மறந்தும்), அறக்கடை - பாவவழி, புறங்கடை - தலைவாயில்.

'பிறர் பொருளை விரும்பாது, நல்வழியில் முயல்பவருக்குப் பொருள் எளிதிற் கிடைக்கும்,' என்பது கருத்து.

3. ஆக்கம் - செல்வம், தீயன - தீய வழியில் வந்த செல்வங்கள், இன்பு உற - இன்பம் உண்டாகும்படி, கவயமா - காட்டுப் பசு.

'தீய வழியில் ஈட்டிய செல்வம் பின் துன்பமே விளைக்கும்,' என்பது கருத்து.

4. மெய் - உண்மைப் பொருள், பொய் - நிலையில்லாத சிற்றின்பம், போக்கார் - செலுத்தார், மெய்யுணர்ச்சி-உண்மையறிவு, கைவருதல் - உண்டாதல், கண்ணுக - கருத்தாக, காப்பார் - தடுப்பார், பழி நாணல் - பழிக்கு அஞ்சுதல், நிறை - நிறைந்தகுணம். தாழ் - தாழ்ப்பாள்.

'இறைவனை உண்மையாய் உணர்ந்தவர் ஐம்புலனடக்கி, பழியஞ்சி, நிறை குணமுடையோராய் விளங்குவர்,' என்பது கருத்து.

5. கற்று ஆங்கு அறிந்து - நூல்களைக் கற்று அவைகளில் கூறிய உண்மைகளை அறிந்து, ஒரிஇ - நீக்கி, திருந்தி - நிறைவுற்று, பற்றுவதே பற்றி - செல்லவேண்டிய வழியைப் பின்பற்றி, பணி அறம் - விதிக்கப்பட்ட அறவழி, நீள் நெறி - வீட்டு நெறி.

'நூல்களைக் கற்று, அதன்படி ஒழுகி, அறவழியை விடாது பற்றுபவர் வீட்டை அடைவர்,' என்பது கருத்து.

வினாக்கள்:

1. மொழிக்குற்றங்கள் யாவை?
2. நல்லாறு' என்பது யாது?
3. பொருள் யாவரை வந்தடையும்?
4. கவயமா யாவர்க்கு உவமையாகும்?
5. மெய்யறிவுடையார் செயல் யாது?
6. வீட்டுலகையடையச் செய்ய வேண்டுவதென்ன?
7. பொருள் எழுது:—
   வழு, தாள், புலம், நிறை, காப்பு.
8. பிரித்தெழுது:—
   புலமைந்தும், வேறல்ல, கற்றுங்கு, நீணெறி, பணியறம்.

## (ஆ) நன்னெறி

### உலோபிகளின் பொருள் பிறருடையதேயாம்

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும் ;—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பொய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. 1

### கோபத்தை அடக்குதலே சிறந்த குணமாம்

உள்ளம் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க :—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு. 2

### பிறர் துன்பத்தைத் துடைக்கும் பெரியோர்

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் :—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று. 3

### அன்பிலார்க்குச் செல்வத்தால் பயனில்லை

இல்லானுக்(கு) அன்பிங்(கு) இடம்பொருள் ஏவல்மற்(று)
எல்லாம் இருந்துமவற்(கு) என்செய்யும் ?—நல்லாய் !
மொழியிலார்க்(கு) ஏது முதுநூல் ? தெரியும்
விழியிலார்க்(கு) ஏது விளக்கு ? 4

### இன்சொல் வன்சொற்களின் பயன்

இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே ;—பொன்செய்
அதிர்வளையாய் ! பொங்கா(து) அழல்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல். 5

—சிவப்பிரகாசர்

**ஆசிரியர் வரலாறு :** ஆசிரியர்—சிவாப்பிரகாச சுவாமிகள் பெற்ருேர்—குமாரசாமி தேசிகர்; வாழ்ந்த இடம்—துறைமங்கலம்; பிறப்பிடம்—காஞ்சீபுரம். காலம்—300 ஆண்டுகளுக்குமுன்.

நன்னெறி—நன்மையைத்தரும் வழிகளைப்பற்றிக் கூறும் நூல்.

### அருஞ்சொற்பொருள் :

1. புயல் - மேகம், முகந்து - மொண்டு, பெய்யா - பெய்து, ஆக்குபவர் - செய்பவர், பேறு - செல்வம்.

'உலோபிகளின் பொருள் அதனை எடுத்துப் பிறர்க்கு வழங்குவோரின் பொருளாகவே கொள்ளப்படும்,' என்பது கருத்து.

2. கவர்ந்து - தன் வயப்படுத்தி, காத்துக்கொள்ளும் - அடக்கிக்கொள்ளும், வெள்ளம் - நீர்ப்பெருக்கு, தடம் - விசாலமான, பேர்த்து - உடைத்து.

'மனத்தைத் தன் வயமாக்கிப் பொங்கி எழுகின்ற கோபத்தை அடக்கிக்கொள்வதே சிறந்த குணமாகும்,' என்பது கருத்து.

3. குறை - துன்பம், தீர்வுஉள்ளார் - நீக்குதலை நினையாதவராய், தீர்க்கிற்பார் - நீக்குவார், கறை - களங்கம், மேல் நின்று - ஆகாயத்தில் நிலை பெற்று.

'பெரியோர், தமது துன்பத்தைப் போக்க முயலாமல், பிறர்க்கு உண்டாகும் கொடிய துன்பத்தை நீக்குவர்,' என்பது கருத்து.

4. நல்லாய் - நற்குணமுடையவளே, இங்கு - இவ்வுலகில், அன்பு இல்லானுக்கு - அன்பு இல்லாதவனுக்கு, ஏவல் - வேலைக்காரர், என்செய்யும் - என்ன பயனை அளிக்கும், மொழியிலார் - ஊமையர்.

'அன்பு இல்லாத ஒருவனுக்குப் பிற செல்வங்களால் பயன் ஒன்றுமில்லை,' என்பது கருத்து.

5. பொன்செய் - பொன்னால் செய்யப்பட்ட, அதிர் - ஒலிக்கின்ற, இருநீர் வியன் உலகம் - மிக்க நீரையுடைய கடலால்

சூழப்பட்ட பரந்த உலகில் உள்ளவர், அழல் கதிர்-வெப்பத்தை யுடைய சூரியன், தண் என் கதிர் - குளிர்ச்சி பொருந்திய சந்திரன்.

### வினாக்கள் :

1. கடல், புயல் இவை யாவருடைய செயலை விளக்குகின்றன ?

2. எது எளிது ? எது அரிது ?

3. சந்திரனுக்கு ஒப்பாகக் கூறத்தக்கவர் யாவர் ?

4. இன்சொல், வன்சொல் இவற்றின் பயனை எவ்வுவமைகளால் விளக்கலாம் ?

5. மொழியிலார்க்கு எதனால் பயனில்லை ?.

6. விழி இலார்க்கு விளக்குப்போன்று, யாவர்க்கு எவற்றால் பயனில்லை ?

7. பிரித்தெழுது :—
பிறர்க்குதவி, பேறும், கடனீர், கவர்ந்தெழுந்து, தீர்வுள்ளார், பிறர்க்குறாஉம், இருந்துமவற்கு, முதுநூல்.

8. பொருள் எழுது :—
புயல், தடம், கறை, வியன், அழல், அதிர்.

## (இ) திருக்குறள்

### வான்சிறப்பு :

கொடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 1
விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது. 2

### அறன் வலியுறுத்தல் :

ஒல்லும் வகையான் அறிவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல். 3
மனத்துக்கண் மாசிலன் ஆதல் ; அனைத்தறன் ;
ஆகுல நீர பிற. 4

அன்புடைமை :

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 5
புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு ? 6

விருந்தோம்பல் :

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. 7
வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் ? 8

இனியவை கூறல் :

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. 9
அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 10

செய்ந்நன்றியறிதல் :

தினைத்துணை நன்றி செயினும், பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 11
மறவற்க மாசற்றார் கேண்மை ; துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு. 12

நடுவு நிலைமை :

நன்றே தரினும் நடுவிந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 13
கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு 14

அடக்கமுடைமை :

காக்க பொருளா அடக்கத்தை ; ஆக்கம்
அதனினூங் கில்லை உயிர்க்கு. 15

யாகாவா ராயினும் நாகாக்க ; காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு 16

ஒழுக்கமுடைமை :

ஒழுக்கம் உடைமை குடிமை ; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 17
அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு. 18

பொறையுடைமை :

திறனல்ல தற்பிறர் செய்யினும் ; நோநொந்(து)
அறனல்ல செய்யாமை நன்று. 19
துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோக்கிற் பவர். 20

—திருவள்ளுவர்

**ஆசிரியர் வரலாறு :** ஆசிரியர்—திருவள்ளுவர், பிறப்—பிடம்—திருமயிலாப்பூர், தொழில்—நெய்தற்றொழில், காலம் : கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

(நூலைப்பற்றிய குறிப்பு ஐந்தாம் வகுப்புப் புத்தகத்திற் காண்க.)

அருஞ்சொற்பொருள் :

1. கெடுப்பது - பெய்யாது நின்று கெடுப்பது ; சார்வாய்-துணையாய் ; எல்லாம் மழை - எல்லாம் செய்ய வல்லது மழை.

மக்களின் முயற்சிக்கேற்ப நல்வாழ்வடைந்து உயர்தற்கும் கேடுறுதற்கும் மழையினதாற்றல் காரணமாம்.

2. விசும்பு - மேகம் ; மழை பெய்யாவிடின் ஓரறிவு உயர்-களும் இல்லையாம்.

3. ஒல்லும் வகை - இயலும்திறன் ; ஓவாது - ஒழியாது ; செல்லும் வாய் - எய்துமிடம் (மனம் வாக்குக் காயம் என்பன).

இல்லறம் பொருளளவுக்கேற்பவும் துறவறம் யாக்கை நிலைக்கேற்பவும் செய்தல் வேண்டும்.

4. மனத்துக்கண் மாசிலன் ஆதல் - மனத்தில் குற்ற

மற்றவனுகுக; ஆகுலம் - ஆரவாரம்; அனைத்து - அவ்வள வினதே.

மனம் மாசுற்றவிடத்து அறன் பயனிலதாகுமாதலின், மனத்திற் குற்றமற்றவனுயிருத்தல் வேண்டும்.

5. அகத்து - மனத்தில்; வற்றல் மரம் - வற்றலாகிய மரம். அன்பில்லாதவனது இல்லற வாழ்க்கை தழைக்காது.

6. யாக்கை அகத்து உறுப்பு - யாக்கையுள் நின்று இல்லறத்துக்கு உறுப்பாகிய. மனத்தின்கண் அன்பில்லாதவர்க்குப் புற உறுப்புக்களால் பயனின்று.

7. வைகலும் - நாடொறும், ஓம்புவான் - பேணுவான், பருவந்து - (வறுமையால்) வருந்தி, பாழ்படுதல் - கெடுதல்.

8. மிச்சில் - மிக்காது, மிசைவான் - உண்பவன்.

விருந்தினருக்கு உணவளித்து எஞ்சியதையே உண்பவன் விளை நிலம் வித்திடாது தானே விளையும்.

9. துவ்வாமை - வறுமை, இன்புறாஉம் - இன்பத்தை மிகுவிக்கும்.

இன்சொல் வழங்குபவர்க்கு வறுமைத் துன்பம் இல்லாததாகும்.

10. அல்லவை - பாவங்கள், நல்லவை - நன்மை பயக்கும் சொற்கள்.

நன்மையான சொற்களையும் இனிமையாகச் சொல்லின் பாவங்கள் தேய்ந்து அறம் வளரும்.

11. தினைத்துணை - தினையளவு, நன்றி - உதவி.

சிறிதளவு உதவியையும் பெரியோர் பெரிதாகக் கொள்வர்.

12. துப்பு - ஆதரவு, மாசு - குற்றம், துறவற்க - விடா தொழிக.

பெரியோர் நட்பை விடாதிருத்தல் வேண்டும்; அது போன்று துன்பத்தில் உதவி செய்தவரது நட்பையும் மறவாதிருத்தல் வேண்டும்.

13. நடுவு இகந்து - நடுவு நிற்றலை ஒழிந்து.

நடுவு நிலைமையான் வந்த செல்வம் நிலைபெறும்.

14. நன்றி - அறம், தாழ்வு - வறுமை, கெடுவாக - வறுமையாக.

நடுவு நிலைமையின் நிற்றலால் வரும் வறுமை வறுமையன்று.

15. ஊங்கு - மிக்க, பொருள் - உறுதிப் பொருள்.

அடக்கம் நன்மை விளைக்குமென அறிந்து, அதனைக் காத்துக்கொள்ளுதல் வேண்டும்.

16. யா - காத்தற்குரிய யாவற்றையும், இழுக்கு - குற்றம், சோகாப்பர் - துன்புறுவர்.

நாவடக்கமின்மை துன்பத்தைத் தரும்.

17. இழுக்கம் - ஒழுக்கத்தினின்றும் தவறுதல்.

ஒழுக்கக் கேடு இழிந்த பிறப்பாகக் கருதப்படும் இழிவைக் கொடுக்கும்.

18. அழுக்காறு - பொறாமை.

அழுக்காறுடையவரிடம் செல்வம் சேரப்பெறுதது போன்று ஒழுக்கமில்லாதவனிடம் உயர்வு இல்லாததாகும்.

19. திறன் அல்ல - செய்யத் தகாத கொடியன, நோ-நொந்து - துன்பத்துக்கு வருந்தி.

பிறர் கொடிய துன்பத்தைச் செய்யினும் அவருக்குத் துன்பம் தருவன செய்தல் ஆகாது.

20. இறந்தார் - நெறி கடந்தவர், நோற்கிற்பவர் - பொறுப்பவர்.

பிறர் கூறும் வன்சொற்களைப் பொறுத்துக்கொள்பவர் துறவிகளினும் மாசற்றவர்.

வினாக்கள் :

1. மழையின் அரிய செயல் யாது?
2. மழையின்மையின் தீமை யாது?
3. அறம் எவ்வாறு செய்யப்படுதல் வேண்டும்?
4. அறம் எவ்வளவிற்குப் பயன் உடையதாகும்?
5. வற்றல் மரம் யாருக்கு உவமையாகும்?
6. அன்பில்லாதவனுக்கு எவற்றால் பயனில்லை?
7. வறுமையால் வருந்தாதவன் யாவன்?
8. நிலம் தானே விளைவதற்கும் யாது செய்ய வேண்டும்?
9. இன்சொல் வழங்குபவர் அடையும் பயன் என்ன?
10. உதவியின் பயன் அறிவார் செயல் யாது?
11. யாவர் கேண்மை மறத்தற்குரிய தன்று?
12. எத்தகைய ஆக்கம் விடற்குரியதாம்?
13. 'காக்க பொருளா அடக்கத்தை' என்ற குறளின் கருத்தை எழுது.

14. நாவடக்கமின்மையால் ஏற்படும் தீமை யாது ?

15. ஒழுக்கத்தின் சிறப்பும், ஒழுக்கமின்மையின் இழிவும் யாவை ?

16. பொறுமையுடையார் செய்யத்தகாதது யாது ?

17. பிரித்தெழுது :—மனத்துக்கண், மாசிலன், உறுப் பெல்லாம், பயன்றெரிவார், நடுவிகந்தாம், தற்பிறர், துறந் தாரிற்றூய்மை.

18. பொருள் எழுது :—சார்பு, விசும்பு, ஆகுலம், பருவந்து, மிசைவான், இகந்து, சோகாப்பர், இறந்தார்.

## (ஈ) நான்மணிக்கடிகை

நல்லார்க்கும் தம்மூரென் றூரில்லை ; நன்னெறிச்
செல்வார்க்கும் தம்மூரென் றூரில்லை ;—அல்லாக்
கடைகட்கும் தம்மூரென் றூரில்லை ; தங்கைத்(து)
உடையார்க்கும் எவ்வூரும் ஊர். 1

கல்லா ஒருவற்குத் தம்வாயிற் சொற்கூற்றம் ;
மெல்லிலை வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் ;
அல்லவை செய்வார்க்(கு) அறங்கூற்றம் ; கூற்றமே
இல்லத்துத் தீங்கொழுகு வாள். 2

இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம் ;
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம் ;
கிளைஞரில் போழ்திற் சினங்குற்றம் ; குற்றம்
தமரல்லார் கையகத் தூண். 3

எல்லா விடத்தும் கொலைதீது ; மக்களைக்
கல்லா வளர விடல்தீது ;—நல்லார்
நலம்தீது நாணற்று நிற்பின் ; குலந்தீது
கொள்கை அழிந்த விடத்து. 4

நாற்றம் உரைக்கும் மலருண்மை ; கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம் ;— தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கும் ; முன்னம்
முகம்போல முன்னுரைப்ப(து) இல்.

—விளம்பி நாகனார்

ஆசிரியர் வரலாறு : ஆசிரியர்—விளம்பி நாகனார்; பிறப்பிடம்—விளம்பி ; ஊர்ப்பெயர் சேர்த்து வழங்கப்பெற்றார்.

நூற்பெயர்க் காரணம்—நான்கு மணிகளால் இயன்ற தோள் வளையாகிய கடிகை புற அழகு தருதல் போன்று, இச்செய்யுட்களிற் கூறப்பட்டுள்ள நான்கு கருத்துக்களும் உயிர்க்கணி செய்வன என்பது பற்றி வந்த பெயராம்.

அருஞ்சொற்பொருள் :

1. தம் ஊரென வேறுபாடின்றி வாழ்பவர் - நல்லார், கடைகள் - கீழ் மக்கள், கைத்து உடையாருக்கும் - கையிற் பொருள் உள்ளவர்க்கும், அல்லா - அல்லாத, நன்மை + நெறி—நன்னெறி.

நற்குணமுடைய பெரியார், நல்வழிச் செல்பவர், செல்வர், கீழ் மக்கள் இவர்கள் தத்தம் ஊர் உரிமை பாராட்டல் இல்லை.

2. கூற்றம் - இயமன், (துன்பம் தருவது), மெல்லிலை-மென்மையான இலை, அல்லவை - தீயன, தீங்கொழுகுவாள் - தீய ஒழுக்கமுடையவள்.

கல்லாதவனுக்கு அவன் கூறும் அறிவற்ற சொற்கள் துன்பம் தரும் ; வாழை குலை ஈன்றதனால் தான் அழியப் பெறும்.

தீயன செய்வார் அறத்துணையின்மையால் அழிவர் ; தீயொழுக்கமுடைய பெண் இல்லற இன்பத்தையே அழிப்பவளாவள்.

3. வளம் - செல்வம், வள்ளன்மை - கொடைத் தன்மை, தமர் - தம்மவர், தமர் அல்லார் - தம்பால் அன்பில்லாதவர்.

இளமையிற் கல்லாமையும், செல்வமில்லாத பொழுது கொடையும், உறவினரில்லாவிடத்துச்சினங் கொள்ளுதலும், அன்பில்லாரிடத்து உண்ணலும் தீமை பயப்பனவாம்.

4. கல்லா வளரவிடல் – கல்வி கற்பிக்காது வளர்த்தல், நல்லார் - பெண்கள், நாணற்று—(நாணம்+அற்று) நாணமின்றி, நலம் - அழகு.

பிற உயிரைக் கொல்லுதலும், கல்வி புகட்டாது மக்களை வளர்த்தலும், அழகுடைய பெண்கள் பிறர் காண நிற்றலும், குலத்திற்குரிய ஒழுக்கத்தைக் கைவிடலும் தீமை பயப்பனவாம்.

5. நாற்றம் - மனம், வினைநலம் - தொழிற்றிறம், தூக்கின் - ஆராயின், அகம் - மனம்.

மணத்தால் மலரும், தொழில் திறனால் சொல் வன்மையும், முகத்தோற்றத்தால் மன எண்ணங்களும் தெரியவரும்.

### வினாக்கள் :

1. தம்மூரென உரிமை பாராட்டாதார் யாவர் ?
2. எவ்வெவர்க்கு எவ்வெவை கூற்றாகும் ?
3. குற்றம் தருவன யாவை ?
4. தீமை தருவன யாவை ?
5. 'அகத்தினழகு முகத்தில் தெரியும்,' என்னும் பழமொழியின் கருத்துடைய செய்யுளை எழுது.
6. பிரித்தெழுது :—
   என்றாரில்லை, மெல்லிலை, நாணற்று, மனமுரைக்கும்.
7. பொருள் எழுது :—கடைகள், அல்லவை, வளம், தமர், நலம், காற்றம், சுகம்.

## (உ) ஆசாரக் கோவை

### விலக்குதற்குரிய சொற்கள் :

படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனும் உரையாரே என்றும்
அசையாத உள்ளத் தவர். 1

### விருந்தினருக்கு அளிக்க வேண்டுவன :

முறுவல் இனிதுரை கானீர் மணைபாய்
கிடக்கையொ டிவ்வைந்தும் என்ப தலைச்சென்றார்க்(கு)
ஊணொடு செய்யும் சிறப்பு. 2

### ஆசிரியரிடம் ஒழுகும் முறை :

நின்றக்கால் நிற்க அடக்கத்தால் ; என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார் ; பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக ; மீட்டும்
வினவற்க சொல்லொழிந்தக் கால். 3

### பொன்போல் போற்றத்தக்கன :

தன்உடம்பு தாரம் அடைக்கலம் தன்னுயிர்க்கென்
றுன்னித்து வைத்த பொருளொ—டிவைநான்கும்
பொன்னினைப் போற்போற்றிக் காத்துய்க்க ; உய்யாக்கால்
மன்னிய ஏதம் தரும். 4

### இழுக்கம் தருவன :

அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றனஎன் றெண்ணி
இகழின் இழுக்கந் தரும். 5

—பெருவாயின்முள்ளியார்

ஆசிரியர் வரலாறு : பெருவாயின் முள்ளியார், பிறப்பிடம்—வண்கயத்தூர், காலம்—ஐந்து அல்லது ஆரும் நூற்றுண்டு என்பர். இந்நூல் நல்லொழுக்க முறைகளைத் திரட்டி கோத்த நூலாகும்.

### அருஞ்சொற்பொருள் :

1. படிறு - வஞ்சனை, பட்டியுரை - நாவடக்கமில்லாது பேசுதல், வசை - பிறரைப் பழித்துரைக்குஞ் சொல், புறம் - புறஞ்சொல், அசையாத - நல்லொழுக்கத்தினின்றும் தளராத.

வஞ்சனையான சொல், பயனில்லாச் சொல், வீணான சொல், பிறரைப் பழித்துக் கூறும் சொல், பிறரைக் காணாதவிடத்து அவரை இகழ்ந்து கூறும் சொல் ஒழித்தல் வேண்டும்.

2. முறுவல் - புன்சிரிப்பு (இனிய முகம் காட்டல்), இனிதுரை - இன்சொல், மணை - உட்காரும் பலகை, கிடக்கை -

படுக்குமிடம், தலைச்சென்றார் - தம்மிடம் நாடி வந்த விருந்தினர்.

விருந்தினருக்கு இன்முகத்துடன், இன்சொல் கூறி, கால் கழுவ நீர், மணை, பாய், படுக்க இடம் இவை தந்து உபசரித்தல் வேண்டும்.

3. நின்றக்கால் - பாடஞ்சொல்லுதலை நிறுத்துமிடத்து, ஏவாமை - கட்டளையிடாமல், பெருந்தக்கார் - பெருமைக் குணமுடைய மாணவர், ஈக - ஒப்புவிக்க.

ஆசிரியர் பாடத்தை நிறுத்துமிடத்து அவ்விடத்துத்தான் நிறுத்துதலும், அவர் ஏவாதவிடத்துச் செல்லாதிருத்தலும், அவர் சொல்வனவற்றைக் கேட்டுப் பின் அவ்வாறே ஒப்புவித்தலும் மாணவர் இலக்கணமாம்.

4. தாரம் - மனைவி, உன்னித்து - நினைந்து, ஏதம் - துன்பம்.

தன் உடம்பு, மனைவி, அடைக்கலப் பொருள், பிற்காலத்துக்கெனச் சேமித்தபொருள், இவற்றைப் பொன்போல் போற்றுதல் வேண்டும்.

5. அளை - புற்று, முழை - குகை, பயின்றன - பழகியன.

பாம்பு, அரசன், தீ, சிங்கம் இவை பழக்கப்பட்டன என எளிதாக எண்ணற்குரியன அல்ல.

## வினாக்கள் :

1. மக்கள் விலக்குதற்குரிய சொற்கள் யாவை?
2. விருந்தினருக்கு அளிக்க வேண்டுவன யாவை?
3. ஆசிரியரிடம் எவ்வாறு ஒழுகுதல் வேண்டும்?
4. பொன்போலப் போற்றத்தக்கன யாவை?
5. கவனத்துடன் பழக வேண்டுவன யாவை?
6. பிரித்தெழுது :—கானீர், கேட்டீக, உயிர்க்கொன்றுன்னித்து.
7. பொருள் எழுது :—படிறு, அளை, வசை, முழை, மணை.

# III. கதைப் பகுதி

## குசேலோபாக்கியானம்

குசேலர் அவந்தி நகரையடுத்த மலைச்சாரலில் வாழ்ந்து வந்த அந்தணர்; இளமையில் கண்ணபிரானோடு சாந்தீப முனிவரிடம் கல்வி பயின்றவர்; பின்னர்ச் சுசீலை என்னும் பெண்ணை மணந்தனர். அவர்களுக்கு இருபத்தேழு புதல்வர் பிறந்தனர். அவர்கள் வறுமையால் வாடினார்கள், சுசீலை தன் கணவரைக் கண்ணனிடம் சென்று பொருள் பெற்று வரு-மாறு தூண்டினாள். அவரும் அவள் கொடுத்த அவலைக் கை-யுறையாகக் கொண்டு, துவாரகை சென்று, கண்ணனால் வர வேற்கப்பட்டு, அவனருளால் தம் வறுமைத் துன்பம் நீங்கப்-பெற்றார்.

சுசீலை குழந்தைகளுக்குக் கஞ்சி வார்த்தல் :

ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு
கைநீட்டும் ; உந்தி மேல்வீழ்ந்(து)
இருமகவும் கைநீட்டும் ; மும்மகவும்
கைநீட்டும் ; என்செய் வாளால் !
பொருமியொரு மகவழும் ; கண் பிசைந்தழுமற்
றொருமகவு ; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவெங்
ஙனம்சகிப்பாள், பெரிதும் பாவம் ! 1

குழந்தைகளின் துக்கம் :

‘ அந்தோ ! என் வயிற்றெழுந்த பசியடங்கிற்
றில்லை !’ என அழுமால் ஓர்சேய் ;
‘ சிந்தாத கஞ்சிவார்க் கிலையெனக்கன்
னாய் !’ எனப்பொய் செப்பும் ஓர்சேய் ;
முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும்போ
தினிலொருசேய் முடுகி யீர்ப்ப,
நந்தாமற் றச்சேயும் எதிரீர்ப்பச்
சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய். 2

சுசீலை மக்களைத் தேற்றுதல் :

இவ்வண்ணம் கலாம்விளைக்கும் மைந்தர்களை
நனிநோக்கி இரங்கி ஏங்கிச்
செவ்வண்ணக் கரதலத்தால் அணைத்துமடித்
தலத்திருத்திச் சிறப்புச் செய்தும்
மைவண்ணக் கண்ணீரைத் துடைத்துமுகம்
வெரிந்புறத்தை வந்தும் ஆம்பல்
அவ்வண்ண வாய்முத்தம் கொண்டுநயந்
தோர்விதத்தில் ஆற்றல் செய்வாள். 3

குழந்தைகளின் வினு :

" அடுத்தமனைச் சிறுனொருவன், ' இன்றும(து)
அகங்கறியென் அட்டார் ?' என்று
தொடுத்துவினு யினனுலச் சொற்பொருள்யா
ததுதானெச் சுவைத்தன் ருய் ! நீ
எடுத்துரை," என் றிடுமகவுக் குரைக்கிலது
செய்யெனிலென் செய்வாம் என்று
" மடுத்தவஃ தறிந்திலேன் !" எனமற்ருேன்
றுரைத்ததனை மறக்கச் செய்வாள். 4

குழந்தைகள் பக்கணங் கேட்டல் :

வேறுமனைச் சிருனயின்ற பக்கணங்கண்(டு)
ஓடிவந்து விழிநீர் வாரச்
சீறுதலி லாதவனை முகம்பார்த்தின்
னுனின்ன தின்ருன், என்வாய்
ஊறுதலால் இப்பொழுதே செய்தளித்தி
எனவுடுத்த உடைதொட் டீர்க்கும்
தேறுதலில் சிறுமகவை எடுத்துமார்
பிடையணைத்துச் சிந்தை நோவாள். 5

குழந்தைகள் அணிகலன் கேட்டல் :

"குண்டலம்மோ திரம்கடகம் சுட்டியயல்
மனையார்தம் குழுவிக் கிட்டார் ;
புண்டரிகக் கண்ணனன்றய் ! எனக்குநீ
இடாதிருக்கும் பொருமை என்னே ?
கண்டெடுத்திப் போதி(டு)"எனக் கரைமதலைக்
கில்லாதான் கடன்தந் தானுக்(கு)
எண்தபச்சொல் வார்த்தையென நாளைக்கு
நாளைக்கென் றியம்பிச் சோர்வாள். 6

சுசீலை குசேலரைக் கண்ணனிடம் செல்லத் தூண்டுதல் :

"கண்ணனைத் துளப மாலிகை நிறத்திற்
கமலைவாழ் தரவருள் புரிந்த
மண்ணிய மணியைத் தினந்தினம் போற்றும்
மாசறு தவத்தினர் உள்ளத்
தெண்ணிய எண்ணி யாங்களிப் பவனை
எய்திநம் சிறுருயச் செல்வம்
நண்ணிவா," என்று நங்கைசொற் றிடலும்
நற்றவக் குசேலனீ துரைக்கும் : 7

இரத்தலின் இழிவு :

"மைந்தர்கள் தம்மைப் போற்ற
வளநிதி வேண்டு மென்றய் ;
நந்திய பறவை கானம்
நயந்துறை விலங்கு முன்ன
வந்தபல் உயிர்க்குச் சேம
வைப்புண்டோ ? வருவாய் உண்டோ ?
எந்திடத் தேனும் போயொன்
றிரப்பது தானு முண்டோ ? 8

**வீண் கவலை வேண்டா எனல் :**

அல்லது நாளைக் கென்செய்
வாமெனும் கவலை யுண்டோ?
எல்லையில் ஒன்றி ளுலொன்
றிடிப்புண்டு வாழ்தல் உண்டோ?
ஒல்லுமவ் வுயிர்கள் தம்முள்
உணவிலா திறந்த துண்டோ?
சொல்லரி பரந்த உண்கண்
துடிஇடைப் பேதை மாதே! 9

**கண்ணன் காப்பான் எனல் :**

" கல்லினுள் சிறுதே ரைக்கும்
கருப்பைஅண் டத்து யிர்க்கும்
புல்லுண வளித்துக் காக்கும்
புனத்துழாய்க் கண்ணி அண்ணல்
ஒல்லுநின் மைந்தர்க் காவா
தொழிவனோ? ஒழியான்; உண்மை;
மெல்லியல்! கொண்ட துன்பம்
விடுவிடு; மறந்தும் எண்ணல்." 10

—வல்லூர்—தேவராசப்பிள்ளை

**ஆசிரியர் வரலாறு:** ஆசிரியர்—வல்லூர்த் தேவராசப்பிள்ளை. பிறப்பிடம்—தொண்டை நாட்டிலுள்ள வல்லூர். இவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் தமிழ் பயின்றவர். இவரது காலம், கி. பி. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி.

குசேல+உபாக்கியானம்—குசேலரைப் பற்றிய கிளைக் கதை. குசேலன் - கு+சேலன் கிழிந்த ஆடையை உடையவன்.

**அருஞ்சொற்பொருள் :**

1. உந்தி - தள்ளி, மகவு - குழந்தை, பொருமி - விம்மி.

2. சேய் - குழந்தை, வார்க்கிலை - ஊற்றிஞயல்லை, ஆர்வத்து - ஆசையுடன், முடுகி - விரைந்து, நயக்கும் - விரும்பும்.

3. கலாம் - கலகம், செவ்வண்ணம் - சிவந்த நிறம், மை வண்ணம் - கரிய நிறம், வெரிந் - முதுகு, தைவந்து - தடவி.

4. அட்டார் - சமைத்தார், அகம் - வீடு, தொடுத்து - தொடர்ந்து.

5. அயின்ற - தின்ற, வார - ஒழுக, சீறுதல் - கோபித்தல்.

6. குண்டலம் - காதணி, கடகம் - வளை, சுட்டி - நெற்றியில் அணியும் ஒரு வகையணி, புண்டரிகம் - தாமரை, கரை மதலை - அழுகின்ற பிள்ளை, எண்தப - அளவு கெட.

7. கமலை - தாமரை மலரில் வாழும் இலக்குமி, உய - உய்ய, நிறம் - மார்பு.

8. நந்து - பெருகு, நயந்து - விரும்பி, சேமவைப்பு - சேமிக்கும் பொருள், இரப்பது - யாசிப்பது.

9. இடிப்புண்டு - (சார்ந்து) தாக்கப்பட்டு, அரி-இரேகை, துடி இடை - உடுக்கை போன்ற இடை. (கண்களையும் இடையையும் உடைய பெண்ணே!)

### வினாக்கள் :

1. குழந்தைகள் தாய் கஞ்சி வார்க்கும் போது செய்தன யாவை?

2. குழந்தைகள் அழுது கூறியன யாவை?

3. அழுங் குழந்தைகளைச் சுசீலை எவ்வாறு தேற்றினள்?

4. குழந்தைகள் சுசீலையிடம் கேட்டவை யாவை?

5. சுசீலை உண்மையான விடை கூறுத காரணமென்ன?

6. குழந்தைகள் பக்கணங் கேட்டு, யாது கூறின?

7. சுசீலையிடம் குழந்தைகள் தங்களுக்கு அணியுமாறு கேட்ட அணிகள் யாவை?

8. சுசீலை குசேலரிடம் கேட்டது யாது?

9. இரத்தல் இழிவு எனக் காட்டக் குசேலர் கூறியன யாவை?

10. 'வீண் கவலை வேண்டா,' எனக் குசேலர் கூறியவற்றை எழுது.

11. 'இறைவன் இன்னுயிர் காப்பவன்'—இதற்கு எடுத்துக் காட்டு யாது?

12. பிரித்தெழுது :—மும்மகவு, மகவெங்ஙனம், வயிற்றெழுந்த, தொட்டீர்க்கும், கண்ணன்ஞய், நயந்துறை, மெல்லியல், நற்றவம்.

13. பொருள் எழுது :—புண்டரிகம், நந்தாது, வெரிந், அரி, புல்லுணவு, நயந்து.

14. இருபொருள் எழுது :—உந்தி, சுட்டி.

### கட்டுரையாக்கம் :

‘குசேலரில்லதுக் கலகம்’, ‘சுசீலையின் பொறுமை’, ‘குசேலர் வறுமை’—இவை பற்றிக் கட்டுரை எழுது.

# IV. பல்சுவைப் பகுதி

## (அ) குற்ருலக் குறவஞ்சி

(மலைவளம்)

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும் ;
 முற்றமெங்கும் பரந்து பெண்கள் சிற்றிலைக்கொண் டோடும்;
கிழங்கு கிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம் ;
 கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம் ;
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும் ;
 தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும் ;
வழங்குகொடை மகராசர் குறும்பலவில் ஈசர்
 வளம்பெருகும் திரிகூட மலைஎங்கள் மலையே. 1

—திரிகூட இராசப்பக் கவிராயர்

### மீனுட்சியம்மை குறம்

(குறத்தியர் உணவும் செயலும்)

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக்
 கிழங்குகல்லி எடுப்போம் ;
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
 கொடியில் வைத்துத் தொடுப்போம் ;
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்
 தேறலும்வாய் மடுப்போம் ;

பசுந்தழையும் மரவுரியும்
இசைந்திடவே உடுப்போம் ;
செழுந்தினையும் நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம் ;
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம் ;
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம் ;
எங்கள்குறக் குடிக்கடுத்த
இயல்பிதுகாண் அம்மே ! 2

—குமரகுருபரர்

அருஞ்சொற் பொருள் :

குறத்தி குறி சொல்லும் முறையில் பாடப்படும் நூல் குறம், குறவஞ்சி எனப்படும். (குறவஞ்சி - குறப்பெண்.) குற்றாலநாதர் மீது பாடப்பட்ட குறத்தி பாட்டு குற்றாலக் குறவஞ்சியாகும். மதுரை மீனாட்சியம்மை மீது பாடப்பட்ட குறம் மீனாட்சியம்மை குறமாகும்.

1. ஆசிரியர் - திரிகூட இராசப்பக்கவிராயர், பிறப்பிடம் - குற்றாலத்தையடுத்த மேலகரம்.

திரை - அலை, சிற்றில் - சிறிய மணல் வீடு, கிம்புரி - யானைத் தந்தத்திற் கட்டும் பூண், வெம்பு - உலர்ந்த, அலர் - விரிந்த, வெடிக்கும் - வீசும், குறும்பலவில் ஈசர் - குறுகிய பலாவின் கீழ் எழுந்தருளிய குற்றாலநாதர்.

2. ஆசிரியர்—குமரகுருபரர், பிறப்பிடம்—கைலாசம் என்னும் ஸ்ரீவைகுண்டம். இவரது காலம் 300 ஆண்டுகளுக்கு முன்.

கல்லி - தோண்டி, தேறல் - தேன், பாயல் - படுக்கை, கயற்கணி - (கயல் கண்ணி) கயல் போன்ற கண்களையுடைய மீனாட்சியம்மை, இயல்பு - தன்மை.

## (ஆ) முக்கூடற்பள்ளு

### (பயிர் விளைவு)

பதிந்த நடவுதேறிப் பரப்புமேறிப்
பசந்துகுருத்து மேன்மேற் பரந்துசெறிந்து
முதிர்ந்த தமிழிசைக்கு முடியசைக்கும்
முதல்வர்எ னத்தழைத்து முதல்குழைந்தே
பொதிந்த பொதியைநீட்டிப் பூட்டிக்காட்டிப்
புரப்போர்பொன் இணங்குகை போலவணங்கி
எதிர்ந்த கதிர்முளைத்தே இடைபழுத்து
ஏற்ற விளைவுதோற்றம் தோற்றியதே. 1

முறுக விளைந்தவாறு முற்றுந்தேற்ற
முக்கூடற் பண்ணைக்காரன் முன்புகூற
மறுபடி யவன்சொன்ன வகைநன்றென்ன
மள்ளர் மலரும்நாடி வயலிற்கூடி
உறுவதெய்வ நிலைபோற்றி உரிமைசாற்றி
ஓங்குநாட் கதிர்செய்தார் உவகைசெய்தார்
நிறுவி நிறைதெரிந்தார் நெருங்கிக் கதிரரிந்தார்
நிரப்பி யரிகளெங்கும் பரப்பினரே. 2

கடிதிற்புரி முறுக்கிக்கதிர் கட்டியிறுக்கிக்
கட்டினகட் டெடுப்பார், களத்தில்விடுப்பார்;
நெடிதிற்சுமை கள்எடுப்பார், நிலைப்போர்வைப்பார்;
நின்றபோரைச் சரிப்பார்; நிலத்தில்விரிப்பார்;
பிடியிற் பகடணைப்பார்; பிணையிற்பிணைப்பார்;
பிணையல் விடத்தொடப்பார்; பெற்றுக்குவிப்பார்'
பொடிவைக்கோ லைத்தவிர்ப்பார்; பொலியைக்குவிப்பார்;
பொலிதூற்றி யாற்றிப்பொலி பொலியென்றளப்பார். 3

—என்னுயினைப்புலவர்

'பள்ளு' என்பது பயிர்த்தொழில் செய்து வாழும் பள்ளர் வாழ்க்கையைக் கூறும் நூல். இது உழத்தி பாட்டு எனவும் பெயர் பெறும். இது உழவுச் செய்திகள் கூறுவது. முக்கூடல்

பொருநையுடன் சிற்றாறும் மற்றொரு காட்டாறும் சேருமிடம்—சீவலப்பேரி என்னும் ஊர். இது அங்குள்ள திருமாலாகிய அழகர் மீது பாடப்பட்ட நூல்.

ஆசிரியர்—என்னயினாப் புலவர்; சொக்கநாதப் புலவர் எனவும் கூறுவர். இவர் கி. பி. 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

அருஞ்சொற்பொருள் :

1. பதிந்த - நட்ட, பசப்பு - பசுமை, முதல்வர் - திருமால், பொதி - கதிர்த்தொகுதி, இணங்குகை - கொடுத்தல்.

2. முறுக - முழுவதும், நாடி - விரும்பி, நாட்கதிர் கொய்தல் - நல்ல நாளில் கதிர் அறுக்க ஆரம்பித்தல், அரி - அரிந்த கதிர்த்தொகுதி.

3. புரி - வைக்கோற்புரி, பிடியிற்பகடு - யானை போன்ற பகடு, பிணை - பிணையல், பொலி - தூற்றாத நெற்குவியல்.

இப்பாடல் நாற்றுப்பறித்து, நடவு ஆகி, பயிர் நன்றாய் விளைந்து, அறுவடை செய்து, போரேற்றுவதைக் கூறுகின்றது.

## (இ) இக்காலப் பாடல்கள்

### 1. அழகு

மொட்டுக்குள் ளேயழகு—சும்மா
மூடிக் கிடக்குதம்மா !—கதிர்
பட்டு மலர்ந்துவிட்டால்—அது
பரிம ளிக்குதம்மா ! 1

சிந்தனைக் குள்ளழகு—நாளும்
தேங்கிக் கிடக்குதம்மா !—மனப்
பந்தனை யற்றுவிட்டால்—அது
பரந்து தாவுதம்மா ! 2

பாரினி லேயழகு—கண்
பார்வையைக் கொஞ்சுதம்மா !—அதன்
போர்வை நீக்கிவிட்டால்—தெய்வப்
பொலிவு காணுதம்மா ! 3

மோனத்தி லேயழகு—சக்தி
மூண்டு ததும்புதம்மா !—ஆத்ம
ஞானம் பிறந்துவிட்டால்—அது
நல்லொளி யாகுமம்மா ! 4

—யோகி சுத்தானந்த பாரதியார்

ஆசிரியர் வரலாறு: ஆசிரியர்—யோகி சுத்தானந்த பாரதியார் (இயற்பெயர்—வேங்கட சுப்பிரமணியம்), பிறப்பிடம்—சிவகங்கை. 1897இல் பிறந்தார்.

அருஞ்சொற்பொருள் :

1. மூடி - மறைந்து, கதிர் - சூரியனது ஒளி, பரிமளித்தல் - மணம் வீசுதல் (இங்குப் பரவுதல்.)

2. சிந்தனை - எண்ணம், தேங்கி - நிறைந்து, பந்தனை - கட்டு.

3. பார் - பூமி, பொலிவு - அழகு.

4. மோனம் - மௌனம், மூண்டு - மிகுந்து.

## 2. சிலேடை

(நெல்லைச்சிலேடை வெண்பா)

மல்லற்பூஞ் சோலையினும் மள்ளருழு பண்ணையினும்
நெல்லிக்காய் மேன்மையுறும் நெல்லையே—வெல்லற்காம்
வேலேறு கைக்குமரன் வேழமுகன் தந்தைவெள்ளை
மாலேறு கைக்குமரன் வாழ்வு. 1

கூர்செல் வருஞ்செல்வம் கூட்டுபொரு நைப்புனலும்
நேர்செம் பியனண்ணும் நெல்லையே—தேர்பல்
விதநோன் புணைதருவார் வெம்பவநீர் நீந்தப்
பதநோன் புணைதருவார் பற்று. 2.

—வெ. பா. சுப்பிரமணிய முதலியார்

திருநெல்வேலியில் எழுந்தருளிய நெல்லையப்பர் மீது பாடப்பட்ட சிலேடைப் பொருளமைந்த வெண்பாக்களாலாகிய நூல்.

ஆசிரியர்—வெ. பா. சுப்பிரமணிய முதலியார், பிறப்பிடம்—வெள்ளகால், காலம்—கி. பி. 1857 முதல் 1946 வரை.

அருஞ்சொற்பொருள் :

1. மல்லல் - வளப்பம், பண்ணை - வயல், ஏறு - தாங்கிய, குமரன் - முருகன், வேழமுகன் - விநாயகன், வெள்ளைமால் ஏறு உகைக்கும் - திருமாலாகிய வெண்ணிற விடையில் ஏறிச் செலுத்தும்.

சிலேடை : நெல்லிக்காய் மேன்மையுறும். சோலையில், நெல்லிக்காய் மேல் மை உறும்—நெல்லிக்காயின் மீது மேகம் பொருந்தும். பண்ணையில், நெல் இக்கு ஆய் மேன்மை உறும்—நெல் கரும்பைப் போன்று உயர்ந்து வளரும்.

2. கூர் - மிகுந்த, கூட்டு - பெருக்குகின்ற, பவநீர் - பிறவிக்கடல், சிலேடை : செம்பியனண்ணும் செல்வர் - செம்பியன (நேர்) அண்ணும் - சோழனுக்குச் சமமாக விளங்கும். பொருநைப் புனல்—நேர் செம்பு இயல் நண்ணும் - தாமிரத்தின் சத்துப் பொருந்தியிருக்கும். நோன்புணை தருவார்—நோன்புள் நைதருவார் - விரதங்களில் உடலை வருத்துவார். நோன்புணை தருவார் - வலிமையான தெப்பத்தைத் தருவார்.

## 3. கைத்தொழில்

மண்ணெ டுத்துக் குடங்கள்செய் வீரே !
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே !
உண்ணக் காய்கனி தந்திடு வீரே ;
உழுது நன்செய்ப் பயிரிடு வீரே !
எண்ணெய் பால்நெய் கொணர்ந்திடு வீரே !
இழையை நூற்றுநல் ஆடைநெய் வீரே !
விண்ணில் நின்றெமை வானவர் காப்பார் !
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே !

—பாரதியார்

அருஞ்சொற்பொருள் :

மனை - வீடு, நன்செய் - விளை நிலம், இழை - நூல், ஆடை - துணி, விண் - தேவருலகம், பார்மிசை - பூமியில்.

## 4. முரசு

அன்பென்று கொட்டு முரசே !—அதில்
ஆக்கம்உண் டாமென்று கொட்டு ;
துன்பங்கள் யாவுமே போகும்—வெறுஞ்
சூதுப் பிரிவுகள் போனால். 1

உடன்பிறந் தார்களைப் போலே—இவ்
வுலகில் மனிதரெல் லாரும் ;
இடம்பெரி துண்டுவை யத்தில்—இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர் ? 2

—பாரதியார்

அருஞ்சொற்பொருள் :

1. ஆக்கம் - செல்வம், சூது - வஞ்சனை.
2. வையத்தில் - உலகத்தில்.



# SELVAN SENTAMIL VACHAKAM

## BOOK VI

AUTHOR :
RAMPOLO MASCARENHAS, M.A.

EDITOR :
MAHAVIDWAN M. V. VENUGOPAULA PILLAI

JEGASELVAN & CO.,
PUBLISHERS
NAGERCOIL : : TIRUCHY



[*Price Rs.* 1·40